அன்பு மலர் - கஉ




# திருநூல்

அல்லது

# தூய வாழ்வு

## (THE GOSPEL OF PURE LIFE)

சுவாமி சுத்தானந்த பாரதியார்

இயற்றியது




அன்பு நிலயம்

இராமச்சந்திரபுரம்

1938



[விலை ஒரு ரூபாய்

# பதிப்புரை



எமது நிலயத்தின் கஉ-வது அன்பு மலரை இறைவன் திருவடியில் வைத்து வணங்குகிறோம். திருநூலின் சில மலர்கள் கோலாலம்பூர் மாசி அவர்களால் வெளியிடப்பெற்றன. இந்த நூலில் இன்னும் பல புதிய திருமலர்கள் இணைக்கப்பெற்றுள் ளன. இப்புதிய திருநூலை ஆர்வமுடன் வெளியிட்டு எமக்குதவிய பேரன்புத் திருவாளர் பிச்சப்பா சுப்பிரமணி யஞ் செட்டியார் அவர்களுக்கு எமது நன்றியைத் தெரிவிக் கிறோம். இவர் அரிய பொதுநலச் செல்வர். உண்மையான தமிழன்பர். சமூகமுன்னேற்றத்திற்காகப் பல அரிய தொண்டு களைச் செய்திருக்கிறார். தமது சொந்தவூரான அமராவதி புதூரில் இவர் ஒரு காந்தி வைத்தியசாலையும், காந்தி பள்ளிக் கூடமும் நிறுவிப் பல்லாண்டுகளாக அரிய பணி செய்து வரு கிறார். இவர் நல்லெண்ணங்கள் இறைவன் அருளால் வெற்றி பெறுக !

இவ்வரிய நூலை விரைவாகவும், சுத்தமாகவும், அழகாகவும் அச்சிட்டுதவிய சாது அச்சுக்கூடத் தலைவர் - திருவாளர் - திரு. வி. உலகநாத முதலியார் அவர்களுக்கு எமது நன்றி யைச் செலுத்துகிறோம். சாது அச்சுக்கூட வேலையில் ஒரு தனியழகும் கலையும் பொலிகின்றன. தமிழார்வங் கொண்ட எங்கள் பணிக்குச் சாது அச்சுக்கூடத்தார் உதவி என்று மெய்துமாக !

இவ்வரிய திருநூல் மனித வாழ்வைத் திருவுறுத்தும் உயர்ந்த நினைப்புகளுடன் பொலிகிறது. இவை சுவாமி சுத்தா னந்த பாரதியார் அவர்களின் பிஞ்சிளம் எண்ணங்கள். மாந் தர் துயர்களுக்கும் பாபங்களுக்கும் காரணமான வறுமை,

மடமை, அடிமைப்பிணிகளைத் தீர்த்துச் சுத்த—முத்த—சமத்வ வழி காட்டுவதிலேயே ஆசிரியர் கண்ணுங் கருத்துமாக உள்ளும் புறமும் வாழ்ந்து வந்திருப்பது, அவரது சொற்களினின்றும் நடையினின்றும், நன்கு புலனுகிறது. இத்திருவாக்குகள் பெருகிய நோக்கங் கொண்ட எளிய, இனிய, தூய, சுதந்திர, ஸமரஸ வாழ்விற்கு வழி காட்டுவன. இதன் ஒவ்வொரு வாக்கியமும் பன்முறை சிந்தனைக்குரியது. இத்தகைய அரிய, பெரிய நூல்களை மென்மேலும் வெளியிட்டு எம்மாலான தமிழ்ப்பணி புரிய இறைவன் அருளும், அன்பர் ஆதரவும் துணை தருக !

இராமச்சந்திரபுரம்<br>1938. | அன்பு நிலயத்தார்.



# அணிந்துரை

இறை கட்டில்லாதது. உயிர் கட்டுடையது. உயிரின் கட்டை நீக்கித் தன்னைப்போலாக்க இறை அதற்கு உடலையும் உலகையும் அருள்கிறது. உடலைக்கொண்டு உலகிடை வாழ்ந்து விடுதலை பெறவேண்டுவது உயிரின் கடமை.

விடுதலைக்கென்று இறையின் அருளால் கிடைக்கப்பெற்ற உலக வாழ்வைத் துறக்க உளங்கொள்வது அறியாமை. அஃது இயற்கைக்கு மாறுபட்டதுமாகும். இறையின் கொடையாக உள்ள உலகிடை வாழ்ந்துகொண்டே உலகை இறை மயமாகக் காண்டல் கூடும்.

உலகம் இறை மயமாக விளங்குகிறது. ஆனால் அது தொடக்கத்தில் மாயாமயக் காட்சியளிக்கும். அக்காட்சி இறை மயமாகப் புலனாகும் வழியில் வாழ்வு நடாத்தல் வேண்டும். இறை, மாயை என்பன வாழ்வு நிலையைப் பொறுத்து நிற்பன வாம்.

அப்பர் இவ்வுலகில் உடலுடன் வாழ்ந்தபோதே, 'எந் நாளும் இன்பமே துன்பமில்லை' என்றருளினர். நம்மாழ்வார் இம்மண்ணுலகில் வாழ்ந்த காலத்திலேயே "அருநா கவையுநீ யானால்......' என்றருளலானார். "பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே மற்றாரை யுடை யேன்" எனவரூஉம் வன்றொண்டர் மொழியும் ஈண்டுக் கருதற் பாலது.

வாழ்வுத் துறைகள் பல. அவைகளை இருகூறு படுத்த லாம். ஒன்று அகம்; மற்றொன்று புறம். இரண்டும் தொடர் புடையன. புறம் இன்புற்றிருப்பின் அகமும் இன்புற்றிருக்கும். அது துன்புறின் இதுவுந் துன்புறும்.

அகம், ஒருவனும் ஒருத்தியும் கூடி அறம் வளர்த்து இன் பம் நுகர்தற்குரியது. புறம், கல்வி-தொழில்-பொருள்-அரசு

முதலியவற்றைக் கொண்டது. ஒருவனும் ஒருத்தியும் கூடி அறம் வளர்த்து இன்பம் நுகர்தற்குக் கல்வி, தொழில், பொருள், அரசு முதலியன வேண்டற்பாலன.

புறத்தின் பாற்பட்ட கல்வி தொழில் முதலியன நன்கு நிலவுதற்கு அரசு நன்முறையில் இயங்குதல் வேண்டும். புறத்துக்கு அரசு உயிர் போன்றது. அரசு நன்கு இயங்கின் கல்வி, தொழில், பொருள் முதலியன வளம்பெறும். 'அரசு எவ்வழி அவ்வழிக்குடிகள்' என்பது பழமொழி. இத்தகைய அரசு கோணின் எல்லாம் கோணுமல்லவோ ?

நம் நாடு ஒருபோது நன்னிலையிலிருந்தது என்று சொல்லப்படுகிறது. காரணம் என்ன ? அந்நாளில் புறப்பொருள் நிலை செழுமையுற்றிருந்தமையே யாகும். புறப்பொருள் செழுமையுற்றுள்ள விடத்தில் அகவாழ்க்கை நலமுறும். அங்கே கலைகளும் வளரும். கலை வளர்ச்சி, உலகை இறைமயமாகப் புலப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது.

இந்நாளில் நாடு பல வழியிலும் பாழ்பட்டிருத்தல் கண்கூடு. காரணம், புறவுரிமை அதாவது தன்னாட்சி இழந்தமை என்று எவருங் கூறுவர். புறவுரிமை அற்றவிடத்தில் பொருள் வளம் சுருங்குதல் இயல்பு. நாட்டின் உரிமையிழப்பு, அக இன்ப நுகர்ச்சியைக் குலைத்துள்ளது.

இவ்வேளையில் மக்கள் முயற்சி எவ்வழியில் பெரிதும் செல்லுதல் வேண்டும் ? தன்னாட்சி பெறும் வழியில் என்று விளக்கவேண்டுவதில்லை. அம்முயற்சி ஒரோவழி ஆங்காங்கே நடைபெற்று வருகிறது.

முயற்சி நெறி ஒன்றாயினும் துறைகள் பலபட்டிருத்தல் வேண்டும். பலபட்ட துறைகளுள் ஒன்று - சிறந்த ஒன்று - உரிமை வேட்கையை எழுப்பத் தக்க நூல்களையாத்து வெளியிடுவது. அந்நூல்களுள் மெய்வழிகாட்ட வல்லன அறவோரால் யாக்கப்படுவனவாம்.

பண்டை நாளில் மன்னராட்சியே பெரிதும் நடைபெற்றது. மன்னர், அறவோர் ஆணைவழி நின்றே ஆட்சி செலுத்

தினர். அதனால் ஆட்சிமுறை கறைபடாமல் நிகழ்ந்து வந்தது. இடைநாளில் ஆட்சி முறையில் அறவோர் தொடர்பு அற்றுப் போயிற்று. அன்று தொட்டு உலகம், கலகம் - கொள்ளை - கொலை முதலிய கொடுமைகட்கு இரையாகியே வருகிறது. இக்கால நிலையைப் பண்படுத்துதற்கு அறவோர் துணை தேவை.

அறவோர் என்போர் உலகியலினின்றும் விலகி ஒதுங்கி நிற்போர் என்று சில இடங்களில் பேசப்படுகிறது. அது தவறு. உலகியலினின்றும் விலகி ஒதுங்குவோர் அறவோராகார். உலகியலுடன் தொடர்பு கொண்டு தமது நலங் கருதாது மற்ற உயிர்நலங் கருதித் தொண்டு செய்வோரே அறவோராவர். 'அந்தணரென்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்-செந்தண்மை பூண்டொழுகலான்' என்பது திருவள்ளுவர் வாய்மொழி.

நமது நாட்டில் இந்நாளிலும் பலதிறப் பணியில் ஈடுபட்டுள்ள அறவோர் சிலருளர். அவருள் ஒருவர் **சுவாமி சுத்தானந்த பாரதியார்.** சுவாமி சுத்தானந்த பாரதியார் புதுவையிலுள்ள அரவிந்த நிலயத்தில் வீற்றிருந்துகொண்டு காலத்துக்குரிய சேவை செய்து வருகிறார். அவர்தம் திரிகரணங்களும் தெய்வத்தன்மை வாய்ந்த திருப்பணியிலேயே ஈடுபட்டுக் கிடக்கின்றன. அப்பெரியார், தியானத்தால் - உரையால் - பாட்டால் - செயலால் - நாட்டைத் தட்டி எழுப்பி வருகிறார். நாடும் எழுச்சிபெற்று வருகிறது.

அறவோராகிய சுத்தானந்த பாரதியாரிடமிருந்து மலர்ந்துள்ள நூல்கள்பல. அவைகளுள் ஒன்று, இத் 'திருநூல்'. 'திருநூலி'ல் பல 'திரு'க்கள் விளங்குகின்றன. அவை யாவும் காலத்துக்குரியன.

'திருநூல்' ஓர் அழகிய தமிழ்க் கோயிலெனத் திகழ்கிறது. இந்நாளில் நாட்டுக்கு வேண்டப்படும் நறும் பொருள்களால் அக்கோயில் ஆக்கப்பட்டிருக்கிறது. அகத்துக்குரிய பொருள்களும் புறத்துக்குரிய பொருள்களும் நிரலே அரண்களாக எழுப்பப்பட்டிருக்கின்றன. வீர எழுச்சி கோபுரமாக எடுக்கப்

பட்டிருக்கிறது. முயற்சித் துறைகள் பற்பல உறுப்புக்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன. கோயிலின் உள்ளே ‘ தியான மலர் ’ என்னுந் தெய்வம் காட்சி வழங்குகிறது. அக்காட்சியில் தெய்வ மணமும், உரிமை வேட்கையும், வீர உணர்வும், அருளறமும், இன்னபிறவும் விளைகின்றன. அவ்விளைவு விடுதலை நல்குவதாகும்.

‘திருநூற்’ கோயிலில் புகுந்து வழிபாடு செய்வோர் உள்ளத்தில் உரிமை வேட்கை நேரிய வழியில் எழுதல் ஒருதலை ; அவர்தம் நாட்டம் தன்னாட்சியில் புகுதல் உறுதி ; அவர்க்கு உலகம் இறை மயமாகத் தோன்றுதல் திண்ணம். இத்தகைய அறிவுக் கோயிலைத் தந்த பெரியார் வாழ்க ; நீடு வாழ்க.

சுத்தானந்த பாரதியாரின் உரைநடை பலவழியிலும் போற்றற்குரியது. அது தமிழன்னைக்கு ஆறுதலளிப்பது ; கிளர்ச்சி தருவது. நூலின் உள்ளுறை அறமுடையது; பொருளுடையது ; இன்பமுடையது.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த சீரிய நூலை நாட்டுக்கு வழங்கிய அறவோர் சுத்தானந்த பாரதியார்க்குத் தமிழ்நாடு எவ்வழியில் கைம்மாறு செலுத்தப்போகிறது ? அவர்தம் நூலைப் பயின்று, அதன் உள்ளுறை வழி நின்று, வாழ்வு நடாத்தி, நாட்டைப் பண்டைநிலைக்குக் கொணர ஊக்கங்கொண்டு உழைக்கும் வாயிலாகக் கைம்மாறு செலுத்துவதாக.

பாரதியார் வாழ்க ; அவர்தம் நூல் வாழ்க ; அறம் வெல்க; தமிழ் வெல்க.

இராயப்பேட்டை<br>
சென்னை<br>
23—4—1938

திரு. வி. கலியாணசுந்தரன்.

# பொருளடக்கம்

# வாழும் வகை



உடலமே கோயி லாக வுள்ளத்தான் கடவு ளாகத்
திடமன மிருக்கை யாகத் தியானமே விளக்க மாகச்
சுடர்மல ரன்பே யாக நிவேதனந் தூய வாழ்வாய்த்
தடம்புவி மகிழ வேண்டிச் சதாகாலம் பூசை செய்வோம்.

மலரினிலே மதுவுண்ணும் வண்டைப் போலே,
  மண்ணுலகில் வாழ்வின்ப முண்ண வேண்டும்.
உலகினரை வருத்தாமல், யாசி யாமல்
  உடையுணவுத் தேவைகளுக் குழைக்க வேண்டும்.
மலர்மணக்க மங்கலநன் மனை யெழுப்பி,
  வள்ளுவர்போல் வாழ்வாங்கு வாழ வேண்டும்.
கலகமிலாக் கட்டில்லாக் கவலை யில்லாக்
  களிப்புடனே யமரநிலை காண வேண்டும். 2

பசித்தீக்குச் சுசிருசியா யுண்ண வேண்டும் ;
  பருகுநீர் சுத்தமா யிருக்க வேண்டும்.
புசித்ததனைச் சீரணித்தே புசிக்க வேண்டும் ;
  பொதுமையுறப் புவிப்பொருளைத் துய்க்க வேண்டும்.
வசிக்குமிட மியற்கைவளம் பொலிய வேண்டும் ;
  வாழ்வெல்லாந் தவயோக மாக வேண்டும்.
விசித்திரமாம் ஐம்பூதப் பஞ்ச ரத்தில்
  விளையாடும் பைங்கிளியே விளம்பக் கேளாய்! 3

கடலைகனி காயரிசி, பருப்பு முண்டு,
  கட்கொலையூன் காமவெறித் தீமை யின்றி,
நடலையிலா நடையுடனே நாலு பேர்க்கு
  நலமாக ஞாலத்தில் வாழ வேண்டும் ;

உடலையொரு கோயிலென வுன்ன வேண்டும்
 உடையானை யுள்ளாரக் கலக்க வேண்டும்.
அடலரிய புலன்களைநன் கடக்க வேண்டும்.
 ஆனந்த வூற்றினையுள் ளகழ்ந்து காணாய் ! 4

யார்வாழ்வுஞ் சதமில்லை ; யுள்ள மட்டும்
 அறிந்துதனை யன்புமிகப் பெருக்கி நாளும்
ஊர்வாழ, வுயிர்வாழ, வுலகு வாழ
 வுற்றார்பெற் றார்வாழ வுதவ வேண்டும்.
பேர்புகழின் வேடுவனாய்ப் பேது றாமல்,
 பிறந்தவினை முடித்தினிமேற் பிறவா வண்ணந்
தேர்ந்துசரி யைகிரியை யோக ஞானத்
 திருநெறியா லருட்சித்தி சேரவேண்டும். 5

வீணான சடங்குகளைப் பெருக்க வேண்டாம்,
 வெவ்வேறு சாமிகளால் விளைபோர் வேண்டாம் ;
மாணாத சாதிமத மயக்கம் வேண்டாம் ;
 மனமலைந்து புறந்திரியும் வழக்கு வேண்டாம் ;
ஆணாகிப் பெண்ணாகி யாவு மாகி
 அகிலமெலாம் ஒன்றும்சுத் தான்ம நேயம்
பூணாது பொய்வேடம் புனைய வேண்டாம் ; [ளே.
 பொதுப்பொருளுன் உட்பொருளே புணர்ந்துகொள்

நன்மறைகள் சொல்லுநடுப் பொருளாம் ; வேத
 நாதவிந்து கலைகடந்த சத்தாம்; என்றுந்
தன்மயமாந் தன்னிலைநின் றருளா லைந்து
 சகத்தொழில்செய் தாக்கற்ற தனியாந், தன்பால்

அன்புறுதி கொள்ளறிஞர்க் கமுதாம் ; சச்சி
 தானந்தக் கனிரசமாம் அருந்து வோர்க்கே ;
இன்பவொளி காட்டியொளிர் இரவியே யாம்
 இதயத்தில் அகமகமென் றியங்கு மொன்றே. 7

எழுத்தாலும் வாயாலும் இயம்பொணுதாம் ;
 எள்ளேமலே யாக்கியினம் பிரித்துப் போர்செய்
கொழுத்தமன மாயத்தை யொழித்த பேர்க்குக்
 குளிரருவிப் பாட்டொலிக்குஞ் சக்திக் குன்ரும்.
அழுத்தமாய்ச் சொல்லுகிறேன் யானு நீயும்
 அகிலமெலா மப்பொருளே யறிந்தா லஃதை
வழுத்தவொரு சொல்லுண்டோ ? வரைக டந்த
 மௌனனங் தக்கடலே வாழ்வு கண்டாய் ! 8

பாரால யத்தினிலே பரந்த தோற்றம்
 பரமனரு ளாடலெனப் பாப்பான் ஞானி;
தாராள மாயன்பு செய்வான் ; ஆண்பெண்
 சக்திசிவ னெனக்காண்பான் ; அனைத்தி னுக்கும்
வேரான வொன்றினிலே நின்று வாழ்வின்
 விரிவெல்லாம் அதன்கிளேயாய் விளங்கக் காண்பான் ;
சோராது பணிசெய்துந் தொந்த மில்லான்
 சுத்தமுத்த சமரஸஸங் மார்க்கத் தோனே.

—சுத்தானந்த பாரதி





"எல்லா வுலகிற்கும் இறைவன் ஒருவன்
எல்லா வுடலு மிறைவன் ஆலயமே"

உ

# திருநூல்

அல்லது

# தூய வாழ்வு

## 1. வாழ்வுத் தோட்டம்

**வா**ழ்வுத் தோட்டம் எல்லையற்றது. இதில் வானளாவிய வெற்றி மன்னர்போல நிவந்து கனிகுலுங்கும் மரங்கள் ஒருபுறம் உள்ளன. மனவுறுதியில் பற்றியேறும் கடவுளன்புபோலப் பூங்கொடிகள் ஒருபுறம் ஓடுகின்றன. சிறுசிறு பலநிறப் பூச்செடிகள் பாத்தி பாத்தியாகவுள்ளன. பசும்புற்கள் தரையை மரகதமணி போல் அலங்கரிக்கின்றன. இத்தோட்டத்தைப் புல்லும் அழகு செய்கிறது; தென்னை வாழை மா பலாக்களும் பயனுற அழகுசெய்கின்றன. இறைவனே! உலகம் நீ திருவிளையாடல் செய்யும் எல்லையற்ற தோட்டம். இதில் பலவகையான ஜீவப்பயிர்கள் வளர்கின்றன. விதைத்து, முளைத்து, செழித்து, கிளைத்து, பூத்துப் பழுத்து உதிர்ந்து மீண்டும் மரபை விதையூன்றி வளர்த்து வளர்த்து இந்த வாழ்வுத் தோட்டம் நிலைநிற்கிறது. பிள்ளையாகி, இளமையாகி, வாலிபத்தை நுகர்ந்து முதிர்ந்து மரபைப் பின்விடுத்து ஐம்பூதக் கூட்டையுதறிச் செல்கிறது ஜீவன். இத்தோட்டத்தில் எல்லையற்ற ஜீவப்பயிர்கள் இருப்பினும் அனைத்தும் வாழும் சீவ

சக்தி ஒன்றுதான். சக்தி முதல்வனே! எல்லையற்ற வேறுபாடுள்ள இவ்வுயிர்களில் தன்மயனான, ஆன்ம மயனான உன்னையே காண அருள். புல்லின் பசுமையும் மாங்கனியின் இனிமையும் உனது இயற்கையின் அற்புதமே என்றுணர அருள். இவ்வாழ்வுத் தோட்டத்தில் கனிகளும் உள்ளன; முட்களும் உள்ளன. முட்களை வேலியிட்டுக் கனி விளைக்கிறோம். இறைவனே! உலகிலுள்ள எப்பொருளையும் அற்பம் என்றெண்ணாது அததற்கு ஒரு நற்பயன் உள்ளதைக் காண அருள். மனிதன் நெல்லைத் தின்று வளர்ந்தால், மாடு புல்லைத் தின்று வளர்கின்றது. நெல்லும் புல்லும் அததனிடத்திற் பெருமை பெற்றனவே. இறைவனே! எதையும் இகழாது உனது அற்புதப் படைப்பினங்களைச் சமவிழியாற் காண அருள். வாழ்வுத்தோட்டம் மேடுபள்ளமுள்ளது; பல உயிரினங்களைக் கொண்டது. இதில் நல்ல நன்னிழற்பாதைகளும் உண்டு; கரடுமுரடான முட்புதர்க் காடுகளும் உண்டு. பகுத்தறிவென்னும் விழியளித்திருக்கிறாய். அதைக்கொண்டு நல்ல நெறியில் நடந்து, அதோ நின்று எம்மை உள்ளிருந்து கூவியழைக்கும் உனது திருவடியைச் சேரத் துணைசெய். உனது திருவருட் சுடரைக் காட்டி எம்மை நடத்து. இறைவனே! நீ எமது இதயத்தில் வாழ்கிறாய். அதனால் நாங்கள் உடல்கொண்டு உலகில் வாழ்கிறோம். உன்னை மறவாமல், உனக்கே எங்கள் நினைப்பும், மொழியும், செயலும் வேள்வியாகும் தூயவாழ்வை அருள். இந்த உடல் உனது கோயில். இதைக் காப்பாற்றப் போதிய உடையுணவுத் தேவைகளை ஒரு ப்பாபமற்ற தொழிலால் அடைந்து, மீதி நேரமெல்லாம், உன்மயமான உலகிற்குதவி, இதய வாசியான உன்னுடன்

கலந்து எங்கள் வாழ்வைச் சுத்த முக்த சமத்வ யோக மாக்க அருள்.

* * *

ஓம் பராசக்தி! கோடி சூர்யப்பிரகாசமாய் எங்கும் விளங்கி, எல்லாவற்றையும் விளக்கும் அருட்சுடரே! உலகம் உனது திருவிளையாட்டு. எல்லாவற்றிற்கும் காரணமான தெய்வ சக்தியே! ஐந்தொழிற்கும் இறைவியே! மழையானது கடலினின்றும் பெய்து கடலிலேயே சேர்வது போல், உன் கருணையினுற் பிறந்த ஜீவன் உன் கருணையிலேயே அடங்கட்டும். மனோ வாக்கு உதாரணங்களிலடங்காத அகண்டாகாரி! உன் நினைப்பு மூச்சினும் அதிக முக்கியமானது. காற்று, நீர், தீ, புவி முதலிய இயற்கை வியப்புகளை உண்டாக்கின கையே! எங்கும் பரவி யுலவும் காலே! சர்வசாட்சியாய் விளங்கும் கண்ணே! எல்லாவற்றையுங் கேட்குங் காதே! நினைப்பிற் படைக்கும்நெஞ்சே! அருள்பொழியும் வாயே! நீயே என் செய்கைகளுக்கெல்லாம் சாட்சி! உலகம் உன் வீடே! உலகோர் உன் மயமான கோயில்களே. உன் கண்கள் எங்குமுள்ளன. உன் கண்முன் தீயவை செய்யாதொழிய அருள். உன் காதுகள் அணுக்கள் தோறுமுள்ளன. ஆதலின் தீய சொற்களைப் பேசாதிருக்க அருள். என் வாயையடக்கி, மனதைத் திறந்தருள். என் உட் கண்ணைத்திறந் துன்னொளியைக்காட்டிய பராசக்தி! என் முறைகளைக் கேட்பாயாக:—

(1) என்று முன்னை மறவாது உன் சக்தியால் தூண்டப் பட்டு நன்மை புரிய அருள்.

(2) எனக்காகவே வாழாது பெரிதும் பிறர்க்காகவே நல் வாழ்வு வாழ அருள்.

(3) என் மன, வாக்கு, காயம் எப்போதும் தூய்மையாக இருக்க அருள்.

(4) என் மனம் தீமை நினைக்கையில், கோர ரூபத்தோடு உன் சந்நிதியைக் காட்டித் தீமைப் பேயைத் துரத்து.

(5) உண்மை, பொறுமை, அன்பு, இன்சொல், அஹிம்சை, சமரசம், ஆத்மஞானம், தியாகம், சுயேச்சை, களிப்பு முதலிய நற்குணங்கள் எனக்கு அவயவங்களாகட்டும்.

(6) உடை, உணவு, இருக்கைகளைப் பாபமற்ற தொழிலால் உன் குழந்தைகளான நாங்கள் அடைய அருள்.

(7) பாபங்களுக்கு மூலமான வறுமையும் மடமையும் எங்களை அணுகாதிருக்க அருள்.

(8) வாழ்வை நல்ல தொண்டில் செலுத்த அருள்.

(9) எல்லாச் செய்யல்களிலும் துணையிருந்தருள்.

(10) உன் பெயரும், படைப்பும், அருளும் அனைத்தும் வாழி!

---

## 2. வேதம்

பராசக்தி! உன் உண்மையை அறிவிக்கும் சொற்களே வேதம். நீ புலனைக்கடந்த சோதி; அழியா ஆனந்தம்; எல்லாவற்றிற்கும் ஆதி; ஆதியந்த மற்றவள்; எவற்றிலும் நிறைந்த பராசக்தி; எல்லாம் வல்ல ஒருத்தி, சத்யரூபி என்றதே வேதம் கண்ட மெய். உண்மையினும் உயர்ந்த வேதமில்லை; அறத்தினும் உயர் செயலில்லை. அன்பும் சமத்வமும், தியாகமும் ஆத்மஞானமுமே வேதச் சுவை. இவற்றின் விரிவே வேதம். பொய், இன்னா, கோபம், பொறாமை முதலிய இன்னபிற எல்லா வேதங்களாலும் கண்டிக்கப்படுவன. நாட்டிற்குத் தக்கபடியே கடவுள் தன் தூதனையனுப்பி, வெவ்வேறு பெயருடன் இவ் வுண்மைகளை ஈந்தார். எல்லா வேதங்களும் புனிதத் தன்மையுள்ளவையே. இந்தியரின் வேதம், தெய்வத்தோடு இரண்டறக் கலந்த பிரம்ம சுவரூபிகளாலாக்கப்பட்

டது. சாந்தம், பந்த நிவர்த்தி, மாயை விலக்கல், ஆன்ம சக்தி முதலியவையே இதன் உபதேசம். பாரதரின் வேதம் அனுதியானது. சங்கரர், இராமானுஜர், மத்வர், சைதன்யர், ஸ்ரீராமகிருஷ்ணர், வள்ளுவர், மணிவாசகர், அப்பர், திருமூலர், ஔவை, நம்மாழ்வார் முதலியோர் இதை நிலைநிறுத்த அவ்வப்போது உதித்தனர். இயம நியம சாதனங்களான அன்பு, பொறை, இன்சொல், அகத்தூய்மை, பந்த நிவர்த்தியையும், நல்வாழ்வாலடையக்கூடிய நிர்வாணத்தையும் புத்தமதம் கூறும். அன்பையும் அஹிம்சையையும் சமண மதம் முக்கியமாக்கிக் கொண்டது. கிறிஸ்தவ மதமோ பகைவனுக்கும் அன்பீயும் பரிவையும், தன்உடலும் ஆவியும் போயினும் உண்மைவழி நிற்கும் உறுதியையும், தன்னுயிர்போல் எவ்வுயிரையும் பாவித்தலையும், எளிய வாழ்வையும் வெகு தெளிவாயுரைக்கிறது. திருக்குரானே, அன்புறுதி, அடைக்கலம், உண்மை, இறை வணக்கங்களால் மனது தூய்மையுறும் வழியை அழகாயுரைக்கிறது. ஆதலின் எல்லா வேதங்களும், உண்மை, சுயேச்சை, நன்மை, சமரசம், பரோபகாரம் இவற்றையே உரைக்கின்றன. தீமை, பந்தம், ஆசை, பொய் இவற்றை எல்லா வேதங்களும் கண்டிக்கின்றன. எல்லா வேதமும் கடவுளின் திருவாக்கே. மனோ வாக்குக் காயசுத்தியே வேத சாரம். அதுவே ஆனந்தம், உண்மை, பகையாமை, பொறுமை, இன்சொல், அஹிம்சை, பரோபகாரம்—இவை எல்லா வேதங்களுக்கும் சம்மதமானவை. பற்றே துன்பம்; அதை யொழித்தலே இன்பம். தன்னயங் கருதாத் தொண்டே மோக்ஷ சாதனம். பற்றொழிப்பதே சாந்தம் என்றறியுங்கள். தூய்மையுறுங்கள்!

## 3. படைப்பு

உலகன்னையே! உன் சக்தியால் இறைவன் உலகைப் படைத்தான். உன் ஆடரங்கமே உலகு. மக்களெல்லாம் உன் குழந்தைகள். உன் ஆனந்தத்தினின்றே நாங்கள் படைக்கப்பெற்றோம். நீயே மூலப்பிரகிருதி. உன்னிடமிருந்தே கல்பமும் பிரளயமு முண்டாகின்றன. உன் எண்ணமே உலகின் படைப்பு. உன் ஓங்காரமே உலகின் நிறைவு. உன் ஓங்காரத்தினின்றே ஒளி பிறந்தது. அதுவே சூரிய சந்திர நட்சத்திரங்களாவன. சூரியனால் மழையுண்டாயிற்று. மழையால் பூமி உயிர்த்தது. பூமியினின்று அன்னம் உண்டாயிற்று. அன்னத்தினின்று ஜீவகோடிகளுண்டாயின. அன்னசாரமே விந்து. புல், பூண்டு, செடிகொடி, மரம் முதலிய மூலிகைகள்; பஞ்சு, பவழம், நத்தை, முத்து, புழு பூச்சி, நீர்வாழ்வன, ஊர்வன, பறவைகள், மிருகங்கள், மனிதன் முதலிய இவற்றை யெல்லாம் நீயன்றோ உண்டாக்கினை! மலை, கடல், வனம், ஆறு, சூரியன் முதலான இயற்கை யற்புதங்களைப் படைத்தவளும் நீயே. உன் கட்டளையினாலேயே குளிர்காற்று உஷ்ணமான விடத்தையும், உஷ்ணக்காற்று குளிர்ச்சியான தேசத்தையும் நோக்கியடித்துச் சுழல்கிறது. உன் ஆணையினாலேயே, சூரியன் கடலினின்று நீரை ஆவியாக்கி, மேகமாக்கி மழை தருகிறான். நீ ஒவ்வொன்றிற்கும் கொடுத்த சக்தியினாலேதான் எல்லாம் உண்டாகின்றன. எங்கள் வினைக்குத்தக்க பலனைக் கொடுக்கும் அரசீ! நீ எங்களுக்குள்ளே பிரியாதிருப்பதனால் நாங்கள் அறிகிறோம்; இல்லையேல் மூச்சு விடக்கூட எங்களுக்குச்செயலில்லை. நீயேஎங்கள் மூச்சு. உன்னை என்று இழக்கிறோமோ அன்றே எங்களையும்

இழக்கிறோம். எல்லாப் பிராணிகளையும் அறிவிற் சிறந்த மனிதன் கையில் ஒப்புவித்திருக்கிறாய். அவைகளுக்கு இதஞ்செய்தால் மனிதன் உன் கருணையை அடைகிறான்; அவைகளுக்குத் தீங்கு செய்தால் உன் தண்டனைக்குள்ளாகிறான். எரிமலையும், வெள்ளமும், இடியும் உன் கோபத்தின் அறிகுறிகளே! மழையும், தென்றலும், நிலவும், உன் கருணையின் அறிகுறிகளே! உலகம் உன் வீடே. அதில் நாங்கள் ஓர் அபசாரமும் செய்யாதிருக்க அருள். அதில் நாங்கள் சமத்வ புத்தியோடிருக்க அருள். ஒருவர் அன்னத்தை மற்றொருவர் அபகரித்துக் குவியாது, பரோபகார சிந்தையோடிருக்க அருள். கற்பத்திலும், பிரளயத்திலும் மாறாத சுயம்புவே! உன் கைகள் என்றும் வாழ்க!

---

## 4. உலகீர்

ஈசனிலங்கும்-நடமாடுங் கோயில்காள்! உங்களையே நீங்கள் அறியுங்கள்! உங்களுக்குள்ளிருப்பவன் தனக்குவமையிலான். அவனமருங் கோயில்களே நீங்கள். நீங்களிவ்வுடலல்ல. உங்களுக்குச் சாவும் பயமும் தீங்கும் ஒரு போதுமில்லை. நீங்களெல்லாரும் சகோதரர்; சமமான உரிமை பெற்றவர். இவ்வுலகு உங்களெல்லாருக்கும் பொதுவானது; சமமானது. நீங்கள் முழுச் சுதந்திரமுள்ளவர்கள்; ஒருவருக்கும் குடிகளல்ல. உங்களுக்குப் போதியமட்டும் உலகின் பயனை யனுபவிக்க உரிமையுண்டு. தன் தன் தேவைக்குமேல் சேர்ப்பவனே திருடன். தன் தன் தேவையளவு இடம்பமின்றி யனுபவித்தால் உலகில் குறைவேயிராது. சேர்த்து வைப்பதொன்றும் நம்முடன் வாராது. சேர்த்துவைக்க நாம்

உலகிற்கு வரவில்லை; கர்மத்தைக் கழிக்கவே வந்தோம். நமது உயிரை நிலை நிறுத்தவே யுண்கிறோம். உழைப்பால்உண்டு, தூயவினையால் வாழ்வைச் சுத்தப்படுத்தித் தெய்வத் தன்மையடைவோமாக ! உழுதுண்டு, நூற்று நெய்துடுத்தி, ஆசை, பொறாமை, பொய், இடம்பம் விடுத்து, தூயவாழ்க்கை வாழ்ந்து, பிறர்க்குதவி, அறவழி நின்று, அறவடிவான இறைவனைச் சேர்வோமாக. ஒவ்வொருவர் வாழ்க்கையும் ஒவ்வொரு நல்வினை நோக்கத்தைக் கொண்டது. வினையை அறிமின் ! நலன் செய்மின் ! ஒளிபெறுமின் !

---

## 5. தேசாபிமானம்

பராசக்தி ! எங்களை எவ்வளவு இன்பமான தேசத்திற் படைத்தாய் ! உணவிற்கும், உடைக்கும், மற்ற சுகங்களுக்கும் வேண்டியவற்றைத் தரும் உன் வடிவான எங்கள் தேசமாதாவிற்கு என்ன பணிகள் செய்தாலும் பதிலாகாது. எங்கள் துளித்துளி இரத்தத்திலும் பாரத தேவியின் அன்னமே சேர்ந்திருக்கிறது. எங்கள் உடல் பொருள் ஆவி மூன்றும் அவளுடைய தொண்டிற்கே உரியன.

எங்கள் தேசம் ஒருபெரிய வீடே. அதன் இறைவி கௌரி சங்கரத்திலிருக்கும் பாரததேவியே ! எல்லாச் சராசரங்களும் அவளுடைய புத்திரர்களே. இப்பெரிய குடும்பக்கவலை ஒவ்வொருவரையும் சேர்ந்ததே. வணங்கிய சிரத்துடனும் தொழுங் கைகளுடனும் தூய நல் வாழ்க்கையுடனும் பாரத தேவியின் சந்நிதியி லிருக்கின்றோம். இந்துக்கள், இஸ்லாமியர், கிறிஸ்தவர், யூதர், சீக்கியர், சோராஸ்திரியர், புத்தர், ஜைனர் முதலிய

எல்லா மதஸ்தருக்கும் அவளே பொதுத்தாய். அவளு டைய கருணை, சூரிய கிரணம் போல எங்கும் விரிந்தது.

சாந்தமும், ஆத்மசக்தியும், தியாகமுமே பாரத தேவி எங்களுக்குரீந்த அணிகலன்கள். அவள் அஹிம்ஸா தர்மத்தால் உலகின் சண்டைகளை யெல்லாம் தீர்த்தாள். நதிகளெல்லாம் அவளுக்கு அபிஷேகம் செய்கின்றன. ஒவ்வொரு நதியும், வனமும், மலையும், ஊரும், தெய் வத்தன்மை பெற்றனவே. பாரத நாட்டின் ஒவ்வொரு துளி மண்ணிற்கும் நமஸ்காரம்! ஏனெனில் அது மஹாத் மாக்களால் ஸ்பரிசிக்கப்பட்டது.

எங்கள் நாட்டை வறுமையும், மடமையும் அணுகா திருக்கட்டும். எங்கள் தேசக்கல்வியும், ஆத்ம சக்தியும், அஹிம்ஸா தர்மமும், சுத்தமதமும் எழில்பெற்று விளங் கட்டும். சாத்வீக வீரர் பெருகட்டும். அடிமைத் தளை கள் முறிந்து, பொடிந்தொழியட்டும் !

பாரததேவீ ! உன் வேதமும், பாட்டும், வளமும், விளைவும் நீடூழி வாழ்க ! உன் மக்கள் உலகிற்கு ஞான விளக்குகளாய் நீடூழி வாழ்க ! உன் மங்கள கானம் எங் கள் மனதில் என்றும் வாழ்க ! வந்தேமாதரம் !

---

## 6. வாழ்க்கை

நாம் உண்ணவும், உடுக்கவும், சேர்க்கவும், இடம் பங்கொண்டாடவும், போர் புரியவும், தீதிழைக்கவும், வீடுகட்டவும், நிலம்வாங்கவும், சிற்றின்பத்தில் ஆழ்ந்து அழியவும் உலகிற்கு வரவில்லை. நமது ஜீவநதி, கருணைக் கடலாகிய ஈசனிடமிருந்து உலகைச் செழிப்பிக்கவும், பிறர்க்குதவியே தன்னைத் தூய்மை செய்து, முடிவில்

ஈசனுடன் கலக்கவுமே வந்தது ; பாவமாகிய வனுந்தா மண்ணில் வற்றிப்போகவும், உவர்மண்ணில் பாயவு மல்ல. அறம், அன்பு, ஊனுடை, முயற்சி இவையே வாழ்வின் தேவை. அறநூலைத் தெளியுங்கள். ஒருகுடும் பத்திற்கு ஒரு செய்யுங் கிணறு, சிறு குடில், கலப்பை, இராட்டினம், இரண்டு உழவு மாடுகள் ஆகிய இவையே செல்வம். இவற்றுல் உடையுணவைப் போதியமட்டு மடையுங்கள். இவற்றிற்குமேல் சிறிதேனும் ஆசைப் படாதீர்கள். உங்கள் பேராசையால் உங்களைப் போன்ற மற்ற சகோதரர்கள் உணவின்றி வாடுகிறுர்கள். ஆயிரம் ஏழைகளிருக்கக் கூடிய பெரிய இடத்தை வளைத்து ஒரு வன் தன்னயத்திற்காக மாளிகை கட்டும் பாவத்தைச் செய்யாதிருப்பானுக ! ஒவ்வொருவனுக்கும் இருபதடி சதுரநிலம் போதுமானது. இதை உங்கள் உழு நிலங்களிலே அமையுங்கள். நீர் பாய்ச்சுவதும், உழுவதும், பயிர் செய்வதும், நூற்பதும், நெய்வ துமே உங்கள் முக்கியத் தொழிலாகட்டும். மற்ற நேரங்களை நூலாராய்ச்சி, உண்மைக்குழைத்தல், தியா னம், பரோபகாரம், பொதுஜன ஊழியங்களிற் செல விடுங்கள். அசத்தியமான வழியில், கோள் பொய் சொல்லி, தனக்குத்தகாத அடிமை செய்து, தீயோ ருக்கு ஊழியஞ் செய்து, நகை செய்வதிலும், மாளிகை கட்டுவதிலும், வஞ்சமாகப் பணம் சேர்ப்பதிலும், விலை யுயர்ந்த நாழிகையைச் செலவழிப்பவன் விலங்கே யாவன். ஒவ்வொரு நிமிஷமும் நல்ல காரியங்களிலேயே செல்லட்டும். நமது வாழ்க்கை ஒரு மணமுள்ள பூ. அது ஈசனுடைய திருவடிகளைச் சேரட்டும் ; உலகின் துர்நாற்

றத்தில் வீழ்ந்து வாடி மண்ணுக வேண்டாம். நாம் விடும் ஒவ்வொரு மூச்சும் நம்மை மரணத்தினருகே அடித்துக் கொண்டு செல்கிறது. ஒவ்வொரு மூச்சும் ஈசனுடைய தொண்டிலேயே செல்லும்படி வாழ்க்கையைத் தூய்மை செய்மின்!

## 7. தருமம்

தன்னையும் நல்வழியிற் செலுத்தி, பிறர்க்கும் நலந் தரும் நன்னெறியே தருமம். கடவுளுக்கும், மக்களுக்கும் நற்ருெண்டு புரிவதே அறவழி. மக்கள் கடவுளின் இடைவிடா அவதாரம் என்றெண்ணி அவர்களுக்கு இனிய தொண்டாற்றலை ஒவ்வொருவரும் கருத்துட் கொள்வாராக!

எதெது தனக்குப் பந்தத்தை விளைவிக்கிறதோ அது மறம்; எது நம்மை பந்தத்தினின்று விடுவிக்கிறதோ அது அறம். பிறர்க்கு அடிமையாகாமலும், உணவுடைக்குப் பிறரை எதிர்பாராதும், பேராசை, பணஞ் சேர்க்கும் தீமை, பெண்ணுசைப் பித்து இவையின்றி உலகில் பற்றற்று நமது கடமையைச் செய்து வருவதே தரும வாழ்க்கை. தன் உடைக்காக அயல் நாட்டை எதிர் பார்ப்பதும், அடிமைத் தொழில் புரிவதும், தன் தேவைக்கு மேல் சேர்க்க எண்ணுவதும், தானிருக்கப் போதுமான இடத்திற்குமேல் இடம்பட வீடெடுப்பதும், வேருெருவரைப் பொருமையுடன் நோக்குவதும், ஆசை, கோபம், இடம்பம், காமம் இவைகளுக்கு இடங்கொடுப்பதும் அதர்மம்.

இல்லறம் நல்லறமே. ஒரு குடும்பி, ஒரு செய்யும், அதில் ஏற்றக்கிணறும், சிறு குடிசையும், உழவு மாடுகளும் வைத்துக் கொண்டு, தன் உழைப்பாலேயே யுண்ணக்கடவன்; இராட்டினத்தில் நூற்றுத் தன் சொந்தத் தறியில் செய்த தூய ஆடையையே அணியக் கடவன். ஒவ்வொரு இல்லாளும் நூற்று நெய்த ஆடையை அணிகலமாகக் கொள்ளட்டும். உலகைப் பந்தப்படுத்தும் தீய பொன்னைச் சுமத்தல் பாவமானது. சாந்தமும், சத்யமும், கற்பும், நற்குணமுமே பெண்களுக்குச் சிறந்த அணிகலன்கள். பெருந்தீனியிலும், நகையிலும் இடாம்பீகத்திலும் விருப்பமுள்ள பெண்கள் கற்பைக்காப்பது அரிது. தன் வீட்டு விசேடங்களை இடம்பமின்றி ஒரு குடும்பி செய்வானாக! ஒவ்வொரு செயலும் பொதுநலமாகுக!

இயம நியமம், நட்பு, கருணை, களிப்பு, பொறுமை முதலிய நீதிகளைத் தன் வாழ்க்கையில் அமைத்து மனிதன் நடப்பானாக; மிருககுணமாகிய வஞ்சகம், தன்னலம், பொறாமை, கொடுமை முதலிய தீங்குகளைத் தவிர்ப்பானாக; மனித குணமாகிய தூய்மை, வாய்மை, பொறுமை, அன்பு, ஈகை, இரக்கம், அஹிம்சை, இன்சொல், பற்றறல் முதலியவற்றை நாள் தோறும் வளர்ப்பதைக் கடனாகக் கொள்வானாக. தர்ம வாழ்வினாலடைந்த இன்பமே பேரின்பம். மாயமயக்குகளால் உண்டாவது இன்பம் போலத் தோன்றும் கொடிய நோயே. அறநினைவும் நன்மொழியும் நற்செயலுமுள்ளவன் கடவுளுக்கு அருகே யிருக்கிறான். அவன் வாழ்க்கை தெய்வீகமானது. அவனுடைய நிறைமொழிகளே வேதம். அவனுடைய தீங்கற்ற வாழ்வே எல்லாருக்கும் உதாரணமாவது.

## 8. துறவு

மனத்தி லருண்மல்கி மாணுலக முய்யுந்
தனைத்துறந்த தொண்டே தவம்.

தனியகந்தையை விடுவதே துறவு. சந்திரன் தன் குறைகளைக் கவனியாது தான் மேகத்தில் மறைந்திருந்த போதிலும் உலகிற் கொளிதருகிறான். தன் மனத்தை மாயை மறைப்பினும் அதிற் சிக்காது பரோபகாரம் செய்வது துறவு. மரம் தன்னைக் கோடரியால் சிதைப்பவனுக்கும் கனியும், நிழலும் கொடுக்கிறது. எரிவதனால் தனது எண்ணெய்யும் திரியும் குறைந்தாலும் உலகிற்கு விளக்கு வெளிச்சம் கொடுக்கிறது. அதுபோலவே அன்னமயகோச விகாரமாகிய இந்த உடலுக்கு வரும் சுக துக்கங்களையெல்லாம் பொறுத்துக் கொண்டு நடமாடும் கோயில்களாகிய மக்களுக்கு அருட்பணி செய்வதே சிறந்த துறவு. துறவும், தொண்டும் ஒன்றே. படைப்பின் இரகசியத்தையறிந்து தன்வினையைத் தெரிந்து உலகம் உய்யும்படி தொண்டு செய்வதே சிறந்தது; காட்டிற் போய் மனிதவாடையின்றி யிருப்பது சிறந்த துறவன்று. குரங்குகளும் காட்டில் வசிக்கின்றன; அவைகளும் பழங்களைத் தின்று கொண்டிருக்கின்றன. குளிர் வட்டத்துக் கரடிகளும் 6 மாதம் பனிக்குகையிலுறைகின்றன. இவை துறவிகளாகுமா? மனிதன் தர்மத்தை நன்குணர்ந்து அதை நிலை நாட்டுவதற்குத் தன் உடல், பொருள், வினை இம்மூன்றையும் ஈவது தான் துறவு. உலகம் பராசக்தியின் கோவில். எவனொருவன் சாப்பாட்டிற்கும் உறக்கத்திற்கும் போக இன்பத்திற்கும் அடிமையில்லாது உலகக் கோவிலின் பணியைச் செய்கிறானோ, அவனே சிறந்தவன்.

பொன் ஞசைக்கும், பொருளா சைக்கும், கீர்த்திக்கும் ஒரு காரியத்தைச் செய்வது கடவுளிடம் பக்தியை வியாபாரம் செய்வதுபோலாகும். ஏசுவும், முகம்மதும், அப்பரும், மகாத்மாவும் துறவிகளுக்குச் சிறந்த உதாரணம். 84 கோடி ஜீவராசியிலும் பராசக்தியிருக்கிருளென்று மனிதருணர வேண்டும். துறவிகள் பிரம்மசரியத்தை யநுஷ்டிப்பது சிறந்தது. திரிகாண சுத்தியடைந்தால் இல்லறத்திலும் துறவேற்படும். நமக்குணவளிக்க ஒருவளிருக்கிருளென்று நம்புக. உழுதல், நெய்தம், நூற்றல், குடிலமைத்தல், திரிகரண சுத்தம், அஹிம்சை, சாந்தம், பிரமசரியம், மிதமான ஆகாரம், பிறருக்குத் தொந்தரவு கொடாதிருத்தல், பணத்தாசை வெறுத்தல், பெண்களைத் தாயென மதித்தல், பரோபகாரமாகிய இவை துறவிகளின் முக்கிய இலக்கணங்கள். துறவிக்கு ஜாதி, வேதம், மதம், இவ்வித்தியாசங்கள் கிடையா. தன் தேவைக்குமேல் துறவி சேர்க்கக் கூடாது; தருமப் பிரசாரகம் செய்வதில் தன் வாழ்வைச் செலுத்தவேண்டும். துறவி அறநூல் வாழ்வு வாழவேண்டும். பராசக்தீ ! என்னேடு பேசிப் பேசி எனக்கிந்த ஆனந்தத் துறவை ஈந்தாய். உன் சக்தி என்றும் வாழ்க !

---

## 9. இடம்ப கண்டனம்

காலத்திற்கும், தேசத்திற்கும், இடத்திற்கும் தக்கபடி தன் தேவையை அடைந்த பிறகு மீதியிருப்பவை இடம்பப் பொருளேயாகும். உலகில் காட்டு மிருகங்கள் கூடச் சேர்த்து வைப்பதில்லை. அவை தம்முழைப்பாலேயே தம்முடலுக்கு வேண்டியவைகளை யடைகின்

றன. கிடைத்தமட்டில் திருப்தியடைவதே களிப் பெனப்படும். உழுதுண்ண ஒரு செய்யும், விவசாயத் திற்குக் கிணறு முதலியவைகளும், ஆடையைத் தயார் செய்வதற்கு இராட்டினம், தறி முதலானவையும், வசிப் பதற்கு ஒரு குடிலும், சமைப்பதற்கு மண் பாத்திரங் களும் வைத்துக்கொண்டால் போதும். இவற்றைக் கொண்டே மனிதன் அமைதியாக வாழலாம். பசித் துண்ணும் உழைப்பாளி, விருந்துண்ணும் பணக்கார னைக் காட்டிலும் திடமுள்ளவனுயிருக்கிறான். உடம்பை ஆபரணங்களினாலும் உயர்ந்த ஆடைகளினாலும் அலங் காரம் செய்துகொள்வதினால், பலபேர் அனுபவிக்க வேண்டிய செல்வத்தை அநாவசியமாக நாமொருவரே பேராசையுடன் வைத்துக்கொண்டிருக்கிறோம். கடுக்கன் இல்லாவிடின் காது கேளாதா ? பெண்கள் அலங்காரங் களால் தம் உடலை அழகாயிருக்கிறதென்று நினைத்து செருக்குக் கொண்டு தம் உள்ளழகைக் கவனியாது விடுகின்றனர். நகைகளும் அலங்காரமான ஆடை களும், விருந்துகளும், இடம்பமான வாழ்வும் நமது அகங்காரத்தைப் பெருக்கி, நம்மைத் தீய வாழ்க்கை யில் ஆழ்த்திவிடும். இவற்றை நினைப்பதே பாவம். மனிதா ! கடவுள் உனக்குக் கொடுப்பதற்குமேல் உன் சட்டைக்கு அழகு செய்து கொள்ள விரும்புவது பாவம். எவ்வளவு சிறிய உடையை உடுத்த முடியுமோ அவ்வளவையே நீ உடுத்து. எளிமையே அழகு. பணக்காரனைப் பார்த்து நீயும் இடம்பமாயிருக்க வேண்டு மென்று எண்ணிப் பாவியாகாதே. இடம்பத்தினால் தேவை பெருகும். தேவை பெருகினால் தீய வழிகளிற் பணம் சேர்க்க அஞ்ஞானம் உன்னைத் தூண்டும். ஆசை களுக்கு அடிமை ஆகாதே. எவ்வளவு இலகுவாக உன்

தேவைகளை அடையும்படி இயற்கையன்னை அருள் சுரந்திருக்கிறாள்! உன் கை கால்களை உபயோகி. உலகில் மற்றவரெல்லாம் சுகமாயிருக்க வேண்டுமானால் நீ எளிய வாழ்க்கை நடத்து. எளிமை என்பது கடவுளிடம் போய்ச் சேரும் நேர்வழி ; தன் தேவைகளை எவ்வளவுக் கெவ்வளவு சுருக்கிக் கொள்கிறானோ அவ்வளவுக் கவ்வளவு கடவுளுக்குச் சமீபத்தில் மனிதன் இருக்கிறான்.

பராசக்தி அருள்க!

---

## 10. உலகின் பிணி

பராசக்தீ! மனிதனின் தர்மமே போயிற்று. மனிதர்கள் தன்னலமும் போர் வெறியும் பணப் பைத்தியமும், இடம்பமும், திருட்டும், காமமும், பொறாமையும் நிறைந்த பாழ்வீடு போலானார்கள். ஆத்மஞானமே மனித வாழ்க்கையின் விளக்கு. இந்த விளக்கைச் சுற்றி மாயை யென்னும் இரும்புக் கதவுகளை மனிதன் போட்டுக் கொண்டிருப்பதால், நெஞ்சு இருளாயிருக்கிறது ; அவன் செய்யும் காரியங்களும் இருளாயிருக்கின்றன. அந்தோ! ஒருவன் மற்றொருவனுடைய நிலத்தில் ஆசை கொண்டு போர் செய்கிறான் ; மனிதர்களைக் கொல்லுகிறான் ; திருடுகிறான் ; ஆயிரம் மனிதரை ஒரு நொடியில் கொல்லுவதற்கு வெடி மருந்துகளும், பீரங்கிகளும், கொலைக்கருவிகளும் செய்கிறான் ; ஒரு தேசத்தை விரைவாகக் கொள்ளையடிக்கப் பல வாகனங்களைச் செய்கிறான் ; ஆயிரம் பேர் உழுது உண்ணக்கூடிய நிலத்தை ஒருவன் அபகரிக்கிறான் ; ஆயிரம் ஏழைகள் வசிக்கக் கூடிய இடத்தை வளைத்துக் கொண்டு ஒருவன் மாளிகை

கட்டிக்கொள்கிறுன்; பிறந்தபோது தன்னேடு கொண்டு வந்தவன் போன்று அகங்காரத்துடன் உலகை அடக்கி ஆளப்பார்க்கிறுன்; ஏழைகளே அடிமைப்படுத்துகிறுன். உழைப்பது ஏழை; உண்பது பணக்காரன். மரம்வைத்து வளர்ப்பவன் உழைப்பாளி; பழம் தின்று கொழுப்பவன் கோளழப் பணக்காரன். உழைத்தும் பட்டினியோடு சாவது ஏழை; உழையாது விருந்துண்டு உறங்குவது பணக்காரன். பிள்ளே குட்டிகளோடு வீடில்லாமல் மழையிலும் வெயிலிலும், வறுமையிலும் மடமையிலும் வருந்தும் ஏழைச் சகோதரரைக் காப்பாற்ற என்று கண் திறப்பாய்? கள்ளேக் குடித்து விட்டுத் தன் பெண்டு பிள்ளேகளேப் பட்டினி போட்டு வருத்தும் மடமையை என்று தொலேப்பாய்? செல்வம் பொழியுமெங்கள் நாடு மிருக பலத்திற்கு அடிமையா யிருக்கிறது. நாட்டின் பொருளெல்லாம் அயல்நாட்டில் விரைந்துபாய்கின்றன. தீய கல்வி விஷம்போல் நாட்டுச் சிறுவர்களேக் கெடுத்துக்கொண் டிருக்கிறது. அயல் நாட்டுச் சாமான்களின் மாயையில் விழுந்து ஜனங்கள் பொருளேயிழந்து ஏழைகளாகிறுர்கள். பல இயந்திரங்கள் நாட்டிற் புகுந்து பணக்காரரையே பணக்காரராக்கிக் குடிசைக் கைத்தொழிலே ஒழித்தன. பருத்தியும் இராட்டினமும் தறியும் உள்ள நாட்டிற்குப் பதிஞயிரம் மைல் தூரத்திலிருந்து துணி வரலாயிற்று. அயலான் துணி கொடுத்து (டெக்கா மஸியின் நூற்ற) இந்தியர்கள் உடுத்தும் இந்த நிர்வாண நிலே என்றைக்கு ஒழியும்? வயிற்றுப் பிழைப்பிற்கே விலேயுயர்ந்த வாழ்க்கையை மனிதர் இறைக்கின்றனர். அவர்கள் கற்பதும், வாழ்வதும் ஒருச் சாண் வயிற்றை நிரப்புவதற்கே. மிருக பலத்திற்கு அடிமைப்பட்டுத் தமது வாழ்க்கையை உத்யோக வனந்தரத்திற் கொட்டி

2

இடம்பமும், மடமையும், செருக்குங் கொண்டு ஈகையும் ஞானமும் அற்றனர். நமக்குள் பொன்றாத ஆன்மக் கனல் இருப்பதை மறந்து, துப்பாக்கிக்குப் பயந்து தைரியமற்றிருக்கின்றனர். ஜாதி வித்தியாசம் இந்துக்களின் ஒற்றுமையைக் கலைத்து விட்டது. தீண்டாமை இந்து மதத்தைத் தீண்டலாக்கியது. மத வித்தியாசம் உலகின் ஒற்றுமையைக் கெடுத்து பயங்கரமான போர்களை உண்டாக்கியது. சகல மதங்கட்கும் அடிப்படை சுத்தான்மா ! இதை மக்கள் மறந்தனர். தாந்தாம் என்று பிதற்றி ஜெகதீஸ்வரியை மறந்தனர். நல்லோர் உபதேசத்தைத் துறந்தனர். கள்ளும், காமமும், தேவைக்குமேல் சேர்க்கும் திருடும், பிறநாடுகளைக் கொள்ளை யடிக்கும் பேராசையும், தரித்திரமும், வஞ்சகமும், அயல்நாட்டுச் சரக்குகளும், உள்நாட்டுக் குண்டுணித்தனமும்,சோம்பலும் அதிகமாயின. பாரதர் தம் சுய ரூபத்தை மறந்தனர். பாரதநாடு அஞ்ஞானப் பிரளயத்தில் மூழ்கி யிருக்கிறது. சுத்தவடிவான பராசக்தீ ! இவற்றை யெல்லாம் நீக்கி உலகத்திற்கு ஆனந்த மளிப்பாயாக !

---

## 11. உலகின் பாம்புகள்

கருநாகத்தைவிடப் பொறாமை என்னும் நஞ்சுள்ள மனிதன் மிகவும் கொடியவன். பாம்பிற்குப் பல்லில் மட்டும் விஷமுண்டு. பொறாமைக்காரனுக்குத் தன் நினைப்பிலும், செயலிலும், சொல்லிலும், மூச்சிலுங் கூட விஷமிருக்கிறது. பாம்பு தன் சட்டையை மட்டும் போக்குகிறதே யொழிய தன் விஷத்தையும், கோபத்தையும் போக்குவதில்லை. மனிதன் தன் உட

வழுக்கை மட்டும் நீக்கிக் கொண்டு, மனதில் காமக் குரோதாதி வஞ்சனைகளை வைத்துக்கொண்டால் பாம்பி னும் கேடானவனுவான். மனிதர்களைக் கண்டால் பாம்பு அஞ்சி ஓடுவதுபோல, தருமத்தைக் கண்டால் அஞ்சி ஓடும் மனிதன் பாம்பே யாவான். பாம்பு நல்லோர் தீயோரெனப் பாராது தீண்டுவதுபோல், விக்ஞானம் இல்லாத மனிதன், தன் பொறுமையால் எல்லோரை யும் துன்புறுத்துகிறுன். தன் விஷமே பாம்பிற்குப் பலருடைய பகையைச் சம்பாதிக்கிறது ; தன் அஹங் காரமே மனிதனைச் சத்துருவாக்குகிறது. பாம்பு தான் முயன்று வீடு கட்டாது, எளிய பூச்சிகளின் புத்துக் களில் நுழைந்து கொள்கிறது. மனிதன் தன் முயற்சி யால் தூய வழியில் கைகால்களை உபயோகித்து உடை உணவுகளைத் தேடி அடையாமல், பணக்காரன் என்ற பெயருடன் எளியோர் உழைப்பின் மேல் வீண் ஆடம்பரங்களை எழுப்புகிறுன். உழைப்பாளிகள் பசி யால்வருந்த, அவர்கள் உழைப்பின்பயனை ஒருவனுகவே மிருக பலத்தால் கொள்ளையடித்துச் சேர்ப்பவன் ஒரு விஷப் பாம்பு. தன் தருமத்தை யுணராது, தன்னலம் பாராட்டி மற்றொருவன் வாழ்வதைப் பொறுமையுடன் நோக்கி நல்லோருக்குத் தீமை செய்வோர் பாம்புகளே. உலகில் பணம் பெரிய பாம்பு. இதன் ஆசையால் கடி யுண்டவன் கொலைக்கும் அஞ்சமாட்டான் ; அற்பத்தன மாக நடந்துகொள்வான். காலகோடி சர்ப்பத்தைவிடக் காம சர்ப்பம் மிகவும் கொடிது. இதன் வாடை பட்டா லும் மனிதன் தன் பரிசுத்தத்தை இழப்பான்; இதைப் பார்த்தால் மனம் கலங்குவான் ; இதன் அருகில் போனுல் பஞ்சமஹா பாதகங்களையும் அடைவான். இராவணன், கீசகன் முதலியோர் காம சர்ப்பத்தால்

தீண்டப்பட்டு இறந்தனர். ஏ! பராசக்தி! காம காஞ்சன சர்ப்பங்களுக்கு உனது அருளே பெரிய மருந்து. மனிதனே! கோபம், குரோதம், லோபம், மதம், மாச்சர்யம், ஈர்ஷை முதலிய பாம்புகள் மனப்புதரிற் பதுங்காதபடி கவனமாயிரு! மனத்திலுள்ள புதர்களை யெல்லாம் நீக்கி அதை அம்பிகை வசிக்கும் கோவிலாக்கு. உன் மோகத்தையும் பேராசையையும் சஞ்சல புத்தியையும் அகங்காரத்தையும் கெடுத்து, சுத்தம் என்ற மூலிகையை மனதில் வளர்த்தால் அஞ்ஞானப் பாம்பு வந்து அடையாது. மனதில் வெளிச்சமும் மணமும் நல்ல வாசனையும் கருணையும் விளங்கும்படியாகச் செய்து கொள்; உன் இருளெல்லாம் நீங்கி விடும். எப்போதும் விழித்துக்கொண்டே யிரு. காமக் குரோதாதிப் பாம்புகளின் அரவம் கேட்டாற் கூட எழுந்து எதிர்த்து விரட்டு. எலி நிறைந்த கூரையில் பாம்பு வரும்; ஆசை நிறைந்த உள்ளத்தில் அஞ்ஞானப் பாம்பு வந்து புகும்.

---

## 12. விதேசச் சாமான்கள்

ஒவ்வொருவரும் தனக்கு அவசியமாக வேண்டிய சாமான்களைத் தாமே செய்துகொள்ளல்வேண்டும். மனிதனுக்கு அவசியமாக வேண்டியவை உண்ணவும், உடுக்கவும், வீடு கட்டவும் வேண்டிய சாமான்களே. தான் இருக்குமிடத்தில் விளையும் தானியங்களை மனிதன் உண்பானாக. இரும்புச்சாமான்களும், மரச்சாமான்களும் பாத்திரங்களும், துணிமணிகளும் தன் நாட்டிலேயே செய்யப்படல் வேண்டும். பணத்திற்காக ஆசைப்பட்டு தன் நாட்டில் விளையும் மூலப் பொருள்களை அயல் நாட்

டிற்கு அனுப்புவதும், தன் நாட்டில் இருக்கும் சாமான்களை நிராகரித்து அதே பண்டங்களை அயல் நாட்டினின்று வாங்குவதும், தன் நாட்டின் பொருள்களை உபயோகித்துத் தனக்குத் தேவையானவற்றைச் செய்துகொள்ள உலகன்னை வேண்டியவற்றைக் கொடுத்திருக்கும்பொழுது, சோம்பலாலும், இடம்பத்தாலும், பிற நாட்டுப் பொருள்களை வாங்குவதும் கொடிய பாபம். இது, தன் பத்தினியிருக்க, ஒரு வேசையை மணப்பதற்கொப்பாகும். இதனுல் நம் நாட்டின் செல்வமெல்லாம் போய்விடும். வறுமையும், சோம்பலும், இடம்பமும், மடமையும் பெருகி நாடுகெடும்; நாட்டின் சுதந்திரம் போய்விடும். ஜனங்களெல்லாம் அடிமையாவார்கள். அடிமையுற்ற ஜனங்களுக்கு ஆத்ம பலமும், சரீர பலமும் போய்விடும். ஒவ்வொருவரும் எளிமையான வாழ்க்கையைக் கடைப்பிடித்துப் பாபமற்ற வழிகளில் தத்தம் உடை, உணவுகளைச் சம்பாதித்துக் கொண்டால் அயல்நாட்டை எதிர்பார்க்க வேண்டியதேயில்லை. நம் நாட்டில் பஞ்சும் இராட்டினமும் தறியும் இருக்கும்போது பதினுயிரம் மைல் தூரத்திலுள்ள அயலாரிடமிருந்து நமது துணியைப் பதின்மடங்கு விலை கொடுத்து வாங்குவது பாபமானது. அயல் நாட்டுத் துணியை உடுத்துவது, நாம் நிர்வாணமாக இருப்பதற்குச் சமானமாகும். அயல் நாட்டு உணவுகள் நம் நாட்டைப் பட்டினி போடுவதற்குச் சமானமாகும். பட்டினியாய் இருப்பதினும் அயலானிடம் பிச்சை வாங்குவது கேவலமானது. தன்னுட்டில் செய்து கொள்ளக் கூடியவற்றை அனுபவியாது தன் தேவைகளை வேண்டிய அளவுக்கு மேற் பெருக்கிப் பிற நாட்டுப் பொருள்களை ஆவலுடன் வாங்குவது, தன் கணவன்

தரும் அன்புள்ள ஆடையை நிராகரித்து உயர்ந்த துணிகளுக்கு ஆசைப்பட்டுப் பரபுருஷனை இச்சித்துக் கெடுவது போன்றது. நாட்டின் பொருளே நமது பொருள் ; அதை அனுபவிப்பதே மக்களின் தர்மம். பிறநாட்டின் பொருள் நம்மை அடிமைப்படுத்தும்பிணி.

## 13. குடி மறுத்தல்

உலகன்னை தென்னையைக் கற்பக விருக்ஷமாகப் படைத்தாள் ; அதன் ஒவ்வொரு பாகத்தையும் மனித வர்க்கத்திற்கு மிகவும் பயன்படும்படி ஆக்கினாள் ; வீடு, கட்டுவதற்கும், தட்டி முடைவதற்கும், உணவிற்கும் ஆகும்படி தென்னையை யாக்கினாள். தென்னையின் பாளை நீரை இனிமையான வெல்லம் செய்யச் சொல்லுகிறாள்; திராட்சைப்பழங்களை மனிதனும் மற்றப் பிராணிகளும் உண்ணும்படி ஆக்கினாள் ; பனைமரத்தின் நுங்கை வேனிற் காலத்தில் மனிதன் உண்டு உள்ளங் குளிர்ந்து கடவுளின் இனிய படைப்பை எண்ணி உருகவிடுத்தாள். அந்தோ! மனித சமூகத்திற்கு நன்மை பயக்கும் இவற்றின் சாற்றைக் கள்ளாகவும் சாராயமாகவும் செய்து மனிதனை மனிதனே மிருகமாக்கிக்கொள்கிறான். பராசக்தி ! நீ கொடுத்த வினையை முடிக்க வந்த மனிதன் கள்ளென்னும் நஞ்சை யருந்தி, மதிமயங்கி, அறந் தவிர்ந்து கொலைக்கும், களவுக்கும், சூதிற்கும், காமத்திற்கும் அடிமையாகி உன் கோவிலாகிய இவ்வுலகத்தை நரகமாக்குவது நியாயமா? ஏழை மனிதன் நெற்றி வேர்வை சொட்டச் சொட்ட நாளெல்லாம் உழைத்து, சம்பாதிக்கும் அரை ரூபாயில் ஆறணாவிற்குக் குடித்துவிட்டு மீதி இரண்டணாவையும் கள் மயக்கத்தில் உதறி

விட்டு, கள் வெறியோடும், வெறுங் கையோடும், தடு மாற்றமுள்ள நடையோடும், வாயில் ஆபாசமான வார்த் தைகளோடும் வீட்டை யடைகிறான். மனைவி மக்கள் இவனுடைய கூலிக்காகவே பட்டினியோடு ஆவலாக எதிர்பார்த்திருந்து, இவன் வந்ததும் குடிக்கக் கஞ்சி யில்லை என்று சொல்லி முறையிடுகிறார்கள். தன்னைப் பணம் கேட்கக் கேட்கக் குடி வெறியில் தன் மனைவியை யும் மக்களையும் நொய்யப் புடைத்துத் தானும் புடை யுண்டு கீழே விழுந்து புரண்டு கூக்குரல் கிளப்பித் தெருவிலுள்ளோர் சமாதானத்தையும் கெடுக்கிறான் குடிகாரன். இப்படி ஏழைக் குடியர்களும், பணக்காரக் குடியர்களும், நடுத்தரக் குடியர்களுமாகச் சேர்ந்து உலகைப் பித்தர்கூட மாக்குகின்றார்கள். பராசக்தி! இவர்களோ நீ படைத்த மனிதர்கள்? நாகரிகப் பணக்காரர் என்று சொல்லிக்கொள்ளுவோர் அந்தோ! இவர்கள் அயல் நாட்டினின்று விலை யுயர்ந்த சாரா யங்களை வரவழைத்துக் குடித்து நம் நாட்டுப் பொரு ளைக் கோடி கோடியாகக் கொள்ளை கொடுக்கிறார் கள். பெரிய மனிதர்கள் கூட்டங் கூட்டமாகக் கூடிக் குடித்துக் களியாடி நம் நாட்டின் அறத்தையும், பெருமையையும், ஆண்மையையும், செல்வத்தையும் போக்கித், தமது மனோ வாக்குக் காயங்களை அசுத்த மாக்கி உண்ணலே எண்ணமாயும், ஊடல் கூடலே செய் கையாயும் இருக்கும் விலங்கு நிலைமையைப் பார்த்து அன்பன் கண்களில் ஊறும் கண்ணீரை என்று நீ துடைப்பாயோ?

உலகோரே! பாளை நீரினின்று வெல்லம் செய் யுங்கள். அந்த வெல்லம் உடம்பிற்கு நல்லது. பாளையை அடிக்கடி சீவுவது தேங்காயின் இனிப்பைக்

குறைத்து விடும். பாளைநீரை அடிக்கடி கொடூரமாக வடித்துப் புளிக்கவைத்துக் கள்ளாக்கி ஏழைகளுக்குக் கொடுத்து அவர்களை மயங்க வைத்து நீங்களும் பாபம் செய்து உலகத்தையும் பாவக் காடாக்காதீர்கள். கள்ளி னின்று வரும் பாவப் பொருளைக்காட்டிலும் தேங்காய் விற்பதினால் வரும் தர்மமான லாபம், லாபமென்று தோன்றவில்லையா? அந்தோ! கடவுளுக்குக்கூட ஊன், கள், சுருட்டு வைத்து வழிபடுகிறீர்களே! கோவிலுக்குப் போகும்பொழுதுகூட சாராயம் அருந்த வேண்டுமா? திருவிழாக்கள், பொங்கல், தீபாவளி முதலிய நன்னாட்களிலுங்குடித்துவிட்டு ஆடவேண்டுமா? குடியர்களே! உங்கள் பாவத்தையுணர்ந்து அக்கொடிய பழக்கத்தை விட்டுவிடுங்கள்; உங்கள் கூலிப்பணத்திற்கு நல்ல உணவுப் பொருள்கள் செய்து உண்ணுங்கள்; உங்கள் குடும்பங்களைப் பட்டினி போடாதீர்கள்; தர்ம தேவதையின் கோபத்திற்கு ஆளாகாதீர்கள். தென்னை யைக் கட்குத்தகைக்கு விட்டுத் தீயவழியில் பொரு ளீட்டப் பேராசை கொள்ளும் பணக்காரர்களே! நீங் கள் தேவைக் கதிகமாய்ச் சேர்த்துவைத்ததுபோதாதா? இன்னமும் ஏழைகளின் பணத்தைக் கொள்ளையடித்து உலகை நரகமாக்க வேண்டுமா? மனிதரின் முக்கிய உணவாகிய தேங்காயை ஈசனுடைய வழிபாட்டிற்கு உகந்த தேங்காயைப் பெருக விடுங்கள். கள் இறக்கும் தொழிலாளிகளே! பாளை நீரைச் சுத்தமான பாத்திரங் களில் ஊற்றி, இஞ்சிச் சாற்றைச் சேர்த்து நல்ல கரி யடுப்புகளிற் காய்ச்சி அடையாக்கித் தென்னை வட்டுக்கள் செய்து மிதமாக உபயோகப்படுத்தினால் நன்மை தரும். ஆப்காரி இலாக்கா வேலைக்காரர்களுக்கு நீங்கள் பயப் பட வேண்டாம். நம் நாட்டுச் செல்வத்தில் 50 கோடி

ரூபாய் அயல்நாட்டிற்குப் போகிறது. வஞ்சமும், பொய்ப் பிராதுகளும், களவும், கொலையும், பஞ்சமும் குடியினாலேயே உண்டாகின்றன.

அறவோர்களே! பாலை நீரினின்று வெல்லம் செய்யும்படி எங்கும் சொல்லுங்கள்; தென்னையைக் கள்ளுக் குத்தகைக்கு விடாதபடி பிரசாரஞ் செய்யுங்கள்; ஜாதிக்கட்டாலும் சமய உறுதியாலும் ஜனங்கள் கள்ளைத் தவிர்க்கும்படி செய்யுங்கள். கிராமப் பஞ்சாயத்துகளே! குடியர்களுக்குத் தக்க அபராதம் விதியுங்கள்; குடிப்பவர்களுக்கு நன்றாகப் புத்திமதி சொல்லுங்கள்; குடிவெறி வரும்போது நீராகாரத்தையாவது கஞ்சியையாவது உண்ணுமாறு கூறுங்கள்; குடிவெறி நேரமாகிய மாலையில் நல்ல பஜனையையாவது நாடகங்களையாவது கோவில் வழிபாடுகளையாவது ஏற்படுத்தி அவர்கள் மனதைத் திருப்பிவிடுங்கள்; கள் விற்பவர்களுக்குத் தங்கள் தொழில் அதர்மமானதென்பதை எடுத்துரைத்து, அவர்களை வேறு யோக்கியமான தொழில் செய்யும்படி முறையிடுங்கள்; கள்ளுக்கடைக்கு எதிரே நல்ல தண்ணீர்ப்பந்தலும் கஞ்சித்தொட்டியும் வைத்துக் குடியர்களைத் தடுத்து, அவ்விடத்திற்கு அழைத்து வந்து அவர்களுடைய பசியை ஆற்றிப் புத்தி புகட்டுங்கள்; இவ்விதமாகவே காபி, டீ முதலிய குடிகளையும் விலக்குங்கள். இது உங்களுடைய தர்மம்; குருவின் ஆணை; பராசக்தியின் கட்டளை.

---

## 14. கொலை மறுத்தல்

ஏ மஹா சக்தி! உனதருளால் எமக்கு ஜீவசக்தி வளர்கிறது; பூமிதேவி பயிர்களைத் தருகிறாள்; நாங்கள் முயற்சி செய்யச் செய்யக் கணக்கற்ற தானியங்களையும், கடலைகளையும், காய், கனி கிழங்குகளையும் பூமாதேவி எங்களுக்குத் தருகிறாள். இந்த ஓரறியுயிர்களை யுண்டு சக்தியடைந்து அனைத்துயிர்க்கும் தொண்டு செய்யவே நீ மனிதனைப் படைத்தாய்! மரக்கறியே மனித உணவு.

அந்தோ! மனிதன் உன் நியமத்தினின்று மாறிப் புலால் உண்பது அறமோ? இரக்கமும், அன்பும், நன்றியும் இல்லாத விலங்குகள் போலன்றோ மக்களும் பிற வுயிர்களை யுண்டுத் திரிகிறார்கள்! மனிதர் பாபங்கள் உயிர்வதையால் கோடி மடங்கு அதிகமாகின்றனவே! மனிதர் வயிறு சுடுகாடோ? மனிதர் தாழ்ந்த பிராணி களின் கூற்றோ?

மனிதன் ஊனருந்தப் படைக்கப்பட்டிருப்பானாகில் புலிபோல் அவன் நகங்களும் பற்களும் கூர்மையுடையனவாயிருக்கும். புலாலை யுண்ணும் புலிக்கும், மரக்கறி யுண்ணும் யானை, குரங்கு, ஒட்டகை முதலியவற்றிற்கு முள்ள உடல் அமைப்பு வேற்றுமைகளைப் பாருங்கள்! மனிதன் உணவு மரக்கறியே! ஆடு கோழிகளைக் கிழித்து இரக்கமின்றி நறுக்கி அழுகவைத்துப் பிண மருந்தும் மனிதன் மனிதரில் விலங்காகிறான். அவனிடம் அகந்தையும், வஞ்சமும், மூர்க்கமும், அறியாமையும், இன்னும் எண்ணில்லாத் தீய குணங்களும் குடிப்புகும். ஐம்பெரும் பாதகங்களில் முதன்மையானது கொலை.

அந்தோ! யாகம் என்பது என்ன? அதுவே தியாகம். தன்னலத்தைக் கொன்று தன்னையே உலகின் அருள் தொண்டிற்கு ஈவதே யாகம். அந்தணர்களே! நீங்கள் சுவர்க்க இன்பத்தை யடைய ஆடுகளை வெட்ட வேண்டுமா? ஆடு செத்தால் ஐயருக்கு மோக்ஷமா? ஓர் உயிரைக் கொன்றால் அதன் கொலே உங்களுக்கு வருமே யொழிய, சுவர்க்கம் எப்படி வரும்? இருளை நீக்குங்கள். சுவர்க்கமும் நரகமும் நமது வினைப்படியே வருவன. அவைகளை நாம் இவ்வுலகி லேயே அனுபவிக்கிறோம். யாகம் செய்தாற்போல உங் கள் வினை உம்மை விடாது. தன்னலம் விட்டவனுக்கே சுவர்க்கானந்தம் உரியது. "நான் சுவர்க்கம் செல்லு கிறேன், இந்த ஆடு சாகட்டும்" என்பது எவ்வளவு தன்னலத்தைக் காட்டுகிறது! புத்தர் பெருமான் இப்படு கொலேயை நிறுத்தவே அவதரித்தார். யாகத்துக்காம் பணத்தைக்கொண்டு ஏழைகளுக்கு உணவூட்டுங்கள்; கைத்தொழிலேயும், கல்வியையும் பெருக்குங்கள். உங் களால் நாடெல்லாம் பிழைக்கும். ஒரு கொலேசெய்து யாகஞ் செய்வதினும், அப் பணத்தால் பல உயிர்கள் பிழைத்து உம்மை வாழ்த்தும்படி நல்ல தொழில்களை வளருங்கள்!

அந்தோ, பராசக்தி! உனக்குமா ஆடு வேண்டும்? அன்பு வடிவே! உன் குழந்தைகளாகிய ஆடு கோழி களை, உன்னெதிரேயே ஆறறிவு படைத்த மக்கள் வெட்டுவதைப் பொறுத்தா இருக்கிறாய்? புலாலுண் ணும் பாவிகளே! நீங்கள் புலாலருந்தும் பழியை தெய்வத்தின்மேல் போடாதேயுங்கள்; தெய்வத்தின் பெயரைக் கெடுக்காதீர்கள்; உங்கள் மனம் கொலேயி லும், தீமையிலும் செல்லுவதால்தான் அம்மனம்

போன்ற கொடிய உருக்களைச்செய்து தெய்வத்திற்கு நீங்கள் உண்ணும் கொடிய உணவைப் படைக்கிறீர்கள் ; இது தொன்றுதொட்டு வந்த பழக்கம் என்கிறீர்கள். உங்கள் பாட்டன் அறியாமையால் பாபம் செய்தால் நீங்களும் பாபம் செய்ய வேண்டுமா ? அவன் குடித்தால் நீங்களும் குடிக்க வேண்டுமா ? இன்றே இப்பழக்கத்தை நிறுத்துங்கள். உங்கள் ஆபாசமான மாடன், கருப்பனை விட்டு விடுங்கள் ; சாந்தமான உருவில் கடவுளைத் தொழுங்கள் ; கருணைக்கடலான கடவுளைக் கோரரூபத்தில் தொழாதீர்கள். உலகமெல்லாம் உங்களைக் கண்டு நகைக்கின்றன ! பலி என்பது தன்னையே உலகின் தொண்டிற்கு ஈந்துகொள்ளலாகும். உலகே பலி பீடம் ; அதுவே பராசக்தியின் சந்நிதி. அதில் உங்கள் தீய குணங்களைப் பலியிட்டுத் தன்னலம் விடுத்துத்தொண்டு செய்து உயருங்கள்.

உணவினாலேயே குணநலம் வளர்கிறது. மரக்கறியுண்ணும்குரங்கும் யானையும் எவ்வளவு சுறுசுறுப்பாயிருக்கின்றன! மனிதன் மற்றப் பிராணிகளிலும் பெரிய மூளையுடையவன். மனவுறுதி, வாய்மை, தூய்மை, அறிவாற்றல்களால் மனிதன் தனது வாழ்வைத்திருத்தி உலகிற்கும் உதவியாக வாழக் கடமைப்பட்டிருக்கிறான். மனிதன் எதை உண்கிறானோ அதற்குத் தக்க குணத்தையே அடைகிறான் ! மாமிசம், கள், முட்டை, அழுகல் முதலியவற்றை உண்கிறவன், விலங்குக் குணம் பெருகித் தாமதனாகிறான். ஊனுணவுநின்றால் போர்வெறிதணியும். அறுசுவைகளையும் மிகுதியாக விரும்புபவன் உணவிற்கு அடிமையாகித் தன் புலன்களை அடக்கத் திறனற்றவனாகிறான். மிளகாயும், காரமும் உண்பவன் கோபத்திற்கு ஆளாகிறான். ஆசை, அழுக்காறு, பிணி முதலியவை

புளி, மிளகாய், உப்பு முதலியவற்றின் மிகுதியால் உண்டாகின்றன. மனிதன் நல்ல பழங்களையும், தேங்காய், கடலை, சுத்தமான பால் முதலியவற்றையும் உண்டு வந்தால், சாத்வீக புத்தியும், சுறுசுறுப்பும், ஒளியும் பெறுவான். மனிதனே! உனக்கு விதித்த உணவை உண்; வீணாகக் கொலை செய்யாதே; இதுவரை மட வுலகம், போர் என்ற நரவதையால் மனிதனையே மனிதனுக்கு எமனாகும்படி செய்தது. கொலைக்கருவிகள் கண்டுபிடிப்பதில் தன் மூளையைச் செலுத்தி மனிதன் பாழானான். இனிச் சாத்வீக தர்மமே உலகிற் பரவும். அஹிம்சையால்தான் பாரத தேசத்திற்குச் சுதந்திரம் கிடைக்கும். சாத்வீக சக்தி உலகில் கிளம்பிவிட்டது. தான் கொன்றதற்காக வருந்தி உலகம் கொல்லா விரதத்தை உறுதியாகப் பூணப்போகிறது. போராற்று உலகில் பொறுமை விளங்கப்போகிறது. மனிதா! வீண் கேள்வி கேட்டு ஆயுளை அறுத்துக்கொள்ளாதே; புலாலுண்ணலையும், கொலையையும் தவிர்த்து, எல்லாப் பிராணிகளிடமும் அன்பு செலுத்து; உலகைச் சாந்த நிலையமாக்கு. புலால் நின்றால்தான் ஆகார சுத்தம் ஏற்படும். அப்போதுதான் உலகில் அமைதியும் ஒற்றுமையும் நிலவும். உணர்மின்! உயர்மின்! கொலைபுலையொழிமின்!

---

## 15. ஆபரணங்கள்

ஜெகதீஸ்வரீ ! ஏ பூமி மாதா ! உனது மலை, நதி, வனக்காட்சிகள் எவ்வளவு அழகா யிருக்கின்றன! நீ அவற்றிற்குத் தங்க நகைகள் போட்டா அழகு செய்கிறாய்? அழகு மயமாகத் தோன்றும் உன் இயற்கை யழகின்மேல் பொறாமை கொண்டு உன் கடவுளழகை வெல்ல மனிதர்கள் தங்க விலங்குகள் செய்து போட்டுக்கொள்கிறார்கள். "கடவுள் கொடுத்த அழகிற்கு மேல் எனது அழகு இருக்கிறது பார்; என்னைப் பார்த்து எல்லோரும் மயங்குங்கள்" என்கிறது போலிருக்கிறது அந்த நகை மினுக்கு! அந்தோ மக்களே! உலகைக் கெடுக்கும் அந்த மஞ்சள் மண் உங்கள் உடம்பில் ஏறியதும் உங்களுக்கு எவ்வளவு ஒய்யாரம், மமதை, கர்வம், மோகம், அசூயை! உங்கள் தேகத்தில் எவ்வளவு அபிமானம் புகுந்து விடுகிறது! நீங்கள் உங்கள் நகையையே பார்த்து அறக்கடவுளின் நகைப்புக்குள்ளாகி நீர்கள். உங்கள் நெஞ்சம் பொன்னாசையிற் பிணைக்கப் பட்டுக் கடவுளை மறக்கிறது. வெளியில் சுமையேத்த ஏத்த மனம் உள்ளே யிருப்பவனை மறக்கும். ஏன் ? இது ஒரு பெரிய பந்தம். கம்மலில்லாவிடில் காது கேளாதா ? காசுமாலையின்றிக் கழுத்து குனியாதா ? காப்பின்றிக் கை வேலை செய்யாதா ? காப்புப் போட்டவருக்கு மூப்பு வாராதா ? இந்த நகைகள் இகபர சாதனங்களாமா ?

ஏ பணக்காரர்களே ! உங்கள் ஆபரணங்களெல்லாம் ஏழைகளின் மனப்புண்கள். ஆயிரம் ஏழைகள் பிழைக்கக்கூடிய பொருளை நீங்கள் தான் - தின்னியாக வைத்துக் கொண்டு, தேவைக்குமேலே பலமடங்கு

சேர்த்து வைத்து, அதைத் தங்க விலங்குகளாகஅடித்து உங்கள் பெண்டு பிள்ளைகளுக்குப் போட்டு அழகு பார்க்கிறீர்கள் ! நீங்கள் சேர்த்தது எப்படி ? யாரிட மிருந்து ? நீங்கள் உங்கள் தேவையளவே அனுபவித் தால், உலகில் நீங்கள் சேர்த்து வைக்கக்கூடிய செல் வத்தை எத்தனை கோடி ஏழைகள் அனுபவிப்பார்கள் ? வீண்விருந்துகளும், இடம்பமும், அணிகளும் எத்தனை ஏழைகளின்கஞ்சிக்காகும் ? அவர்களுடைய ஜீவனத்தை யெல்லாம் திருடி உம் உடம்பில் தங்க மண்ணைத் தொங்கவிட்டுக் கொண்டிருக்கிறீர்கள் ! என்ன பாபம் ! என்ன வெட்கம் ! இந்த நாற்ற உடலை அலங்கரித்து மகிழும் நகைகளை விற்று எத்தனை இராட்டினங்கள், கலப்பைகள், மாடுகள் வாங்கலாம் ! உலகில் ஆடையும் உணவும் எவ்வளவு மலியும்! வறுமைப்பிணியின் தூதர் களே ! உங்கள் நகையைக் கண்டால் எனது அழுகை பொங்குகிறது. ஏ பத்தினிமார்களே ! வீணாக உங் கள் மனதைத் தட்டானுக்கும், தங்க மண்ணிற்கும் விற்க வேண்டாம். நீங்கள் காது, மூக்குகளில் துளை யிட்டுக் கொண்டு, கழுத்தில் அழுக்குப் படியும்படி சங்கிலிகளைப் போட்டுக் கொண்டு, கைக் காப்பு, கால் காப்புகளால் "நான் நான்" என்று சப்தித்து உலகைக் கலக்காதிருங்கள் ! நீங்களே உலகத்திற்கு ஆபரணம் ! நீங்களே உலகிற்குக் கட்டழகு ! உலகைப் பசும் பயிர்போல் அழகு செய்யவே நீங்கள் பிறந்தீர் கள் ! உங்களுக்கு அழகு பரிசுத்த வாழ்வும், நன்மக் கட்பேறும், கற்புமேயன்றி வேறில்லை. நீங்கள் வள்ளு வர் மனைவிபோல் இருங்கள். நம் நாடு குசேலர் வீட்டி னும் கேவலமாயிருக்கிறதே ! உலகின் செல்விகளே ! நம் நாட்டின் ஏழைகள் நமது டாம்பீகத்தால் வருந்து

வதை நீங்கள் உணருங்கள் ! ஆயிரக்கணக்கான ஏழைக் குழந்தைகளின் கண்ணீர் ஆறுய்ப் பெருகுகிறது ! தாய்மார்களே ! அவர்களுக்கு இரங்குங்கள் ; நகைகளை ஒழியுங்கள். கணவர்காள் ! உங்கள் அன்பையெல்லாம் உங்கள் மனைவிமாரை ஒழுக்கப்படுத்துவதிலும், கல்வி கற்பித்தலிலும் செலுத்துங்கள் ; எளிமையை வணங்குங்கள் ; பிறர் நம்மைக்கண்டு மயங்க வேண்டுமென்று போட்டுக்கொள்ளும் நகையை அவர்களுக்குப் போடாதீர்கள். உங்களுக்கு அணி நற்பணியே ! இடம்ப அணியனைத்தும் பிணியே! எத்தனைவிதமான திருடர் இடம்ப அணியைக் கவர எதிர்பார்த்திருக்கின்றனர் ! அதனுல் எத்தனை கொலை, மோசம், ஏமாற்றம் ! துயரம் ! இத்தனையும் உங்களால் வரவேண்டுமா ? மக்களே ! அணியை வெறுத்துத் தள்ளுமின் ! கடவுள் கொடுத்த மேனிக்கு மானங் காக்க மட்டும் ஓர் ஆடை யணிமின்! அவன் அன்பே அணியென மனதுட் கொண்மின் ! மனத்திற்கணி, அருளும், சுத்தமும் ; வாய்க்கு இன்சொல் ; உடலுக்கணி அருட்பணி !

---

## 16. அடிமை நீக்கல்

எல்லா மனிதருக்குள்ளும் உன் சக்தியை வைத்தாய் ! எல்லாருக்கும் அன்னையாய் நின்று அன்புக்கதிர் விரிக்கிருய் ! ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பணியும் ஆயுளும் ஈந்தாய் ! மனிதர் ஒருவருக்கொருவர் அன்போடு அளவளாவும் ஆற்றலையும் ஈந்தாய் ! அன்போடு ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வதே மனிதரியல்பு. ஒருவனுக்கு மற்றொருவன் அடிமையாகி, பயத்தினு

லாவது ஆசையினாலாவது வேலை செய்வது மனித சுயேச்சைக்கு மாறானது.

அந்தோ! மனிதன் எத்தனை பிசாசுகளுக்கு அடிமை! தான் செய்யவேண்டியதை மறக்கிறான்! உடலைச் சோம்பலுக்கு அடிமைப்படுத்துகிறான். விருந்துகளுக்கு அடிமை. பிணிகளுக்கு அடிமை. மனதிலெழும் ஆசைக் கடிமை. உலகிற் காணும் இடம்பப் பொருள்களுக் கடிமை. அழகுபோலக் காட்டி அடிமை செய்யும் வஸ்துக்களையே விரும்பி ஓடுகிறான் மனிதன். திருப்தியற்றவன் பேராசைக்கு அடிமையாகிறான். நாக்கிற்கு அடிமைப்பட்டவன் ருசியானவற்றைத் திருடிக்கூட உண்கிறான். ஆசைக் கடிமையானவன் சஞ்சல புத்தியால் செய்யத் தகாதவற்றைச் செய்கிறான். அடிமை பிறனால் நடத்தப்படுகிறான். அவன் தன்னை யறியாதவன்; அடிமை தன் வினையைச் செய்யாது பிறர் சொல்லும் தீவினைகளைச் செய்து தன் வாழ்வை வீணாக்கிக் கொள்ளுகிறான். அடிமையினும் வெறுக்கத்தக்க தீமை, பாபம், வேறில்லை. தம் வயிற்றுப் பிணியை ஆற்ற முடியாது ஏழைகள் பணக்காரரிடம் அடிமையாகின்றனர். அந்தோ! உழைப்பதெல்லாம் ஏழைகள்! நெல்விளைவது அவர்களால். உழையாது உண்ணும் பணக்காரன், அவர்கள் வேலையின் பலனைப் பெறுகிறான். வயிறு வாடுகிறது. அதனால் அவர்கள் அவன் சொன்னபடி கேட்டு வயிறு வளர்க்கவேண்டி யிருக்கிறது. ஏ! பராசக்தீ, உழைப்பவன் உண்பவன் என்னும் நீதி உலகில் விளங்குமோ!

அரசன் யார்? குடிகள் யார்? சுயேச்சை யுணர்வு பெற்றவனுக்கு இறைவனே அரசன். உலகை இறைவன் உயிர்களுக்காகப் படைத்தான். ஒரு மன்னனுக்

காகவல்ல. அவனவனுக்கு வேண்டிய செய்களை உழுது உண்டு, வேண்டிய பயிர்களை வைத்துக்கொண்டு பந்த மற்ற வாழ்க்கை வாழ மனிதனுக்கு உரிமையுண்டு. ஒருவருக்கும் நாம் குடியில்லை.

முதலில் ஜாதிமதச் சண்டைகள் ஒழிந்து 'சுத்தமே அறம்' என வுணர்ந்து அனைவரும் ஒற்றுமைப்பட வேண்டும். தீண்டாமை, கள், சுருட்டு, பரதேசித் துணி, வீண் அணி, வீண் விருந்து, இடம்பம், காப்பி, புகையிலை, டீ, மில், சோம்பல், நம் நாட்டுப் பொருளை பிற நாட்டிற்குக் கொண்டு போகும் உத்தியோகம், அசட்டு நாகரிகம், மாயா வித்தை, இவை யெல்லாம் மாயவேண்டும். நல்ல கல்வி, ஞானம், தொழிலறிவு, சுத்த நிலை, இடம்பமின்மை, தேகப் பயிற்சி, முயற்சி, மனோபலம், ஒற்றுமை, குடிமறுத்தல், நூற்றல், நெய்தல், உழுதல், தன்னம்பிக்கை,பயமின்மை,அஹிம்சை, அடக்கம் முதலியவற்றால்தான் நாட்டின் அடிமை தீரும். உன்னை நீ முதலில் சுதந்திரனுக்கிக்கொள்! உன்னைப் பார்த்துப் பிறரும் சுதந்திரமாவார்கள்! உலகெலாம் சுதந்திரமாகும் !

---

## 17. சுவர்ண வதம்

பராசக்தி! உன்னையும் செம்பாலும், வெள்ளியாலும், தங்கத்தாலும் அடித்துவைத்து, தங்கப் பூண்களாலும் வெள்ளிப் பூண்களாலும் கட்டி வைக்கிறார்கள். உன்னுடைய அழகை இந்தப் பூண்களோ காட்டக்கூடியன ? பூண்களென்றாலே அதனால் உண்டான புண்களென நினைத்து மனம் பகீரென்கிறது. எத்தனை அடிமைத்தனம், துராசை, விபசாரம், கொலை, பாபம்,

பந்தம், உலகின் வறுமை முதலியவற்றிற்கெல்லாம் இப் புண்கள் காரணமா யிருக்கின்றன. நீ இயற்கையில் கொடுத்த அழகைவிட அழகுபடுத்திக்கொள்ள மனி தன் வீணான அணிகளை, உயர்ந்த ஆடைகளை, நாடு கிருன். நீ சோலைகளுக்கும், பட்சிகளுக்கும், இயற்கை காட்சிகளுக்கும் தங்க நகைகள் போட்டா அழகு படுத்துகிருய்? பொன் என்று சொல்லும் பாழும் மண், மக்கள் மனத்தில் அகங்காரமும் பாப சிந்தனையும் உண்டாக்குமென்றல்லவோ அதை பூமிக்கடியில் புதைத் தாய். அந்தோ! பூண்கள் வேண்டுவோன் பாபமான வழிகளில் ஏழைகளின் பொருள்களைக் கொள்ளையிட்டுப் பணம் சேர்க்கிருன். அல்லது பிறருக்கு ஒன்றும் தாாது வயிற்றை யிறுக்கித் தானும் அனுபவியாது தட் டானுக்குக் கொடுக்கிருன். நகையின் ஆசையால் கற்பிழக் கின்றனர்! அந்தோ நகைகளைப் பாப விலங்குகளென்று உலகம் எப்போது உணர்ந்து நீக்குமோ! ஆயிரம் ஏழைகளின் ஜீவனத்தையன்ரே நகையாகப் போட்டுக் கொண்டிருக்கிருர்கள். மாந்தர்காள், ஏழைகளின் சாபம், அவர்கள் பட்டினியால் வருந்தும் பாபம், எல்லாம் உங்கள் கழுத்தைச் சுற்றி நகைகளாக இருக்கின்றன. எத்தனை இராட்டினங்கள், தறிகள், கலப்பைகள் வாங் கக் கூடிய பொருளை உங்கள் பெட்டிகளில் துருவேற வைத்திருக்கிறீர்கள்! உலகில் திருட்டுத்தனத்திற்கு அடிப்படை பணஞ் சேர்ப்பதே! உங்கள் பாவச் சுமை நீங்கவேண்டுமானுல் பணச் சுமையை நீக்குங்கள்.

"பொருள்" என்பது பூமியிலிருந்து பயிர் செய் யப்படுவனவே. உணவுடைப் பயிர்களை மிகுதியாக ஆக்குங்கள். அரிசியில்லாதவன், தான் விளைத்த பருத் தியைக் கொடுத்து அதைப் பெறட்டும். துவரையீந்து

பயறைப் பெறுங்கள். மாங்காய் கொடுத்துத் தேங்காய் பெறுங்கள். வாழையீந்து பலாவைப் பெறுங்கள். கேப்பை கொடுத்து அரிசி பெறுங்கள். அரிசி கொடுத்துக் கோதுமை பெறுங்கள். அயல் நாட்டுப் பண்டங்களின் மீது செல்லும் உமது ஆசையை அடக்குங்கள். உணவிற்கு வேண்டியதை யெல்லாம் பண்டமாற்றால் முன்சொன்னபடி அடையுங்கள். உடைகளைப் பஞ்சு நூற்று, நெய்து கொள்ளுங்கள். நூற்ற நூற்களை ஈந்து ஆடைகளை வாங்குங்கள். பணமின்றி ஜீவிக்க முடியும், முடியும்! கூலியாட்களுக்கும் தானியங்களையே கூலியாய்க் கொடுங்கள். பிரயாணம் செல்லுகையில் பணமில்லாது எப்படி அயலூர்களில் பிழைக்கமுடியும் என்கிறீர்கள். கவனியுங்கள் : அவசரப் பிரயாணமெல்லாம் வழக்கு மன்றங்களை ஒழித்து விட்டால் நின்றுபோகும். ஒவ்வொரு ஊரிலும் பிரயாண இலாகா ஒன்று உண்டு. யாத்திரை செய்பவர் அந்த இலாகா காரியஸ்தனிடம் தனக்குப் பிரயாணச் செலவுக்கு வேண்டியதை நெல்லாகக் கொடுத்து விடுகிறான். பிரயாண இலாகாக்காரர் சில முத்திரைத் தாட்கள் தருகின்றனர். மதுரையினின்று ஒருவன் தஞ்சாவூருக்குப் போகிறான். வண்டிக்காரனுக்கு (வண்டிகளெல்லாம் பிரயாண இலாகாவைச் சேர்ந்தன) ஒரு கலம் நெல்லுக்குத் தக்க வாடகை கொடுக்கவேண்டும். ஒரு கலம் நெல்லுச் சீட்டை அவனிடம் கொடுத்து விடலாம். ஒரு கடையில் ஒரு படி அரிசி வாங்க வேண்டும். என்னிடம் ஐந்துபடி நெல்லுச் சீட்டு இருக்கிறது. இதைக் கொடுத்துவிட்டு ஒருபடி வாங்கி மீதிக்குக் கடைக்காரனிடமிருந்து சீட்டு வாங்கிக் கொண்டு அவ்வூர் பிரயாண இலாகாவிற்குப் போய் முத்திரையிட்டுக்

கொள்ள வேண்டும். பிரயாண இலாகாக் கடைகளிலே தான் இப்படி மாற்றலாம். வழியில் ஒரு மாம்பழம் வாங்க வீசம்படிச் சீட்டைத்தர வேண்டியது. மனமிருந்தால் உறுதியாக இவ்வழிகளால் பொன்னைத் தொலைக்கலாம். பயிரைப் பெருக்கு ; பணத்தைச் சுருக்கு.

---

## 18. உருசியடக்கல்

நீ கொடுத்த பணியைச் செய்யப் போதிய சக்தி படைய, என் தாயே, நீ பற்பல உணவுப் பொருள்களை பூமியில் உண்டாக்குகிறாய். நீ கருணையோடு அளிக்கும் உணவுப்பொருள்களை அளவோடு உண்ண மனிதன் கட்டுப்பட்டுள்ளான். பசி யென்னும் கனலை நீ எம்முள் உண்டாக்குகிறாய். அவ்வனல் வாதை அதிகமாகும் போது உணவால் அதைத் தணிக்கவே அன்போடு பல தாவரங்களைப் படைத்தாய். பசிக்கே மனிதன் உண்ணுவது; பசித்துப் புசித்தால் அளவுடன் உண்ணலாம். அதுவே அறம். விலங்குகளுங் கூடப் பசித்தே புசிக்கின்றன.

ஆனால் மனித சமூகம் தனது காலத்தை உன் பணியிற் கழிக்காது, உண்ணுவதிலேயே கழித்து, சாவின் வாயில் விழுகிறது. பசியினும் ருசிக்கு அடிமையாகி உணவின் இயற்கைத் தன்மையைப் பற்பல உருசிப் பொருள்களால் மறைத்து மாயம் புரிகிறது. உருசியின் மயக்கத்தில், அளவுக்குமேல் பேராசையுடன் உண்டு, பசியனலை முற்றும் அணைத்து நோய் விளைவித்துக் கொள்கிறது. சுத்தமான தேங்காய், கனிந்த பழங்கள், நல்ல பசும்பால், பூஷணி, புடல், போன்ற சில பசுங்காய் கறிகள், நிலக்கடலை, கொத்துக்கடலை,

போன்ற இயற்கை யுணவுகள் எளிதில் கிடைக்கும். நலம் பயக்கும். தானிய வகைகள், காய்கறிகள் முதலிய வற்றை வேகவைத்தும் உண்ணலாம். இவற்றுடன் மனி தன் தன் ருசிக்கு வேண்டியதை யெல்லாம் மிதமிஞ்சிச் சேர்த்துக் கொள்ளுகிறான். பிணியின் தூதரான உப்பு, புளி, மிளகாய் முதலியன குணத்தைக் கெடுக்கின்றன. நாக்கிற்கு வாழ்வை அடிமைப்படுத்துகின்றன. உப் பின்றி உண்டால் பல நோய்கள் தீரும். புளி, மிளகாய் பல தீயகுணங்களுக்கு ஆதி. இவற்றால் நாக்கு ருசிக்கு அடிமையாகிறது. உருசியான பண்டம் அகப்படாத போது அதைத்தேட ஆவலுடன் அலைந்து கேவலமான தொழில்களும் செய்யத்துணிகிறது. உருசிக்கு அடிமைப் பட்டவன் களவு, விபசாரம் முதலிய பாதகங்களுக்கும் ஆளாவான். நாக்கை வளர்ப்பது வீண் செலவிற்கு வித் தாகி, பேராசைக்குப் பிறப்பிடமாய், வயிற்றின் தேவைக்கு மேலே உட்கொள்ளும் வன்பிணிக்கு வழி யாகும். உலகில் பணக்காரர் விருந்து கொண்டாடி ருசி வளர்க்கிறார்கள். பல ஏழைகள் உண்ணக்கூடிய உணவை ஒரே நாளில் சில இடம்பமான சுவைச் சரக்குகளாக மாற்றி யுண்கின்றனர். கோதுமை சப்பாத்தி, இட்டிலி, கேப்பை, கஞ்சி வடிக்காத சாதம், எலுமிச்சம் பழமும் இஞ்சியுஞ் சேர்ந்த பாசிப்பருப்பு, ஒரு கோசும்பரி, கூட்டு இவைகள் போதுமான உணவு. இவற்றிற்குள் சிலவற்றை மனிதன் உண்டு வந்தால் திடமாயிருக்கலாம். இதற்குமேல் பலகாரம், வறுவல் முதலியவையெல்லாம் பிணிபயப்பவையே. பிணிகளெல்லாம் வயிற்றிலேயே உணவுப் பிழையால் உண்டாகின்றன. பெருஞ்சோம்ப லும், அதிகத் தூக்கமும் உண்பதன் பிழையே. மனி

தன் தன்னை யறிவதற்கு முதற்படி ருசி யடக்கல். மனிதர் ருசி யடக்கிப் பசிக்கே உண்ணும் நாளில் உலகிற் செல்வம் மிகும் ; பாபம் குறையும் ; சக்தீ ! அந்நாளை அணுகச் செய்வாய் !

---

## 19. சமூக வாழ்க்கை

உயிர்களையெல்லாம் உன் மேனியாகக்கொண்ட பராசக்தீ, நீ மனிதசமூகத்தை முழுதும் உன் மயமாகவே இணைக்கிறாய். மனிதன் தனக்காகப் பிறக்கவில்லை. அவன் தன்சமூகத்தொண்டிற்கே பிறந்துள்ளான். தன்னலமுடன் பிரிந்துவாழ்வது மனிதவியல்பல்ல. அன்புடன் சேர்ந்து வாழ்வதே மானிட தருமம். தேனீக்களைப்போல மனிதர் சமூக வாழ்வு வாழவேண்டும். தன்னலந்துறத்தலும், பேராசை விடுத்தலும், சுத்த வாழ்வும், சுதந்திர மனமும், சமரஸ உணர்ச்சியும் சமூக வாழ்விற்கு இன்பந்தரும். மக்களெல்லாம் ஒரு குலமாக வாழும் நாள் நெருங்குகிறது. அமைதிக்கு முன்னே புயல்போல மனிதர் சாந்தமாக மனவொற்றுமையுடன் வாழுநாள் போர், பொறாமை, வியாபாரப் போட்டி இவற்றோடு மாறுடுகிறது. இப்போது உலகு நீண்ட இரவில் அழுந்தியுள்ளது. நடுநிசி வந்துவிட்டது. பயங்கரமான போரும் பேராசையும், கொடுமைகளும் நிகழுகின்றன. இருட்டில் ஞானக்கண்ணின்றி ஜாதிமத பேதங்களால் மனிதன் வேறுபட்டுத் தன்னவரையே பகைக்கத் தொடங்கி விட்டான். இந்த நடுநிசி கழிந்ததும் இனிப்பகல் நெருங்கி வரும். தீமைகள் குறையும். அப்போது மக்கள் தாம் கடவுளின் ஓர் குல மைந்தர் என்று உணருவார்கள் ! தமது ஊனு

டைத் தேவைகளுக்குப் பிறரை இன்னல் செய்யார். தமது முயற்சியாலே அவற்றையடைவர். தேவைக்குமேல் தேடார். தன்னலம் விடுவர். ஐம்பிழைகளும் அறும். களிப்பும், நிறைவும், கற்பும், தவமும், அருட்பணியும் சிறந்து விளங்கும். ஊண் உறக்கம், ஊடல் கூடல், ஈனல் பேணல் என்னும் பொதுத் தொழில்களுக்குமேல் ஒவ்வொருவருக்கும் ஒரு கடவுட் பணி யிருக்கிறதென்றெண்ணி அதன்பால் ஈடுபடுவர். ஒவ்வொருவரும் உலகின் ஒவ்வொரு கையென வுழைப்பர். பிறர் சுகதுக்கம் தமது சுகதுக்கமெனக் கருதுவர். இயற்கைநெறியில் ஒழுகுவர். பிணியணுகாது வாழுவர். மனமொழிமெய்த்தூய்மையுடன் உலகிற்பழகுவர். இன்பம் நிறைவர். தன்னறிவொளிர்வர். தம்போற் பிறரென்றுணர்ந்து அன்பு செய்வர். தங்கள் மனமாலைகளை அன்பால் தொடுத்து இறைவீ உன் வெற்றி மாலையாகப் போடுவர்! வாழ்வில் சுத்தமும், சுதந்திர எண்ணமும், சமரஸமுங்கொண்டு மனிதர் சாந்தமான சமூகவாழ்க்கை வாழும் அந்நாளை நெருங்கச் செய்வாயாக! மனித சமூகத்தை நீ எதற்காகப் படைத்தாயோ அதற்காகவே அது வாழ்ந்து சுத்த பரிபூரணம் பெறுக!

---

## 20. சிக்கனம்

சிக்கனம் என்பது இடம்பத்தின் எதிரிடை. சிக்கனம் ஒருவனுக்குச் சுதந்திரமும், களிப்பும் தரும்; வறுமை, பேராசையை அகற்றும். தன் தேவைக்கு மேற் சேர்க்காதது சிக்கனம். தன் தேவையளவே தூய வழியில் ஈட்டி மகிழ்வது சிக்கனம். செலவு செய்ய வேண்டிய வழியில் தன் சக்திக்குத் தக்கவாறு இடம்ப

மின்றி, வெளிப்பகட்டின்றி, பிறர் நம்மைப் புகழவேண்டுமென்ற ஆசையின்றி, போட்டியின்றி, பொறாமையற்று, செலவிட்டு மீத்து வைத்தல் சிக்கனம். இது மனிதனுக்குப் பெரிய காப்பாளி. இதன்பால் மனிதன் விழித்திருப்பானாக.

சிக்கனமின்றி மனித சமூகம் வீண் உணவையும், வீண் உடையையும், வீண் செயலையும், வீண் பேச்சையும் விரும்பிக் காலங்கழிப்பது கொடிது, கொடிது. ஒவ்வொரு மனிதனுக்கும் மாதம் 10ரூபாய் போதுமானது. 7½ படி அரிசி, 3 படி பாசிப் பருப்பு, 1 படி கடலை, சிறிது காய்கறி கனிகள் இருந்தாற் போதும். இயற்கையுணவே மனிதனுக்கு ஏற்றது. மனிதன் பழந்தின்னியே. பராசக்தி! எனக்குச் சிக்கன வாழ்வைக் கொடுத்த உன்னை மெச்சுகிறேன். ஒரு அணுவிற்கு 10 பூவன் பழங்கள் விற்கின்றன. அரையணு பழம், முக்காலணு தேங்காய், காலணு கடலை இருந்தால் ஒரு நாள் உண்ணப் போதுமானதாகச் செய்தாய். நான் மிகுந்து செலவழித்தாலும் 2 அணுவுக்குமேல் எனது வயிற்றிற்காகச் செலவழிக்க முடியாத முறையைக் கற்பித்தாய். ஒரு நாள் எனது பேராசையால் மிகவும் உண்டால் மறுநாள் பட்டினியிருந்து அற்றது போற்றியுண்ணும் ஆற்றலைக் கற்பித்தாய். மாதம் 4 நாளாவது உபவாசமிருக்கிறேன். எனக்கு மாதம் 5 ரூபாய்க்கு மேற் செலவில்லை. மீதியை யெல்லாம் உன் பணிக்கே காணிக்கையாகச் சேர்த்து வைக்கிறேன். என் துயிலையும் சிக்கனஞ் செய்து விழித்திருந்து உன்னை தியானித்தும், நீ கட்டளையிட்டு எழுதத் தூண்டும் நூல்களை எழுதியும் கழிக்கிறேன். இரவிலும் எனக்கு விழித்த இன்பத்தைத் தரும் இறைவியே, என் ஆயுளை நான்

மிகவும் சிக்கனமாகவே எனக்கு உபயோகித்து, உன் பணிக்கே மீத்து வைக்கிறேன். என் பேச்சிலும் சிக்கனமாகவேயுள்ளேன். வாராவாரம் உன்னைச் சரண் புகுந்து மௌன சமாதியில், சகஜ நிஷ்டையில் ஆழ்ந்து ஆங்குத் தோன்றும் அழகுகளைப் பாடுகிறேன். நீ சிதாகாசத்தில் ஒலிக்கும் ஓங்காரத்திலுதித்த எனது கீதங்கள் புதிய யுகத்தின் மணத்தைப் பரப்பும்படி செய்தாய்! அவற்றை உலகு அறியும்போது அறியட்டும். பாடுவதும் பணி செய்வதும் எனது கடமை. எனது உடைகளிலும் தன்னுதவியும் சிக்கனமும் ஈந்தாய். உனக்கே என் வாழ்வு பலிதானம். தாயே, உன் இச்சை நிறைவேறட்டும்.

---

## 21. நாகரிகம்

நல்ல வாழ்வே நாகரிகம். எளிமையும் அடக்கமும் தன்னுதவியும் நாகரிகத்திற்கு அறிகுறி. நாகரிகமுள்ளவன் பிறர் கை பார்த்துப் பிழையான். தன் தேவைகளை உழைப்பால் அடைவான். தேவையளவு அடைந்ததும் திருப்தி யடைவான். இடம்பம் செய்து பொய் வேடம் புனையான். சிக்கனமாகவே வாழ்வான். அடக்கமாகப் பேசுவான். தன் வேலைக்காகப் பிறர் கையை எதிர்பார்க்க அவன் மனச்சாட்சி இடங்கொடுக்காது. உலகெங்கும் கடவுளின் கோயிலென்றெண்ணுவான். தீயது செய்யக் கூசுவான். அறக் கடவுள் அவனெதிரே நிற்கும். பிறர் நாணத்தக்கதைத் தான் நாணுவான். மனமொழி மெய்களில் தூய்மை யுறுவான். அழகுபோல் காட்டி அடிமைப்படுத்தும் பொருள்களில் அவன் மனம் சிக்காது. பரோபகாரமே அவன் மன

திற் குடியிருக்கும். இன் சொல்லும், சத்தியமும் அவன் நாவில் நடமாடும். அருட் பணியும் அஹிம்சையும் அவன் செய்கையில் வைகும். மக்களை நடமாடும் கோயில்களென அவன் மதித்து நடப்பான். தன் உடலைக் கடவுட் பணிக்காகவே அவன் சுமக்கிறான்.

நாகரிகம் என்பது ஒரு தெய்வீக குணம். அது அன்பை, உதவியை, ஒற்றுமையை உலகிற் பெருக்கி மனிதவாழ்வை அமர வாழ்வாகச் செய்யக் கூடியது. நாகரிகமற்ற நாடு காடினுங் கேடாகும். அதில் போரும், பொறாமையும், வேற்றுமையும், பாபமும் மல்கும். மனிதனை மனிதன் நம்பமாட்டான். காட்டு மிருகங்களினும் கேடான மூர்க்கத்தனத்துடன் பிறரைக் கொள்ளையடிக்க மனிதன் துணிவான். இரக்கமும் அன்பும் ஏட்டில்தான் இருக்கும். எளியவரை வாட்டுவான். வலியாரை வணக்கச் சூழ்ச்சி செய்வான். தான் வலியன், பெரியன், மற்றோர் தன்னினும் மெலியர், கீழோர் என்று மமதை கொள்வான். தன்னயப் பிசாசு அவனைப் பிடித்து ஆட்டும். தன் சரக்குகள் விற்பதற்கு மற்ற நாடுகளைச் சந்தை யாக்குவான். பொன்னும் பொருளுமே அவன் நோக்கம். அதை அடையும் வகையில் கொலைக்கும் அஞ்சான் ; மாடமாளிகையும், பொற்குவியலும், இடம்ப உடைகளும், மோட்டார் சவாரியும், வில்லைச் சேவகர் வைத்துக் கொள்வதும், தினம் விருந்துண்பதும், செருக்குடன் நடப்பதும், தொழிலை அவமதித்தலும், சாய்வு நாற்காலி வாழ்வும் நாகரிகமென மனிதன் தப்பெண்ணங் கொண்டுள்ளான். அதனால் உலகில் இடம்பமும், வறுமையும், உணவுப் பஞ்சமும், பாபங்களும் உலவுகின்றன. உண்மை நாகரிகம் உலகை வளர்க்கும்.

## 22. உழுதுண்ணல்

கலப்பையே உனக்கு வணக்கம்! நீயே அன்ன பூரணி! அம்மையின் ஆயுதம்! உன்னை மதிப்பவரே மனித சமூகத்தின் நலத்தை விளைப்பவர்! உன்னை அவமதிக்கும் மாக்கள் மமதைக்கு அடிமைகளே. உன்னைப் பிடித்துப் பூமிதேவியின் அன்பை நான் என்றும் அடைய அருள். பூமிதேவியின் மடுவினின்று பால் வளம் சுரக்க இயலும் கருவி நீயே! நீ வாழி!

தானுழுது அடைவதே சுத்தமான உணவு. ஒரு செய்யும், கிணறும், சிறு குடிலும், கால் நடையும் கொண்டு ஒரு குடும்பத்தார் உழுதுண்ணத் துணிவாராயின் அக் குடும்பத்தில் சீதேவி வாசஞ் செய்வாள். உழுதுண்பது மனிதன் கடமை. அதற்கு அவனுக்குச் சுதந்திரம் உண்டு. அது பாபமற்ற பணி. தன்னுதவிக்கு முதற்படி உழுதுண்ணலே.

பிறர் வயலில் பாடுபட்டு நெற்றி வேர்வை சொட்ட உழைத்து விளைவித்ததை ஒரு முதலாளி கைப்பற்றுகின்றான். அவன் சொன்ன விலைக்கு வாங்கிப் பிழைப்பது மனித தர்மத்திற்கு மாறானது. நமது வேலையைப் பிறர் செய்வதைக்காண நாம் வெட்கப்படவேண்டும். எனக்காக ஏழைக் குடியானவன் உழுவதைக் காணும் போதெல்லாம் எனது ஆண்மை நாணுகிறது. உழுதுண்ணலும், நூற்று நெய்தலும் அனைவருக்கும் பொதுத் தொழிலாகவே இருக்க வேண்டும். அப்போதுதான் உலகில் தொழில் மாண்பு துலங்கும்; தன்னுதவி பெருகும்; வியாபாரப் போட்டி விலகும். முதலாளி தொழிலாளிப் போராட்டம் முடிந்து போகும். சாந்த வாழ்வு சேரும். திருப்தி திகழும்.

உழுதுண்ண ஒரு செய் உள்ளவனே பாக்கியவான். சென்ற ஆண்டில் விளைந்ததைவிட இவ்வாண்டில் ஒரு பயிர் கூட விளைவித்தவனே மனிதருக்கு உண்மையான பணி செய்தவன்! உழவு மனிதனுக்குத் தக்க வேலை கொடுத்து அவன் மனத்தை நல்லாற்றி னுய்க்கிறது. அன்னமே பிரம்மம். அதுவே பிராணன். அதைக் கொண்டே மனிதன் சக்தி பெறுகிறான். அந்த சக்தியைக் கடவுள் கொடுத்த பணிக்கே மனிதன் உபயோகப் படுத்த வேண்டும். தன் வயிற்றிற்குப் போதியதைத் தூய வழியில் அடைந்தால்தான் மனிதன் தூய வாழ்வு வாழ முடியும். இப்போது உழுபவர் குறைவு. உண்ப வர் மிகுதி. உத்யோக மாயை உலகைப் பிடித்து ஆட்டு கிறது. மனிதவாழ்வு முழுதும் உத்தியோகச் சிறையில் அடைபட்டுத் தவிக்கிறது. மனித தர்மத்தை எண் ணவே நேரமின்றி மனமெல்லாம் சோற்றுக் கவலையுற் றிருக்கிறது. சோற்றிற்காகப் பாபத் தொழிலையும் அடி மைத் தொழிலையும் மனிதன் நாணாது செய்கிறான். மனச்சாட்சியை மனத்தழுக்கிற் புதைத்து விட்டான். அத்யாத்ம அறிவு அன்னமய கோசத்தால் மூடுண் டது. வருஷத்தில் சில மாதங்கள் பயிர் வேலையில் உழைத்தால் மீதியிருக்கும் மாதங்களை அத்யாத்ம வளர்ச்சியிலும், பரோபகாரத்திலும், நன்கு செலவழிக் கலாம். இதை யறியாது மனிதன் வெள்ளைச் சட்டை போட்டு மண்ணை யிழந்து மஞ்சள் மண்ணை அளவு கடந்து மதித்துப் போற்றுகிறான். வயல்களில் வேலை செய்தல் நம்மைப் பஞ்ச பூதத்தோடு ஒத்து வாழும்படி செய்கிறது. இயற்கை வாழ்வின் இன்பத்தைத் தரு கிறது. உடல்நலமும் மனக்களிப்பும் உண்டாக்குகிறது. வாழிய உழவு! வாழிய உழைப்பு!!

## 23. விளைக்கத்தக்க பயிர்கள்

மனிதன் பழந் தின்பவன். பழமும் கொட்டைகளும், தானியங்களுமே இயற்கையான மனித வுணவு. உணவும் உடையும், வீடும் மனித வாழ்விற்கு அவசியம். ஆதலின் அதற்குத் தக்க பயிர்களை விளைவிப்பதே மனிதன் கடமை. தென்னை, வாழை, மா, பலா, மாதுளை, ஆரஞ்சு முதலிய பழங்களை ஏராளமாக விளைவிக்கலாம். மரங்களைச் சிலகாலம் நன்கு பாதுகாத்து வளர்த்தால் அவை எப்போதும் பலனைத்தரும். நிலக் கடலை, பட்டாணி, கொத்துக் கடலை, மொச்சை, பயறு முதலிய கடலை வகைகளை விளைவிக்கலாம். இவற்றில் மனித உடலுக்கு வேண்டிய சத்துக்கள் அடங்கியுள்ளன. தானிய வகைகளில் புஞ்சைப்பயிர்களே உடலுக்குத் திடமுள்ளன. அவை விளைவிக்க எளிதாய் இயலுவன. நமது காலத்தையும் உழைப்பையும் வீணாக்காது பயனீவன. நஞ்சைப் பயிர்கள் விளைப்பதுசிரமம். அவைகளுக்கு நீரும் உழைப்பும் உரமும் மிக்க அதிகமாகவேண்டும். ஆதலின் தினை, கேப்பை, கம்பு, சோளம், முதலிய புஞ்சைத் தானியங்களை மனிதன் அதிகமாக விளைவிக்க வேண்டும். கிழங்குகள், காய்கறிகள் முதலியவற்றைப் போதுமட்டும் விளைவிக்கலாம். ஆடைக்காகப் போதிய அளவு பருத்தியை விளைவித்தல் நமது கடமை. சாக்குகளுக்காகச் சணல் விளைவிக்கலாம். இப்படி மனித சமூகத்திற்கு நேராக உபயோகப்படும் பயிர்களில் எல்லோரும் மனது வைத்து உழைத்தால் உலகில் உணவும் உடையும் அதிகப்படும். பஞ்சம் நீங்கும். உழைப்பும் பிழைப்பும் பெருகும்.

மனிதன் தன் உணவுடைக்குப் போதியவாறு விளைவித்துக் கொள்ளுக. நாட்டின் மூலப்பொருள்கள் நம் நாட்டுத் தேவைக்கு வேண்டிய கைத்தொழில்களுக்காகவே விளைவிக்கப்பட வேண்டும். நமது குடிசைத் தொழில்களைப் பெருக்குவதற்குப் போதுமான பயிர்களை வளர்ப்பது நமது கடன். அதுவன்றி பணத்தாசை கொண்டு பேராசையுடன் வேண்டியதற்கு மேற்பட்டு அயல்நாட்டு ஏற்றுமதிக்காகவே ஒரு பயிரை விளைவிப்பது பாபம். மனித சமூகத்தின் உடல் நலத்தைக் குறைத்து, வாழ்வைக் கெடுத்து, பொருளைக் கொள்ளையடிக்கும் பொல்லாப் பயிர்களை விளைவிப்பதும் கள் இறக்குவதும் பஞ்சமா பாதகத்திலும் பொல்லாதன. காப்பி, புகையிலை, கஞ்சா, தேயிலை, தீயிலை முதலிய பொல்லாப் பயிர்களை விவசாயி மனதிலும் எண்ணக்கூடாது. வெற்றிலைக்கு இறைப்பதை வாழைக்கு இறைத்தால் பலனுண்டு. பயிர் விளைவிப்பதிலும் பகுத்தறிவை உபயோகிப்பது மனித தர்மம். உலகம் முழுதும் உணவாலும், உடையாலும் நிறைந்து அவற்றின் கவலை மனித சமூகத்தை விட்டு விலகுக! நாம் உண்ணுவது எவ்வளவு சகஜமோ அதுபோலவே உணவை விளைவிப்பதும் சகஜமான தொழிலாகுக! மனிதனுடைய எண்ணம் உணவினும் உடையினும் உயர்ந்து இருள் மங்கி அருள் பொங்குக!

—

## 24. நூற்று நெய்தல்

இராட்டினம் மனித சமூகத்தின் க்ஷேமத்திற்காக ஏற்பட்ட ஒரு தெய்வீகக் கருவி. அது நமது மானத்தைக் காக்கும். நமது குடிகளுக்கு அதன் ஓங்காரம் மங்கள வாத்தியம் போன்றது. இராட்டினத்தை மதித்த இந்தியா நாடுகளில் உயர்ந்திருந்தது. இராட்டினத்தை விடுத்த இந்தியா வறுமையுற்று வருந்துகிறது. ஒவ்வொரு வீட்டையும் அலங்கரிக்க வேண்டிய கருவிகளுள் இராட்டினம் முதன்மையானது. தினந்தோறும் அரைமணி நேரமாவது நூற்றல் மனிதனின் நித்தியகர்மானுஷ்டானங்களில் ஒன்று. தன் ஆடையைத் தானே நூற்றுடுத்தும் பெருமையிற் "பீடுடையதில்லை." மனம் வைத்து மதக் கடமை யென்றெண்ணினுல் ஒவ்வொருவனும் தனக்கு வேண்டிய ஆடையைத் தானே நூற்றுவிடலாம். சக்கரம் பெரிதாய், உறுதியாயுள்ள ஒரு இராட்டினம் தேவை. அதில் கோட்டமொன்றும் இருத்தல்கூடாது. பஞ்சை வெயிலில் நன்கு உலர்த்தி மணையில் அரைத்துக் கொட்டை யெடுத்துப் பிறகு வில்லினுல் அடித்து மெல்லிய பட்டையாய்ப் போட்டு, இராட்டினக் கதிரில் நூற்கவேண்டும். நூற்க நூற்க மனத்திற்கு இன்பம் பயக்கும்.

பத்து இராட்டினங்கள் சரியாக நூற்ருல் ஒருதறிக்கு வேண்டிய நூலைத் தயாரிக்கலாம். ஒரு தெருவிற்கு ஒரு தறியாவது இருத்தல்வேண்டும். அதில் அத்தெருவுக்குவேண்டிய ஆடைகள் நெய்யப்படவேண்டும். தறித்தொழில் மனிதருள் ஒற்றுமையை யுண்டாக்கும். புலன்களுக்கு நல்ல வேலையைத் தரும். தன்னுதவியும், மானமான பிழைப்பும் தரும். நூற்ற நூலைக் கழிகளாக வீச

னத்தில் போட்டு, சக்கரத்தில் கழிகளை மாலையாக மாட்டிப் பின்பு ஆஸ்பலகையின் முளைகளில் வீசி, பாவு தயார் செய்யவேண்டும். பாவை விரித்துக் கஞ்சி வைப்பதுதான் சிரமமானவேலை. இழை முடித்தலும், இழைகளைச் சீர்பெற ஒழுங்குபடுத்தலும், கஞ்சியைப் பதம் பெறப் போடலும் நமக்கு நல்ல பயிற்சியைக் கொடுக்கும். பசை வைக்கும்போது மற்ருெர் துணையும் வேண்டியிருப்பதால் பிறருடன் நேசமாய் உறையும்படியே நேரும். பாவை சுண்ணும்பு நீரில் நனைத்தும் பிறகு பசைவைத்தலுண்டு. பசைவைத்த பாவை நன்கு உலர்த்தித் தறியிற் கோத்துப் பிறகு ஊடு நெய்யவேண்டும். திருவடத்தில் சுற்றிய கதர்நூலை இராட்டினத்தின் உதவியால் சிறு சிறு கண்டுகளிற் சுற்றி அக்கண்டுகளைக் குழலிற் புகுத்தி, தறியின் மிதியை மாற்றி மாற்றி யழுத்தி நன்கு நெய்யவேண்டும். நூற்றலைப் போலவே நெய்தலும் ஒவ்வொருவனுக்கும் இன்றியமையாதது. கொல்லையிற் சிறிது பருத்தி விளைத்தால் குடும்பமெல்லாம் ஆடையுடுத்தலாம். ஒரு தறிக்குச் சுமார் 4½ மனு நூல் இருந்தால் போதுமானது. சுயேச்சையின் முதற்படி நூற்று நெய்தல். அதோடு தொடர்ந்தது உழுதுண்ணல். இவ்விரு தொழிலும் மனிதருக்கெல்லாம் என்று பொதுத் தொழிலாகுமோ அன்றே மனிதசமூகம் வறுமைப் படுகுழியினின்று தப்பும். வறுமையைத் தப்பிப் பிழைத்தால்தான் வாழ்வு சிறக்கும்; அருட்பணியில் நெஞ்சு செல்லும்.

கையினுல் நூற்று நெய்த ஆடை கதராடை. இதன் சக்தி அபாரமானது. இது நம் நாட்டிற்கு 60 கோடி ரூபா ஆதாயமாக்கும். ஏழைகளுக்குக் கஞ்சி யூற்றும். சாதாரணமாக இந்தியனுடைய மாத வரும்

படி 2 ரூபாய்தான். நூற்பதால் 2½ ரூபா வரும். நெசவால் ஒவ்வொருவனும் 15 ரூபாயாவது ஈட்டலாம். நெசவால் பெண்களுக்குத் தகுந்த வேலை ஏற்படுகிறது. குடும்பம் தேனீயைப்போல உழைக்கிறது. மனத்திற்கு நல்ல வேலை ஏற்பட்டுத் தீய முயற்சிகள் கெடுகின்றன. கதராடையால் அடிமைத்தனத்தினின்று விடுதலையேற்பட்டு ஆண்மை பெருகும். கதர் நமது தேசீய உடை. எல்லாருக்கும் ஓர் உடை. அனைவர் ஒற்றுமைக்கும் அடையாளமான உடை. ஒழுக்கத்தை உயர்த்தும் உத்தம உடை. பல மதங்களுக்கு ஒரு கடவுள் போல் பல இனத்து மாந்தரும் மனமொப்பி யுடுத்தும் சமரஸங் குறிக்கும் ஒரு உடையே கதர். அது நமது வாழ்வைத் திருத்தும். கதரைக் காண்பதும் மனதை உயர்த்தும். அதை யுடுத்துதல் மனதிற்குச் சுத்தமும் சாந்தமுமாகும். எளிமையும், தூய்மையும், சுதந்திர உணர்ச்சியும், அன்பும், பக்தியும் ஒழுக்கமும் கதரணிந்தோரின் குணமாகி விடுகிறது. தான் நூற்று நெய்வது சுத்தக் கதர். வாங்கியுடுத்துவது விலைக்கதர். மில் நூல் கலந்தது போலிக்கதர். சுத்தக்கதர் உத்தமமான குணத்தைப் பெருக்கும். அன்பர்காள்! சுயமான கதரை நூற்று நெய்து அணிமின்! கை நூலாடை மெய் நூலாடை.

---

## 25. விளைவும் பயனும்

விளைப்பவன் ஒருவன், துய்ப்பவனொருவனா? உழைப்பவன் வருந்துகிறான். உழையாது உண்பவன் அதிகாரஞ் செலுத்துகிறான். தொழிலாளிக்குத் துயரும் பட்டினியுமாகவே விடிகிறது. முதலாளி மேனி குலுங்காது வயிறு வாடாது சுகிக்கிறான். முதலாளியும் உழைப்பாளியாக மாறவேண்டும். உழைப்பாளி நன்கு உண்ணவேண்டும். உழைப்பின் பயன் உழைப்பவர்க்கே சேரவேண்டும். உலகம் வாழக்கூடிய உழைப்பைச் செய்யும் மக்களுக்குச் சரியான கூலி கிடைக்கவேண்டும். தொழிலாளரின் குறைகள் நீங்கவேண்டும். ஏழைகளுக்கு உணவும் உடையும் பெருகவேண்டும். பணக்காரரின் நெஞ்சம் ஏழைகளுக் கிரங்கவேண்டும். உலகில் உழைப்பே செல்வமாகவேண்டும். சோம்பற் செல்வம் தொலையவேண்டும்.

ஒவ்வொரு குடிசையிலும் தொழில் வளம் பெருகி உழவும், நெசவும், நூற்றலும் அனைவருக்கும் பொதுத் தொழிலாகி, பணம் குறைந்து, பண்டமாற்று ஓங்கும் நாளில் உழைப்பு சிறக்கும். பணத்தின் செருக்குக் குறையும். நாளெல்லாம் வேலை செய்து உழுது, நீர் பாய்ச்சி, பயிர் வளர்த்துக் காவல் காக்கும் குடியானவன் உண்ட மிச்சமே பணக்காரனுக்குச் சேரும். மண்ணின் மாண்பும் பணத்தின் பாபமும் அப்போதுதான் விளங்கும். வெள்ளியோடுகளுக்கு உழைப்பு அடிமையல்ல. உழைப்போனுக்கே உலகம். இவ்வுண்மை நிலவி உலகின் மைந்தரெல்லாம் பூமிதேவியின் கைகள்போல் உதவும் காலத்தையே எதிர்நோக்கி உனது அருளுக்குக் காத்திருக்கிறோம். அம்மையே ஏழைக்கிரங்கு!

## 26. சாவும் சடங்கும்

ஆவியானவனுக்கு அவன் மைந்தர் செய்யவேண்டிய கடமைகள் சுருக்கமானவை, உலகிற்கு நல்லவை. தந்தையின் பெயரால் ஒரு கிராமப் பள்ளிக்கூடம் கட்டலாம். மாணவருக்கு வித்யாதானஞ் செய்யலாம். ஒரு சடங்கிற்குச் செலவாகும் 500 ரூபாயைக் கொண்டு எத்தனை இராட்டினங்களும் தறிகளும் வாங்கலாம்! அப்பணத்தைக் கொண்டு குடியானவனுக்கு உழவுமாடு வாங்கித்தரலாம். மதப் பிரசாரங்களுக்கு வேண்டிய உதவி செய்யலாம். நல்ல நூல்களைத் தன் தந்தைக்கு அர்ப்பணித்து வெளியிடலாம். இவ்வகை செலவானால் உலகிற்கும் தனக்கும் புண்ணியமுண்டு. அந்தோ! இப்போது புரோகிதர், ஒருவன் இறந்துவிட்டால் அவன் மைந்தரைப் படாதபாடு படுத்துகின்றனர். பணத்தை உறுஞ்சுகின்றனர். 5 பேர் சாப்பிடக் கூடிய அன்னத்தைத் தினந்தோறும் கண்ட தண்ணீரையெல்லாம் ஊற்றிச் சமைத்து தயிரையும், பாலையும், நெய்யையும் கொட்டி வீணாக்குகிறார்கள். அவ்வளவையும் சேர்த்து வைத்து ஏழைகளுக்கு உணவளித்தாலாவது புண்ணியமுண்டு. இந்தச் சடங்குகள் செய்யும்போது மந்திரங்களோடு அவர்கள் பேசும் ஆபாசப் பேச்சுக்கள் அருவருப்பை உண்டாக்குகின்றன. அப்பேச்சுக்களையும் அங்கு நடக்கும் அசிரத்தையான காரியங்களையும் கண்டால் நமது பிதுருக்களின் சாபமே நமக்கு வரும். பெண்களின் இழவு நாடகமோ பெரிது! இவற்றையெல்லாம் நிறுத்தி ஆவிபிரிந்தவனின் ஞாபகத்திற்காக ஏதாயினும் சக்திக்குத் தக்கபடி நிலையான தர்மம் செய்வதே சிறந்த கடமை. பொடிபோடுந் தந்தையாயிருப்பின் மைந்

தன் பொடியை நிறுத்தி தந்தையின் பிழைகளைத் தன்னி டம் தவிர்த்து நிற்பதே அவன் செய்யும் கடன். தந்தை அருட்பணியில் காலங்கழித்திருந்தால், அப்பணியைத் தானும் விடாது முயன்று செய்வதே தனயன் பணி. தந்தையின் ஞாபகத்திற்காக ஆண்டுதோறும் தன் சக்தியானுசாரம் ஏழைகளுக்கு அன்னமிடலாம். அன்று முழுதும் பக்தியோடிருந்து தன் தந்தையின் சாம்பலை வணங்கி அதன் முன் தன் குற்றங்களை வருந்தி, "தந்தையே தங்களுக்குத்தக்க மைந்தனாகத் தங்கள் பெயர் விளங்க நான் உலகில் நடந்து கொள்ளும்படி அருளுவாய். உனது ஆவி எவ்வுடலிற் புகுந்து எங் கிருப்பினும் சாந்தத்துடன் அருட்பணி புரிந்து உல கைக் காக்கட்டும்" என்று வணங்கி தியானஞ் செய்ய வேண்டும். அன்று நிச்சயமாக உபவாசமிருக்க வேண் டும். பிழைவருந்தலும், சுத்தமுறலும், ஈதலும், பெயர் விளங்க வாழுதலும், பக்தியுமே நாம் நமது முன்னோருக்குச் செய்யவேண்டிய கடன். மாரடித்த லும், மூலையில் முகத்தை மூடி அழுதலும், வீண் செலவு செய்தலும், பொருள் புரியாத மந்திரங்களை முணு முணுப்பதும், மாயையே. ஆவி பிரிந்தவன் இருந்த வீட்டை சுகாதாரத்திற்காக நன்கு மெழுகி அதில் அகிற்புகையும், சூடமும், சாம்பிராணியும் கொளுத்திச் சுத்தஞ்செய்ய வேண்டும். அவன் உடுத் திய ஆடைகளைக் கொளுத்திவிட வேண்டும்.

பகவத்கீதை இரண்டாம் அத்யாயம் படித்தல் நலம். செத்தவனைச் சாகப் போகும் மனிதன் தூக்கிச் செல்லும்போது தன் வாழ்வை வீணாக்காது அருட் பணியில் செலவழிக்க உடனே ஒரு வீராவேசம் அவனுக்குப் பிறக்கவேண்டும். விசனமெல்லாம் செத்

தவன் விட்டகடமையைச் செய்ய சிறந்த வீரமாக வேண்டும்.

அருட்பணிக்கு ஆவியீந்தோர் அமரர். அவர்களுக்கு நமது சடங்குகளின்றியே நற்கதியுண்டு. தம் வாழ்வைப் பாபத்திற் கழித்தோர் அப்பாபத்தை அனுபவித்தே தீரவேண்டும். அதற்குப் பரிகாரமில்லை. இவற்றை யெல்லாம் நன்குணர்ந்து எதற்கும் அஞ்சாது சாவை சாதாரண நிகழ்ச்சியென ஏற்றுக்கொண்டு மனிதன் தன் வினையைச் செய்வானாக! தன்னையறிந்தவன் சாவிற்கு அஞ்சான். சாவையறிந்தவன் சடங்கு விரும்பான்.

---

## 27. சட்டை கழற்றல்

சாவென்பது சட்டை மாற்றம். ஏதோ ஒரு அருட்பணி செய்ய நமது ஆன்மா இவ்வுடற் சட்டையை மாட்டிக்கொண்டு உலகரங்கில் வாழ்வென்னும் நாடகத்தை நடிக்கிறது. தனது நாடகம் முடிந்ததும் இவ் வேஷவுடலைக் களைந்து தனது இயற்கைக்குத் தக்க வேறுடல் பூணுகிறது. ஆயுளென்பது நமது வினையைச் செய்ய நமக்குக் கொடுக்கப்பட்ட காலம். அக்காலத்திற்குள் நாம் அவ்வினையைச் செய்யாவிடின், காலமணி யடித்ததும் எழுந்து சென்று மறு பிறப்புற்று விட்ட குறையைத் தொடங்க வேண்டும். இந்த ஊனுடலைக் கொண்டு ஒருவரும் ஆயுளுக்குமேல் வாழமுடியாது. உள்ளத்தாற் பொய்யாதொழுகி, தான் செய்யும் அருட்பணியால் உலகின் உள்ளத்தில் வாழ்வதே சாசுவதமான வாழ்வு.

நமக்குச் சாவில்லை. நாம் அழிவதில்லை. நம்மை வாள் சிதைக்காது. தீ எரிக்காது. நமது உடல் பஞ்ச பூதங்களாலாகியது. அதைச் சேர்ந்த பூதங்கள் பிரிந்து மறுபடி வேறுவிதமாகச் சேர்ந்து மற்றொரு உருவாகின்றன. பனிக்கட்டி நீராகவும், நீர் ஆவியாகவும் மாறுகிறதேயொழிய அழிவதில்லை. அதுவும் ஒரு சிறந்த தொண்டிற்காக நமது யாக்கையை விடுத்தால் நாம் உலகில் என்றும் வாழலாம். பிறர்க்காக வாழ்வதே இறவாமை. தன்னலச் செருக்கில் வாழ்வதே சாவு. உலகத்தால் மறக்கப்பட்டவரே இறந்தவர். உலகால் வாழ்த்தப்பட்டவரே அமரர். தன்வினையை மறந்து உலகில் துஞ்சினர் செத்தாரே. தன்பணியை யறிந்து ஆற்றினர் வையத்தும் வானத்தும் தெய்வத்தை யொப்ப வாழ்பவர். ஆதலின் தன்னயமற்ற அருட்பணியே சாகா மருந்து. அம்மருந்தை உண்டால்தான் பிறவிப் பிணி தீரும். அம்மருந்தை அடையும் வரையில் மனிதன் பிறப்பிற்கும் இறப்பிற்கும் அலைய வேண்டியதுதான். பரோபகாரம் இதம் சரீரம்.

மனிதா, நீ சாவிற்கு அஞ்ச வேண்டாம். உன்மடமைக்கும் சோம்பலுக்குமே இரங்கு. அந்தோ! சாவின் மருமத்தை யறியாது மாந்தர் பிரமாதஞ் செய்கின்றனர். மண்ணைப் பிடித்து முதலில் மனிதனாகச் செய்யப்பட்டது. அது உபயோகப்படாவிட்டால் அந்த மண்ணைப் பிரித்து மறுபடி பிசைந்து மற்றொரு உருவாக ஆக்கப்படுகிறது. உன் மைந்தன் இறந்தானென்று வருந்துகிறாய்; அவன் இவ்வுலகிலேயே மறுபடி பிறந்து வேறிடத்தில் வாழ்கின்றானேயொழிய இறக்கவில்லை. உன் மைந்தன் வேறிடத்தில் வெகு தூரத்தில் வேலைக்குப் போயிருக்கிறா

னென்று எண்ணிக்கொள். இறப்பதும் பிறப்பதும் உன் இஷ்டமல்ல. அவனவன் வினையைப் பொறுத்தது. வினைகளையாளும் பராசக்தியின் மனத்தைப் பொறுத்தது. ஆதலின் மனிதா, உன் வினையைச்செய். மனிதனே, உலகான போர்க்களத்தில் நீ செய்யவேண்டிய வேலைஅபாரமானது. உனக்கு அடுத்தவன் போரில் விழுந்தால் நீ அவனுக்காக அழுவது பாபம். அழுகையில் பொழுது போக்கி உன் வேலையை விடுப்பது கொடிய பாபம். இறந்தவன் ஆவி திருப்தியாகும்படி அவன் செய்ய வேண்டிய நல்வினையையும் சேர்த்துச் செய்.

அந்தோ, செத்த வீட்டில் என்ன ரகளை! கட்டியழுவதும், முட்டி யழுவதும், கொட்டி யழுவதும், அடித்து அலறுவதும், எல்லாம் ராக்ஷச மாயை! மனிதன் இறந்தானென்பது கடவுள் வடிவாய் அவனுள் இருக்கும் ஆன்மாவை இன்னற்படுத்தியதாகும். கடவுளின் கட்டளையால் ஆவி பிரிந்தது. "பாவி தெய்வம் உயிர் மாய்த்ததே" என்று அழுவது கடவுளின் கட்டளைக்கு அபசாரம் செய்ததாகும். இறந்தவனுக்குப் பெரும்பணம் செலவழித்துச் சடங்குகள் செய்வதும், தானஞ் செய்வதும் வீண் அஞ்ஞானமாகும். அவன் வினைக்கு அவன் பிறந்தான். அவன் வினைக்கு ஆன ஆயுள் முடிந்தது, இறந்தான்; வினை பாக்கி யிருந்தால் மறுபடி பிறப்பான், என்ற உண்மையை யறிந்தோர் வீணான சடங்குகளை விரும்பார்கள். பாழும் பணமிருந்து மனிதனை ஆட்டிவைக்கிறது. பணமில்லாத ஏழைகள் என் செய்வர்? பணமும் புரோகிதனும் சேர்ந்து, ஆட்டிவைக்கும் மாயமே இச்சடங்குகள்.

சாகாமுன் மனிதன் உண்மையாகத் தனது பாபங்களை நினைத்து வருந்தவேண்டும். கடவுளிடம் தனது

பாபங்களுக்கு மன்னிப்புக் கேட்டுத் தன்னை அவனடியிற் சேர்த்துக்கொள்ளும்படி தோத்திரஞ் செய்ய வேண்டும். வாழ்வெல்லாம் ஒரு மாதிரி கழிந்தாலும் சாகுந்தருவாயில் தன்னயமற்ற ஒரு பணியைச் செய்யலாம். செல்வமிருப்பவன் தனது செல்வத்தில் ஒரு பங்கை நாட்டின்'கல்விக்காவது,தொழில் அபிவிருத்திக்காவது,பொதுஜன ஊழியத்திற்காவது தரலாம். அஃதற்றவன் தனது மைந்தரையாவது அருட்பணிக்கென அர்ப்பணஞ்செய்யலாம். ஒன்றுமற்றவன் 'கடவுளே இன்னொரு பிறப்பிலேனும் நான் பிறர்க்காக வாழ அருள்புரிதி' என்று வணங்கலாம். இதுதான் பிராயச்சித்தம். இது சாகப்போகிறவன் மனத்தில் நிகழவேண்டும். பக்கத்திலுள்ளவர் அப்படி நினைக்கும்படி அவனைத் தூண்ட வேண்டும். அர்த்தம் புரியாத மந்திரத்தை முணுமுணுப்பதில் பயனில்லை. மனிதன் ஆவி பிரிந்த பின்பு அடித்து அலறுதல், கட்டியழுதல் முதலான அமளியொன்றும் கூடாது. அம்மனிதன் தர்மவானுயிருப்பின் அவன் தர்மத்தை விடாது செய்து வருவதே அவனுக்குச் செய்யவேண்டிய சடங்கு. அவன் பாபியாயின் அவன் தீய குணங்களைத் தவிர்ப்பதே மக்கள் செய்யும் சிரார்த்தம். ஆவி பிரிந்தவுடன் பிணத்தைப் பாடையில் கட்டி சுடுகாட்டிற்குக் கொண்டு போய்ச் சாம்பலாக எரித்து அந்தப் புதை குழியின்மீது ஒரு கல் நாட்டி அதில் ஆவி பிரிந்தவன் பெயரை எழுதிவைக்கலாம். அவன் சாம்பலிற் சிறிதை ஒரு குப்பியிலடைத்து அவனுடைய ஞாபகார்த்தமாக வீட்டில் வைத்திருக்கலாம். அல்லது உரம்போட்டு மரம் வளர்க்கலாம். அதைக் காணும்போதெல்லாம் நமது உடல் இப்படிப் பிடிசாம்பலாகுமுன் நாம் நல்வினை

யைச் செய்து வாழ்வைப் புனிதப் படுத்திக்கொள்ள வேண்டுமென்று கடவுள் சாட்சியாக எண்ணி, இறந்தவன் குற்றங்களைத் தள்ளி, அவன் குணங்களைக்கொண்டு ஒழுகவேண்டும். நாயகனிறந்த பெண்கள் தலைமயிருக்காக மாரடிக்க வேண்டியதில்லை. வயதானவர்களாயிருந்தால் தன் நாயகனிடம் வைத்த அன்பைக் கடவுளிடம் வைத்து, தூயபிரமசரியம் பூண்டு ஆருயிர்ப்பணி செய்வதே தன் நாயகனுக்குச் செய்யும் சிறந்த கருமம். இளங் கைம்பெண்கள் மறு விவாகஞ் செய்து கொள்ளலாம். ஆனால் அவர்கள் சிறந்த ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து, தனது முதல் நாயகனின் ஆவியே இரண்டாம் நாயகனாக வந்ததென்றெண்ணி பத்தினியறம் பிடித்தொழுகவேண்டும். நாயகனை இழந்த பத்தினியர் கல்வித்துறையில் தேர்ச்சி பெற்று, பிரமசரியம் பூண்டு, அருட்பணி புரிவதே மேல். கைம்மைக்கும் துறவுக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. கைம்பெண்கள் மூலையில் அழுவதை விடுத்து, பற்றை உதறி அறப்பணி செய்ய முன்வருவது மேல்.

---

## 28. அறிவு

அறிவே விளக்கு ; அதைக் கண்டவுடனேயே மனத்திருள் மறையும். பிணியை நீக்குவதே மருந்து. இருளை நீக்குவதே அறிவு (கல்வி) எனப்படும். முன் ஜன்ம வாசனையாலும், பெற்றோரினாலும் தனது சுற்றத்தாலும், பழக்கத்தாலும் மனிதன் மனதில் பல ஆபாசமான எண்ணங்கள் புகுந்து தீய செய்கைகளுக்குத் தூண்டுகின்றன. சினம், வெறி, பொறாமை, திருட்டுத்தனம், பகை, அடிமைத்தனம், போர்,

பேராசை, பிறருக்குத் தீதுசெய்தல், சோம்பல், நாணமை, காமம், லோபம், மதம் முதலியன மனித வாழ்வைக் கெடுத்துவரும் சில தீய குணங்கள். இவை ஆத்மவடிவான கடவுளினின்று மனிதனைப் பிரித்து அல்லற்படுத்துகின்றன. மடமை நடுநிசி வழிப்பறிக்காரன் போலும். அது புத்தியை இருட்டில் எங்கேயோ அழைத்துச் சென்று, அதை அலைத்து அதனிடமிருக்கும் விஞ்ஞானத்தைக் கொள்ளைகொண்டு அதைத் துயரிலும் கவலையிலும் ஆழ்த்துகிறது. தீயவற்றில் சிக்கவைத்து மனதைக் கடவுளிடம் செல்லாது கட்டிவிடுகிறது. இக்கள்வனையே மாயை என்போம். இவனே நம்மையெல்லாம் தகாத நெறியில் தவிக்க விடுவோன். இம்மாயையை வெல்லும் ஆயுதமே கல்வி. இவன் பதுங்கும் பொய், பொறாமை, பேராசை முதலிய புதர் முளைத்த காமக்காட்டைச் சிதைப்பதே கல்விப்பயிற்சி. நம்முள்ளிருக்கும் கடவுளை அறிவித்து அவனை அடைய புத்திக்குச் சாரதியாய் விளங்குவதே அறிவு. கல்வி மனித வாழ்வைப் பரிசுத்தப்படுத்தும். மனத்தில் அன்பு, அருள், தூய்மை, எளிமையைப் புகுத்தும்; சொல்லில் வாய்மையையும், தைரியத்தையும், இனிமையையும் சேர்க்கும்; செயலில் பரோபகாரத்தையும், நேர்மையையும், சுதந்திரத்தையும் நாட்டும். கற்றவன் பிறர் வருந்தத் தான் வருந்துவான். பிறர்க்கெனவாழுவான். பிறர் நாணத்தக்கதைத் தான் நாணுவான். இடம்பம் செய்யான். தன்தேவைக்கு மேலாகச் சேர்க்கமாட்டான். உணவிற்கும், சிற்றின்பத்திற்குமே தன் வாழ்வைக்கொட்டி வீணாகமாட்டான். தன் வாழ்வின் வினையறிந்து உலகமுய்யும்பொருட்டு அதைச் செய்வான். சிறுமை, பொறாமை, வஞ்சகம் இவை

அவனை அணுகா. தன் உடல் தேவைகளைத் தன் னுழைப்பால், பிறருக்கு அடிமைப்படாது, அடைந்து கொண்டு நேர்மை கடைப்பிடிப்பான். தன் மானத்தை யும், ஆயுளையும் அடிமை உத்தியோகத்திற்கும், பணஞ் சேர்ப்பதற்கும் ஆளாக்கமாட்டான். பேராசைகொண்டு பிறர் பொருளை வெளவான். உணவிலும், துயிலிலும், சிற்றின்பத்திலும் மிதமாய் இயற்கை நெறியை யறிந்து நடப்பான். தன்னுள் இருக்கும் அழிவற்ற தெய்வீக சக்தியை எண்ணி உடலுக்கு வரும் இன்னல்களைப் பாராட்டாது உலகிற்கு இதஞ்செய்வான்.

அத்தகைய பெரியோனுக்கு எழுதப்படிக்கத் தெரி யாமலிருப்பினு மிருக்கலாம். முகமதுநபி, ஏசுநாதர், இராமகிருஷ்ண பரமஹம்ஸர், முதலியோர் எந்தக் கல் லூரியிற் கற்றனர்? உலகம் முழுவதையும் அவர்கள் மனத்திலடைத்தனர். மனதே அவர்களுக்குக் கல்லூரி. நமது வாழ்க்கை முழுதும் ஒரு பள்ளிக்கூடமே. அப் பள்ளிக்கூடத்திற்கு நமது ஐம்புல அனுபோகங்களே பாடப்புத்தகம். புத்தியே ஆசான். மனதே தோழன். நற்குண நற்செய்கைகளே பயிற்சி. கடவுட் டன்மை யடைவதே அக்கல்வியின் முடிவு. தன்னையறிந்து தனக் கும் கடவுளுக்கும் நடுவிலுள்ள வினை வேலியைத் தாண்டி, அவனோடொன்றும் இன்பத்தை யளிப்பதே கல்வி. வினைவேலியைத் தாண்டவே நமக்கு ஒரு ஆயுட் காலம் தரப்பட்டுள்ளது. உலகம் கடவுள் ஆலயம். அவ் வினையாலே நாம் உலகில் பிறந்ததற்கு ஒரு அடையாள மான நலஞ்செய்தல் முடியும். அவ்வினை ஊண், உறக் கம், ஊடல், கூடல், ஈனல், பேணல் முதலிய பொது வான தன்னலவினையினும் உயர்ந்தது. அதைச் செய்தே தீரவேண்டும். பிறகே நாம் நமது எஜமானுகிய கடவுளைக்

காண லாயக்காவோம். அவ்வினையை ஆற்றும் வல்லமை அளிப்பதே உண்மைக் கல்வி. அவ்வினையைச் செய்ய உடல்வலிமையும், மன வலிமையும், குண வலிமையும் வேண்டும். உடல் வலிமைக்கு உடையுணவுத் தேவைகளை நேர்மையுடன் அடைவதும் நல்லொழுக்கமும் வேண்டும். தன் உடையுணவை மானமுடன் ஈட்டத் தொழிலறிவு வேண்டும். ஆதலின் மனிதன் முதலில் தன் அன்னமய கோசத்தின் கவலையை ஒழிக்க ஒரு தூய தொழிலைப் பயிலவேண்டும். மூளையை உபயோகிக்கத் தெரிவதன் முன்னே மனிதன் தன் தேகத்தையும், மனதையும் உபயோகிக்கக் கற்க வேண்டும். ஆதலின் தொழிற் கல்வியிலேயே மனிதனுடைய பயிற்சி தொடங்குகிறது. அக்கல்வியின் பயிற்சியால் மானமாக ஒவ்வொருவனும் தன் உடையுணவை யீட்டக் கற்ற பிறகு மூளைக்குப் பயிற்சி தொடங்கவேண்டும். நூற்றல், நெசவு, பயிர்த்தொழில், கொல்லவேலை, தச்சுவேலை, வீடுகட்டல் முதலிய தொழில்களில் எவ்வளவோ குணவுறுதியும் மனப்பயிற்சியும் ஏற்படுகின்றன. விடாமுயற்சி, பொறுமை, புலன்களுக்கு நல்ல பயிற்சி முதலிய குணங்கள் ஏற்படுகின்றன. கல்விக்கு இரு கண்கள்: தொழிலும், ஒழுக்கமும். இவ்விரண்டும் அற்றது கல்வியேயல்ல.

கல்வியென்பது புத்தகத்திலேயேயில்லை. இயற்கையின் புத்தகமே இன்பான நூல். கடவுளின் புத்தகம் உலகமெங்கும் விரிந்துள்ளது. மனிதன் எழுதிய நூல்களினின்று நாம் தெரிந்துகொள்வதைவிட நமது புலன்களைப் பயன்படுத்தி உலகப் புத்தகத்தினின்று அதிகமாகத் தெரிந்துகொள்ளலாம். அறிவதே அறிவு. முயன்று புகட்டப்படுவது முற்றும் அறிவாகாது. நம்

வாழ்க்கையைத் தூயவழியில் நிலை நிறுத்த வேண்டிய தற்காகவே கற்கிறோம். நமக்கு முன்னே தோன்றிய பல பெரியோர்கள் தங்கள் வாழ்வை எப்படித் தூய நெறியில் திருப்பி யிருக்கின்றனர் ; அதை மனித வர்க் கத்திற்கு எப்படிப் பயன்படுத்தி யிருக்கின்றனர் என்ப தையே நூல்கள் அறிவிக்கின்றன. கல்வி, சங்கீதம் போன்றது. சங்கீத நூல்களை மட்டும் படித்தால் பாடக ளுக முடியாது. தனது தொண்டையைப் பல ராகங்க ளில் அப்யாசப்படுத்த வேண்டும். அதுபோல புத்தகங் கள் படித்துவிட்டால்மட்டும் போதாது. அதன் வழியில் வாழ்வை அமைத்துப் பயிலவேண்டும். கல்வி யென் பது தர்ம சாதனம். புத்தகங்களை மட்டும் படித்து மன தில் குவித்து, அருளுக்கும் அன்புக்கும் இடமில்லாத வன் படித்த விலங்காவான். விலங்கு போன்று வாழ்ப வன் மனித விலங்கு; படித்தும் விலங்கு போன்று வாழ் பவன் படித்த விலங்கு மனிதன். எண்ணும் எழுத்தும் வேண்டியவைதான். ஆனால் இவையே தனியாகக் கல்வி யாகா. மூளைப் பயிற்சி, தேகபலம், தொழிலாற்றல், ஒழுக்க வொளி, இன்ப நுகர்ச்சி இவ்வைந்தும் கல்வி யின் பஞ்சப்பிராணன். இவ்வைந்தில் ஒன்று குறைந் தாலும் கல்வி பூரணமடையாது. இவ்வைந்து பிரிவுகள டங்கிய கல்வியின் நோக்கம் உலகில் நாம் வந்த வினை யறிந்து அருட்பணி புரிவதே.

நல்ல புத்தகங்கள் மனிதனுக்கு நல்வழியைக் காட்டமட்டும் செய்யும். தீய புத்தகங்களும் எண்ணிறந் தன உள. புனிதமான நூல்களையே மனிதன் கற்க வேண்டும். தன்னலந்துறந்து, தெய்வத் தன்மை யடைந்து, பேரின்ப நிலையினின்று தூய்மையடைந்த பெரியோர் உள்ளத்திற் பழுத்த உரைகள் வேதமாகும்.

வேதம், உபநிடதம், குரான், பைபிள், குறள், கீதை முதலிய அறநூல்கள் அத்தகையன. அவைகளே மக்களுக்கு வழிகாட்டிகள். அவற்றையே மனிதன் பெரும்பாலும் கற்றுத் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். தொழிற்கல்வியைப் புகட்டக்கூடிய புத்தகங்களைக் கற்கலாம். தொழில், ஒழுக்கம், இவையிரண்டிற்கே நூல்கள் எழுதும் ஆற்றலைக் கடவுள் ஈந்தார். அவ்வாற்றலைக் கண்டபடி பயன்படுத்தி மனித சமூகத்திற்குத் தீங்கிழைக்கும் மாக்கள் பாபத்தை அடைகின்றனர். மனித மாபிற்கு நல்வழியைக் காட்டும் சுட்டுவிரலே பேனு.

ஆண் பெண் இருவருக்கும் கல்வி வேண்டும். இருவரும் மனித சமூகத்தின் இரண்டு கண்கள். ஒரு கண் குருடாயிருக்க யாரேனும் சம்மதிப்பார்களா? இருவருக்கும் ஏற்ற (அவரவர் இயற்கைக்குத்தக்க) கல்வியைப் புகட்டவேண்டும். எண், எழுத்து, அறநெறிப் பயிற்சி, இவை இருபாலருக்கும் பொது. ஆண்களுக்கு முரட்டு வேலைகளும் பெண்களுக்கு மென்மையான வேலைகளும் இயற்கை. தேகப்பயிற்சி இருவருக்கும் அவசியம். தொழிற் கல்வியை இருவருக்கும் ஏற்றபடி கற்பிக்க வேண்டும். நூற்றல், நெய்தல், பயிர்த்தொழில் இம்மூன்றும் இருபாலருக்கும் பொது. மரவேலை, இரும்பு வேலை, வீடு கட்டுதல் முதலியன ஆண்களின் வேலை. பாட்டு, சித்திரம், கூடை முடைதல், அலங்கரித்தல், பிள்ளை வளர்த்தல். வீட்டு நிர்வாகம் முதலியன பெண்களுக்கு அவசியம் தெரியவேண்டியவை.

---

## 29. கிராமம்

கிராமம் தேசத்தின் வித்து. கிராமமெப்படி தேசமப்படி. வீடுயரப்பாடியுயரும். பாடியுயர நாடு உயரும். நாடு உயர நானிலமுயரும். வறுமையும் அடிமையும் அற்றிருப்பதே ஒரு நாடு உயர்ந்ததற்கு அடையாளம். படிப்பும் கைத்தொழிலும் பெருகினுல்தான் நாட்டின் மடமையும் வறுமையும் நீங்கும். படிப்பும் தொழிலும் அடங்கியது கல்வி. அறிவு வளர்ச்சியும், ஆத்ம சக்தியும் உடல் வலிமையும், தன் ஜீவனத்தை நேர்மையுடன் ஈட்ட ஒரு தொழில் திறமும், தன் வாழ்விற்கு இன்பமூட்ட சங்கீதம் சிற்பம் போன்ற கலை யறிவும் கல்வியாகும். இவ்வறிவை யெல்லாம் சமூக ஊழியத்தில் பயன் படுத்தி நமது ஆன்மாவையும் உயர்த்தி தேசத்தையும் உயர்த்தி கர்மாவையுஞ் செய்து கடவுளையும் அடைவதே, கல்வியின் நோக்கம். தன் முன்னேற்றத்திற்கும் ஜீவனச் சுதந்திரத்திற்கும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் பயன்படாத படிப்பு கல்வியே யல்ல. கல்வி புத்தகத்தில் மட்டுமல்ல ; பெரும்பான்மையும் அனுபவத்திலேயே உள்ளது.

கிராமங்கள்தோறும் நல்ல கல்விச் சாலைகளை அமைத்தால் தேசத்தில் கல்வி வளம் பெருகும். கிராமப் பள்ளிக்கூடங்களே தேச மூளையின் அறைகள். ஆதலின் அப்பள்ளிக்கூடங்களைத் திறமையுடன் அமைக்கும் வழியை அனுபவத்தில் அறிந்தபடி விளக்குவாம்:

—

## 30. இளந்தமிழ் வீரர்

எழிலுந் திருவும் இளமையினிடமே யுள்ளன. இளமையே ஒரு நாட்டின் சக்தி. வீரம், அழகு, இன்பம், சக்தி, தேசு, தைரியம், சுத்தம், சுதந்திரம் என்னும் குணங்கள் இளமை யென்னும் சொல்லில் ஒலிக்கின்றன. இக்குணங்களே உருவாய்த் திரண்ட வாலிபர்கள் கையிலேயே நம் நாட்டின் முன்னேற்றம் உள்ளது. வீட்டிற்கு உயிர் இனிய மக்களேபோல் நாட்டிற்கும் உயிர் வீர வாலிபர்களே. இவ்வீர வாலிபரே ஒவ்வொரு நாட்டின் முன்னேற்றத்திற்கும் காரணமாக நிற்கின்றனர். இவர்கள் கிளர்ச்சியே நாட்டின் விடுதலை. தங்கள் இளமையால் நாட்டை இளமைப்படுத்தி நாட்டின் வாழ்விற்கு நரம்புகளாக விளங்குபவர் இளைஞரே. இளைய சக்தியே இங்கிலாந்திற்குச் சுதந்திரமீந்தது. பிரான்ஸைக் குடியரசாக்கியதும் இளைஞர் சக்தியே. நாட்டிற்காகத் தம் உடலையும் உயிரையும் ஈந்தவர் இளைஞரே. ஜப்பான் முன்னேறியதும் அறிவு மிக்க இளைஞராலேதான். சீனதேசத்தின் சுதந்திரக் கொடியைத் தாங்குவதும் இளைய மாணவரே. மஹாத்மாவின் இணையற்ற இயக்கத்திற்கு உயிராயிருந்தவர் பள்ளி நீத்த இளைஞரே. இந்திய சுதந்திரக் கிளர்ச்சியை வீரமுடன் தொடங்கி அதன் வழியில் வந்த இடும்பைகளை யெல்லாம் வீரமுடன் பொறுத்து, சிறையிலும் தூக்குமரத்திலும் பாரததேவிக்காக ஆத்ம தியாகம் செய்த வீரர்கள் யார்? இளைஞரே. இனி நமது எதிர்கால வெற்றியும் இளைஞரிடமே யுள்ளது.

உலகம் புத்துயிர் பெற்று வருகிறது. மனிதரின் நடையுடைபாவனைகளும் மதக்கொள்கைகளும், நாளுக்கு

நாள் புதுப்புது விதமாக மாறுகின்றன. சமரசமும், அறவுணர்ச்சியும், சுதந்திர சக்தியும் அதிகமாகி வருகின்றன. ஜனநாயக முழக்கம் எண்டிசையும் எதிரொலிக்கிறது. தொழிலுக்கு வந்தனஞ் செய்யுங்காலம் நெருங்கிவிட்டது. மக்கள் ஒரு குலமாய் வாழும் நாள் வந்துவிட்டது.அத்தகைய புதுயுகம் பூக்க உழைக்கும் வீரர் நமது இளைஞரே. நமது தமிழணங்கு மொழியரசியாகத் திகழவும், தமிழிலக்கியம் புதிய துறைகளிற் பொலிந்திடவும், தமிழர் வீரமும் செல்வமும் அறிவும் ஒழுக்கமும் ஆற்றலும் பழமொழிபெற்று உலகெலாம் கொண்டாடப் பெறவும், தமது வாழ்வை அர்ப்பணிக்க முன்னணியில் நிற்போர் இளந்தமிழரே.

நமது கன்னித் தமிழ்நாடு இளந் தமிழரின் ஊழியங்களையே எதிர் பார்க்கிறது. தமிழ் நாட்டின் புகழ்க் கோட்டையைச் சல்லி சல்லியாகக் கெல்லும் ஜாதிவேற்றுமையும், வகுப்புப் பொறாமையும், கட்சிச் சச்சரவும், இளந் தமிழரின் சமரஸ முயற்சிகளாலேயே நீங்க வேண்டும்.

மக்களுக்கோர் சமயம்—புவி-மன்னுயிர்க்கோர் இறைவன்
மக்களும்ஓர் வகுப்பே—எனில்-மற்றுமுண்டோ பகுப்பே?

என்ற உண்மையை இளைஞரே நிலைநிறுத்த வேண்டும். வீண் வேற்றுமைகளும், காலத்திற்கு வேண்டாத பழக்கங்களும், முன்னேற்றத்திற்கு முரணான மூடக் கொள்கைகளும் இளைஞரின்தைரியமான அறப்போரினால்தான் தீரவேண்டும். பிராமண அப்பிராமண வாதமும், இந்து முஸ்லிம் பிணக்குகளும், பாலிய விவாகக் கொடுமையும், இளங் கைம்பெண்களின் பரிதாபமும், நாட்டின் வறுமையும், அடிமைத் தனமும், மடமையும் இளைஞராலே

தான் தீரவேண்டும். ஆசாரச் சீர்திருத்தம், சமூகச் சீர் திருத்தம், தொழில் முன்னேற்றம், கல்வி வளர்ச்சி, சுகாதார மேன்மை, வியாபாரவிரிவு, செல்வப்பெருக்கு எல்லாம் இளைஞரின் முயற்சியாலேயே இயலும். பாரத நாட்டைச் சுதந்திரத்திற்கு நடத்திச் செல்பவரும் இளை ஞர்; அச்சுதந்திரத்தை அனுபவிப்பவரும் இளைஞர். ஆதலின் இளைஞர் ஒன்றுசேர்ந்தால் எல்லாம் கைகூடும். அவர்கள் ஒற்றுமையே நாட்டின் வெற்றி. அவர்களை மதிப்பதே நாட்டின் மதிப்பு. அவர்கள் ஒழுக்கமே நாட்டின் ஒழுக்கம். அவர்களை மதித்துப் போற்றி ஊக் கப்படுத்தும் நாடு சுதந்திர நாடுகளின் முன்னணியில் நிற்கும். இளைய பாரதம் வாழ்க! இளந்தமிழன் வாழ்க!

நம்நாட்டின் முன்னேற்றத்திற்குக் கிராம நிர்மாண வேலையே வழியென்பது நமது சுருதிவாக்கியம். அதற்கு இளந்தமிழ்த் தொண்டர்களே உயிர் போன்றவர்கள். அவர்கள் ஊக்கமுள்ள உழைப்பைக் கிராமங்களிற் பயன் படுத்தினால் நமது கிராமங்களின் வறுமை நீங்கும்; வளமைபொங்கும்; தூக்கம் நீங்கும்; தொழில் ஓங்கும்; அடிமைத்தனம் ஒழியும்; ஆண்மைபெருகும். தொண்டர் பணியே சுதந்திரம் நல்கும். நம்நாட்டு விடுதலைப்பணிக்கு ஏராளமானதொண்டர்கள் வேண்டியிருக்கின்றனர். கிரா மத்திற்கு ஐந்தைந்து தொண்டர்களாகச் சென்று பாதி ரிகள் மாதிரி வேலை செய்ய வேண்டும். பாதிரிமார்கள் தங்கள் வைராக்கியமான உழைப்பால் எவ்வளவு அற் புதமான வேலைகளைச் செய்கின்றனர்! தங்கள் சமய நூல்களைப் பரப்புகின்றனர். கோயில் கட்டுகின்றனர். பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்துகின்றனர். மாணவர்களுக்கு மிஷன் செலவில் சாப்பாடு போட்டு, அவர்களைக் கொண்டு பல தொழில்களை நடத்துகின்றனர். வைத்திய

சாலை, தோட்டவேலை, மாடுவளர்த்தல், அச்சுவேலை, நெசவு, தச்சு, இரும்பு வேலைகள் முதலியவற்றை ஏற் படுத்தி ஏராளமான தொழிலாளருக்கு வேலைதருகின் றனர். அதனின்று லாபமும் சம்பாதித்துத் தமது செல்வாக்கைப் பெருக்குகின்றனர். அந்தப் பாதிரிகள் தங்கள் சிறு தேவையளவே அனுபவிக்கின்றனர். தங் கள் முழு ஆயுளையும் அருட்பணிக்கே அர்ப்பணிக்கின் றனர். அவர்கள் செய்யும் வேலைகள் நமது சமுதாயத் திற்கு நலமோ தீதோ என்பது கேள்வியல்ல. நமது சமூதாயத்தின் நலத்திற்குரிய வேலைகள் இன்னின்ன வென்று நமக்குத் தெரியும். அவ்வேலைகளை ஏன் நாம் அவர்கள் மாதிரி ஊக்கமுடன் செய்யக்கூடாது? நமது வாலிபர்கள் கிராமங்களிற் குடியேறி ஏன் அத்தகைய நிலையான பணிகளைச் செய்யக் கூடாது? அன்னிய நாட்டினர், அன்னிய மதத்தினர் அத்தகைய வேலைகள் செய்ய முடியுமானல் சொந்த நாட்டினர் ஏன் செய்ய லாகாது? அவர்களைவிட நூறு மடங்கு நாம் அதிக மாகச் செய்யவேண்டும்.

உண்மையையே தெய்வமாகவும் அறத்தையே மத மாகவும் தேச சுதந்திரமே நோக்கமாகவும் கொண்டு வீர இளைஞர் முன்வரல்வேண்டும். அவர்கள் மதபோத கராயும், உபாத்தியாயராயும், தொழிலாளராயும் கிராமங் களுக்குச் செல்லல் வேண்டும். பஜனைகள், கடவுள் வழிபாடு, பக்திரஸ கானங்கள் மூலம் கிராமத்து ஜனங் களை விழிப்பிக்க வேண்டும். அவர்களுக்கு வைத்தியத் தாலும், அவசர உதவிகளாலும் ஊழியஞ் செய்து அவர்கள் அன்பைப்பெற வேண்டும். பிறகு சுகாதார விஷயங்களை அவர்களுக்குப் போதிக்கவேண்டும். அதன்பின்னர் பள்ளிக்கூடம், வைத்தியசாலை, தொழிற்

சாலை, நூற்றற்கூடம், நெசவுசாலை முதலியன ஏற்படுத்த லாம். பிறகு ஜனோபகாரசங்கங்கள் ஏற்படுத்தி அதன் சார்பாக விவசாயச் சீர்திருத்தங்களும், ஐக்கிய நாணய சங்கமும், பஞ்சாயத்தும், மதுவிலக்கும், சமூக ஒற்று மையும் ஏற்படுத்தலாம். இத்தகைய நிலையானபணி களுக்கே தொண்டர்கள் தேவை. மேடைப்பிரசங்கங் கள் இனிப்போதும்.

நம்நாட்டில் எத்தனையோ கனவான்கள் உள்ளார்கள். அவர்கள் தங்கள் பணத்தை வீண் அணிக்கும், ஆடைக் கும், விருந்திற்கும், வீண் சடங்குகளுக்கும், போகத் திற்கும் செலவிடுகிறார்கள். மேற் சொன்ன கிராம வேலைகளுக்காகச் சிறிது செலவு செய்ய அவர்கள்மனம் வளையுமாயின் அந்நாளே நன்னாளாகும். தேர்தலுக் குச் செலவு செய்யும் ஆயிரக்கணக்கான தொகையைக் கொண்டு எத்தனை கிராமங்களைத் திருத்தலாம்! வீண் கட்சிச் சண்டைகளிலும் அஹங்காரத்திலும் நாடு தற்கொலை புரிந்துகொள்ளுகிறது. நிலையான வேலையே வேண்டும். அதற்குத் தொண்டர்கள் வேண்டும். அவர் களுக்கு நாட்டின் ஆதரவு வேண்டும். ஆதரவு பெருக அன்பு பெருகும்; அன்புபெருக அருட்பணி பெருகும். அருட்பணி பெருக அருள் தொண்டர் பெருகுவர். தொண்டர்தம் பெருமை சொல்லவும்படுமோ? தமிழ் நாட்டு இளஞ்சிங்கங்காள்! இளந்தமிழர்காள்! உங்கள் வீரமே நாட்டின் விடுதலை; உங்கள் தொண்டே நாட் டின் சுதந்திரம். எழுமின், உழைமின்!

---

## 31. புத்துயிர்

ஓர் ஆவேசமுமில்லை; எல்லாம் மந்தமாயிருக்கிறது. வீரமெல்லாம் கூரமாக மாறியது. பொது நலவித்து வாடுகிறது. சத்தம் போட்டால் செடிமுளைக்குமா? தியாகத்தை ஊற்றினால்தான் வளரும். முதலில் நம் நாட்டின் வறுமை, மடமைப் பிணியைத் தீர்க்க வேண்டும். நமது கீழ்மையை நினைத்தால் சவுக்கினால் அடித்தாற் போன்ற உணர்ச்சி ஏற்படுகிறது. ஜாதி சமயச் சச்சரவுகள் நமது மானத்தைக் கந்தலாக்குகின்றன. உழைப்பும், ஊக்கமும், உணவும், ஒளியும் ஒற்றுமையுமே சுதந்திர தேவியின் பஞ்சப் பிராணன். அவை பெருகி இருளும், மிடியுந் தீரும் செவ்வியவழி ஒன்றுதான். அதுவே கிராம நிர்மாண வேலை.

கிராம நிர்மாண வேலை ஒரு கட்சிக்கும் விரோதமில்லை. அது நன்மை பயக்கக் கூடியதென்று அனைவரும் அறிவர். அரசாங்கத்தாரும் இதைப் போற்றுவர். மஹாத்மாகாந்தி, தாகூர், லாலாஜி முதலிய பெரியோரின் உபதேசமும் அதுவே. ஸி. ஆர். தாஸின் இறுதிமுயற்சியும் அதுவே. கிராம நிர்மாணத்தைப்பற்றி ஓயாது பேசுவதிலும் எழுதுவதிலும் பயனில்லை. ஆதலின் அதைச் செய்து காட்ட முன் வந்துள்ளோம். ஒவ்வொரு கிராமத்திலும் சங்கங்கள் ஏற்படுத்தித் தீவிரமான தொண்டு புரிவோமாக.

I கிராம சேவையில் ஈடுபடும் இச்சங்கத்திற்கு, கிராம சேவைச் சங்கம் என்று பெயரிடுவோம்.

II நோக்கம் :—கிராமங்களில், கல்வியும், தொழிலும், அறவுணர்ச்சியும், நாட்டன்பும் பரப்புவது. வறுமை, மடமைப்பிணி நீங்கி, நம் நாடு வளமை பெறச்

செய்வது. நமது சமூகத்தை சுத்தப்படுத்தி, சுதந்திர வுணர்ச்சி யீந்து சமத்துவ நெறியில் வாழ்விப்பது.

III வழிகள்:—இந்நோக்கங்களை அநுபோகத்தில் கொண்டுவரவேண்டிய வழிகளாவன: (1) திறமையுள்ள தொண்டர் படை ஏற்படுத்தல், (2) பஜனைகள், நாடகம், கதைகள் மூலம் உணர்ச்சி யுண்டாக்கல் (3) பெரியோரின் பிறந்த நாட் கொண்டாட்டம். (4) விளக்குப்படங்கள் மூலம் நாட்டின் நிலைமை மனிததர்மம், நன்னெறி மதுவிலக்கு, கைத்தொழில், வழக்காடுவதின் தீமை முதலியவற்றைக் காட்டல். (5) நல்ல பள்ளிக்கூடங்கள் அமைத்து, தொழிலும் கல்வியும் சேர்ந்தாற்போல் புகட்டல். (6) நூற்றல், நெய்தல், பாய்பின்னல், கூடை முடைதல், தென்னை வெல்லஞ் செய்தல் முதலிய குடிசைக் கைத்தொழில்களை விருத்தி யாக்கல். (7) குடிசைத் தொழில்களால் உண்டான செய்பொருள்களை விற்பதற்கு ஒரு ஐக்கிய பண்டகசாலை ஏற்படுத்தல் (8) தொழிலாளருக்கு அவ்வப்போது, பஞ்சு, பணம், இராட்டை, தறி, கலப்பை முதலியவை கொடுத்துதவக் கூட்டுறவுத் தொழிற்சங்கம் ஒரு சிறிய முதலுடன் தொடங்கல் (9) கிராம சபை ஒன்று ஏற்படுத்தி அதன் வழியாகச் சமுதாயவுணர்வைப் பெருக்கி, ஒற்றுமையேற்படுத்தல் (10) கிராமப்பஞ்சாயத்து, தொழிலாளர் கூட்டம் தொண்டர் படை ஏற்படுத்தல். இவற்றின் மூலம் கிராம சுகாதாரத்திற்காகவும், அமைதிக்காகவும், நீதிக்காகவும் பாடுபடல். (11) இயற்கை வைத்தியசாலை நிறுவல் ; சுகாதாரத்தைப் புகட்டல் ; உடலுறுதி மன்றங்கள் ஏற்படுத்தல். (12) மது, புகையிலை, தேயிலை, காப்பி முதலிய தீய பொருள்களை விலக்கச் செய்தல்.

(13) பருத்தியை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யாது தடுத்தல்; சுதேச விரதங் காத்தல். விவசாயச் சீர்திருத்தஞ் செய்தல் ; உணவுப் பயிர்களை மிகுதியாக்கி, போதுமான பருத்தி விளைவித்து அதைக் கிராமத்திற்கு வேண்டுமட்டும் உபயோகப்படுத்தியது போக மீதியையே வெளியேற்றல். (14) சமரஸ சன்மார்க்க சங்கம் ஏற்படுத்தி உலகிலுண்டான எல்லா மதாசாரியரின் திருவரலாறுகளையும் உபதேசங்களையும் புகட்டல் ; அறத்தையே அடிப்படையாகவும், சத்தத்தையே நெறியாகவுங்கொண்ட ஒரு சமரஸவுணர்ச்சியை எழுப்புதல் (15) கிராமத்தின் தேவைகளை யெல்லாம் அதிலேயே அடையும்படி உழைத்தல். கிராமத்தைச் சிறு தேசமாக்கல். கல்வி, விவசாயம், தொழில், மதவுணர்ச்சி சுகாதாரம் முதலியவை வளரப் பணிமுறைகளை வகுத்து, கிராம சுயாட்சியை உறுதி செய்தல். அதன்பால் வரும் எல்லா இடையூறுகளையும் வீரமுடன் பொறுக்கத் தொண்டர்களைத் தயாரித்தல் முதலிய இன்னோரன்ன தொண்டுகள் செய்தல்.

இப்பதினைந்து வகைப்பணிகள் மூலம் அடக்கமாகக் கிராம வேலை நடைபெறுதலே தேசம் உய்வதற்குப் பொருத்தமான வழி.

VI வருவாய்:—(1) தொண்டர்களின் உண்மையான உழைப்பும், சமூகத்தின் அன்புமே கிராம வேலையின் மூலதனம். (2) கிராமமுள்ள தேசாபிமானிகள் முதலில் தங்கள் கிராமங்களிலேயே தொண்டரைச் சேர்த்து வேலை தொடங்கலாம். (3) கைத்தொழில்வளர்ச்சி, ஐக்கிய பண்டகசாலை, பஜனை வசூல், நல்ல மனதுடன் தருமவான்கள் தரும் நன்கொடைகள்,

கிராம சமுதாய தர்ம சொத்துக்கள் இவைகளே முக்கிய மான வருவாய். சந்தாவுக்காகச் சுற்றிப் பிறரை வருத் திப் பொருளூறுஞ்சுவது பலாத்காரமென்பது எமது கொள்கை.

V அங்கத்தினர் :—இச்சங்கத்திற்கு இறைவனே அக்கிராசனர்; மனச் சாட்சியே காரியதரிசி; உழைப்பே நிர்வாக சபை ; கை கால் அவயவங்களே காரிய சபை யோர். இது ஒரு பொதுநலச் சங்கம். எல்லாரும் இதிற் சேர சாதி மத நிற பேதமின்றி உரிமையுண்டு. ஆனல் கொள்கை தன்னலமற்ற அருட்பணி.

நம் நாட்டில் ஒரு புத்துயிர் பிறக்க இத்தகைய சங்கமே தேவையென்பது எமது விருப்பு. இம்முறை யில் ஒழுங்காக வேலை செய்தால் நம்நாடு மடமை, வறுமை, அடிமைப்பிணிகள் ஒழிந்து நலம்பெறும் என் பது நமது அனுபோக வுறுதி. அன்பர்காள் ! நம்புங் கள்! நினையுங்கள்! முயலுங்கள்! உதவுங்கள்!

---

## 32. ஜனோபகார சங்கம்

1. உலகெங்கும் நலமுற வாழலாம். எல்லாரும் உண்மையான சகோதரர்போ லிருக்கலாம். எல்லாரும் சுத்தசமரச வாழ்க்கை வாழலாம். உலகினின்று பாவத் தைத் துரத்திவிடலாம். உலகெங்கும் பஞ்சமா பாதக மும், அஹங்காரமும் நிறைந்திருப்பதற்கு வறுமையும், மடமையுமே காரணம். நாமெல்லாரும் ஈசனுடைய புதல் வர் ; சகோதரர். இவ்வுலகில் நமக்கும் சமப் பங்குண்டு என்பதை மறப்பதனுலும், ஒருவன்மட்டும் பலர் அனு பவிக்கவேண்டிய பொருளைக் குவிப்பதனுலும், பலர் இருக்கவேண்டிய இடத்தை வளைத்து ஒருவன் பெரிய

மாளிகை கட்டுவதனுலும், தன் தேவைக்கு மேற்பட்ட பொருளைச்சேர்க்கும் திருட்டாலும், இடம்பத்தினுலும், குடி கூத்தியாலும், தொழிலறிவின்மையாலும் வறுமை பிறக்கிறது. ஒரு கிராமத்தில் 1000 செய்களிருப்பதாக வைத்துக்கொள்வோம். அதில் 500 ஜனங்களிருக்கிறுர்க ளெனக் கொள்வோம். பூமி எல்லாருக்கும் பொது. நாம் பிறக்கும்போது நிலங்காணி பட்டங்களைக்கொண்டு வந்ததில்லை. நாம் போகும்போதும் கொண்டு போவ தில்லை. இஞ்ஞானமில்லாது ஒருவன் அஹங்கா ரத்துடன் நான்தான் இந்த ஆயிரம் செய்களுக்கும் அர சன் என்று மற்றோரைப் பயமுறுத்துகிறுன். தனக்கு மட்டும் 500 செய்களின் மகசூலைப் பிடுங்கிக் கொள்ளுகி றுன். மீதியிருக்கும் 449 பேருக்கும், மீதி 500 செய் ஊதியஞ் செல்லுகிறது. அதிலும் 15 பணக்காரர்கள் ஒவ்வொருவரும் 20 செய் எடுத்துக்கொள்வர். பணக்கார னுக்குக் கொஞ்சம் ஈந்து, அவன் உதவியால் ஏழைகளை வருத்துகின்றனர். 434 பேருக்கு மீதியிருக்கும் 200 செய்களைப் பங்கிடின், ஒவ்வொருவருக்கும் $\frac{1}{4}$ செய் நிலங்கூடக் கிடைப்பது அரிதாயிருக்கிறது. அதனுல் தான் 500 பேரில் 434 பேர் ஏழைகளா யிருக்கிறுர்கள். இவ்வேழைகள் கதியற்றுப் பணக்காரனிடம் அடிமை யாகின்றனர்; அவன் சொல்லும் பாபச் செயல்களை யெல்லாம் செய்கின்றனர். அவன் பாபத்திற்கெல்லாம் இவர்களே கருவிகள். ஏழைகள் பாபமும்செய்து, வயிற் றிற்கும் கஞ்சியில்லாது தவிப்பதற்கு அவர்களின் அறி யாமையே காரணம். சிறிது சுயேச்சை யுள்ளவர்கள் அஹங்காரிகளாற் கண்டிக்கப்பட்டுத் தொழிலின்றிக் கஞ் சிக்குக் கஷ்டப்படுகின்றனர். உலகில் உணவும்உடையும் அவரவர்கள் பாபமற்ற வழியில் அடைந்தால் வறுமை

இருக்குமா? வறுமை யில்லாவிடில் திருட்டும் அடிமைத் தனமும் ஏது ?

ஏழைகள் ஆடையுணவைப் பாபமற்ற வழியில் அடையவும், பணக்காரருக்குத் தியாகபுத்தி வரவும் ஒரு வழி செய்ய வேண்டியிருக்கிறது. இதற்காகக் கிராமந் தோறும் ஜனோபகார சங்கம் ஒன்று ஏற்படவேண்டும். அதன் நோக்கங்கள் :

(1) எல்லாரும் ஒரு கடவுளின் மைந்தர்கள், நாமெல்லோரும் சகோதரர்கள் என்ற சமரச உணர்ச்சியை எல்லாருடைய மனத்திலும் செய்கைகளிலும் ஊன்றுவித்தல்.

(2) பாவமற்ற வழிகளால் எல்லாரும் ஆடையுணவுகளை அடையும்படி செய்வது.

(3) அடிமைத் தனத்தை நீக்கி ஆண்மைத் தனத்தைப் புகுத்துவது.

(4) வேலையில்லாத ஏழைகளுக்கு வேறு வயல்களிலாயினும், தறிச் சாலையிலாயினும், வேலைக் கூடத்திலாயினும் (Work House) வேலை கொடுத்தல்.

(5) ஏழைகளுக்குச் சாப்பாட்டிற்குக் கட்டும்படியாக மகசூல்களையும், கூலியையும் ஈதல்.

(6) கூலி வேலைக்காரரை ஒற்றுமைப் படுத்தல்.

(7) மதுபானம், காப்பி, புகையிலை, மாமிசம், பரதேச வுடை, இடம்பம், சூது முதலிய பாபங்களை விலக்கல்.

(8) ஒவ்வொருவரும் தத்தம் ஆடைகளை நூற்கும்படி செய்தல்.

(9) ஒவ்வொரு கிராமத்திற்கும் போதுமான வேட்டி நெய்யத் தொழிலாளிகளைத் தயார் செய்தல்.

(10) நன்கு உழுது பயிர் செய்ய, விவசாய நூலைப் பயிற்றல், உணவுடைப் பயிர்களே மிகுதியாக விளைவித்தல். புகையிலை போன்ற பொல்லாப் பயிர்களைத் தவிர்த்தல்.

(11) கிராமப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தி ஜனங்களுக்கு உண்மையான கல்வியை இனமாகக் கொடுத்தல்.

(12) பஞ்சாயத்தும் பொதுக் கூட்டமும் கூடி ஏழைகளுடைய விவகாரங்களைத் தீர்த்து நியாயமளித்தல்.

(13) மாதந்தோறும் சிறு சிறு துண்டுப்பிரசுரங்களின் மூலம் மனித தர்மத்தைப் புகட்டல்.

(14) வீரமுள்ள தொண்டரைக் கொண்டு பிரசாரம் செய்வித்து, சாந்தமும் சத்தியமுமே பலம் என்பதைக் காட்டல். உணவுக்கும் ஆடைக்கும் சிற்றின்பத்திற்கும் மேல் மனிதனுக்கு ஒரு கடமையுண்டெனக் காட்டல். மனிதன் பிறருக்காகவே வாழும் கடமையைப் பயிற்றல்.

(15) சுற்றுப் புறங்களிற் சென்று ஏழைகளுக்கு உதவி செய்தல். எல்லா உலகிற் கிறைவனொருவன் என்னும் உண்மையை நிலை நாட்டிச் சகல மதங்களுக்கும் பொதுவான தர்மத்தை உபதேசித்தல்; உபதேசம் செய்பவரையும் தயார் செய்தல்.

(16) கிராம ஒழுங்கு வேலை.

## சேலவு

(1) பிரசாரகருக்கு.

(2) பள்ளிக்கூடம்.

(3) தொழிற்சாலை — இராட்டினம்—கலப்பை — தறி—கரும்பாலை—மாடு கன்றுகள்.

(4) தொழிலாளிகளுக்கு முன் பணம் கொடுத்தல்.

(5) பிரசுரச் செலவுகள்.

(6) இயற்கை வைத்தியம்.

(7) கூட்டுறவுச் சங்கம், கடை, பண்டகசாலை.

## வருவாய்

(1) கிராமக்கட்டுப்பாட்டின்படி மகசூல்களில் 20 கலத்திற்குக் குறைந்தவர் 1/40-யும், 100 கலத்தின்மேல் 1/50-யும், 500 கலத்திற்கு மேற்பட்டவர் 1/20 பங்கும் இச்சங்கத்திற்கு உதவியாகக் கொடுத்தல் வேண்டும்.

(2) கலியாணம் திருவிழாச் சமயங்களில் ஒரு ரூபாயாவது சம்பாவனை செய்தல்.

(3) தீபாவளி, பொங்கல் திருவிழா முதலிய சுபதினங்களில் பஜனை செய்துகொண்டே உண்டியலால் வசூல் செய்தல்.

(4) வருஷம் அணா 4 முதல் 2 ரூபா வரை தாம் வாரியாய் வசூல் செய்தல்.

(5) குற்றவாளிகளுக்கு அபராதம் விதிக்கும் தொகையைச் சங்கப் பொது நலத்திற்கு உபயோகித்தல். அபராதத்திற்குப் பதிலாகத் தொழிற்சாலையில் வேலை செய்யச் சொல்வது; மண்வெட்டி கோடரி முதலியவைகளை வாங்கிப் போடச் சொல்வது. (பணமும் பண்டமும் ஒன்றே)

(6) அபிமானிகள் யாவரும் கூலிகளைப் பிழைப்புக்குக் கொடுத்து தங்கள் நிலங்களில் அமர்த்துவது ; நிலம், பொருள், ஆயுதங்கள் முதலியவற்றால் உதவுவது. இப்படி வசூலான பணத்தை ஜனோபகார பாங்குகளிலும், நிலத்தின் மேலும், ஏழைகளுக்கும் தரலாம்.

(7) பிடியரிசிக் கலயம்.

## காரியஸ்தர்

(1) இச்சங்கத்தில் சாதி, நிறம், ஏழை, செல்வன் வித்தியாசமின்றி யாரும் அங்கத்தினர்களாகச் சேரலாம். கட்டணம் $\frac{1}{4}$ ரூபா முதல் 2 ரூபா வரை.

(2) அங்கத்தவர்களெல்லாரும் குறித்தவிடத்திற்கூடி, சீட்டுகளின் மூலம் பஞ்சாயத்தாரையும், பொதுக்கூட்டத்தாரையும் பிரசாரகர்களையும், தலைவர்களையும் தேர்ந்தெடுத்தல். தகுந்த யோக்கிதையுள்ளவர்களை நிர்வாகஸ்தராகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

(3) பொதுஜன நம்பிக்கையுள்ள ஒரு நல்லாரே பாங்குக் காரியதரிசி. இவர் காரியசபைத் தலைவர்களுக்கு உட்பட்டவர். பாங்கு குமாஸ்தா, பாங்கு சேவகன்.

(4) உபாத்தியாயர், பாங்கு குமாஸ்தா, பிரசாரகர் - இவர்களுக்குச் சொந்தச் செலவுக்கு மட்டும் வழி செய்தல். நெல்லாயும் ஆடைகளாயும் அவர்களுக்குச் சம்பளம் தரலாம்.

வருஷம் ஒருதரம் ஜனோபகாரக் கூட்டம் குறித்த விடத்தில் சிறந்த தலைவரின் கீழ்க் கூடும். அப்போது காரியதரிசி பிரசங்கம் செய்து வேலைகளைப் பற்றி வாசிப்பார். பிரசாரகர்களும் மற்றோரும் தங்கள் தங்கள் அனுபவங்களைச் சொல்வர். சங்கத்தில் செய்ய வேண்டிய திருத்தங்களையும் விருத்தியையும்பற்றிப் பொது ஜனங்கள் பேசுவார்கள். தொண்டர் படையும் அப்போது சேர்க்கப்படும்.

வகை

(1) பிரசாரகரைக் கொண்டு ஒவ்வோரிடமும் அடிக்கடி பொதுக்கூட்டம் கூட்டச் செய்ய வேண்டியது. பள்ளிப் பிள்ளைகளுக்குத் தக்க நூல்களின் மூலமும், தூயவாழ்க்கையின் மூலமும் சிறந்த கொள்கைகளைப் பிரசாரஞ் செய்யவேண்டும். பிரசாரகர் தினக் குறிப்பு எழுதிக் காரியதரிசிக்கு அடிக்கடி அனுப்பவேண்டியது.

பாபமற்ற தொழில்களாவன: நூற்றல், நெய்தல், உழுதல், தச்சு, கருமான் வேலை போன்றன.

இந்த மாதிரி கிராமந்தோறும் ஜனோபகார சங்கம் கூட்டுக.

---

## 33. பள்ளிக்கூடம்

ஐந்து தொண்டர் ஒரு கிராமத்திற் குடியேறவும். முதலில் கடவுள் வழிபாடும், பஜனையும் நல்ல தோப்பொன்றில் தொடங்கவும். இரண்டாவதாக சமூக ஊழியத்தால் (முக்கியமாக வைத்தியம்) பொது ஜனங்களின் மனதை வசப்படுத்தவும். பின்பு நல்ல புராணங்களைப் படித்துப் பெற்றோர்களை வசப்படுத்தவும். பிறகு அந்தக் கிராமத்தில் ஒரு தெருத் திண்ணையில் பள்ளிக்கூடங்

தொடங்கவும். தொடங்குமுன் நம்பத்தக்க தருமவான்களின் ஆதரவைப் பெறவேண்டும். இரண்டொரு மாதங்கள் தெருப் பள்ளிக்கூடமாகவே திறமையுடன் கல்வி நடக்கட்டும். பின்பு ஒரு தருமவானிடம் கட்டிடவுதவி கேட்கவும். உபாத்தியாயருக்குக் கிராமசமுதாயத்தால் பண்டமாகத் தருதல் எளிது. போதன சக்தியினால் நம்மிடம் மிகுந்த பிள்ளைகள் வரும்படி செய்தல் வேண்டும். பள்ளிக்கூடத்திற்கு முதலில் வேண்டுவது தக்க ஆசிரியனே.

---

## 34. ஆசிரிய லட்சணம்

ஆசிரியன் எவ்வகையாலும், தன்னைப் பிறர் உதாரணமாகப் பின்பற்றக் கூடியவனாகவும் பரிசுத்தனாகவும் பிள்ளைகள் தெய்வமென்று பக்தி செலுத்தத் தக்கவனாகவுமிருத்தல்வேண்டும். அவனுக்கு இறைவனிடம் பூரண பக்தியிருக்கவேண்டும். குழந்தைகளைக் கண்ணென அன்புடன் நடத்த வேண்டும். சுத்த சாதகனாயிருக்க வேண்டும். தர்மமே உருவாயிருக்க வேண்டும். புத்தகம் படிப்பதினும் ஆசிரியனுடன் வசிப்பதே மாணவருக்கு அதிக அறிவைத் தரும். தேவைக்கு மேலே சேர்க்காமல் சமூகத்தார் தனக்குத் தருவதைக்கொண்டு எளிய வாழ்வை நடத்திக் குடும்பவாழ்விலும் பிறருக்கு ஆசிரியன்உதாரணமாயிருக்கவேண்டும். தன் ஆடையைத் தான் நூற்றுடுத்தவேண்டும். தன் வீட்டிற்கு வேண்டிய காய்கறிச் சாமான்களைத் தன் கொல்லைப்புறத்தில் விளைவித்துக்கொள்ள வேண்டும். ஒரு பசுவை வளர்த்தல் மிக்க அவசியம். குருபத்தினி குழந்தைகளைத் தாயன்புடன் பேணவேண்டும். மாணவர்களை ஆசான் தன்

குடும்பமாகப் பாவித்துப் பயிற்றவேண்டும். கல்வியை ஒரு வியாபாரமாகச் செய்தல் பாபம். அதை ஒரு புண்ணிய கைங்கரியமாகச் செய்யவேண்டும்; தனது ஜன்ம சாபல்யமாகச் செய்யவேண்டும் ; கடவுட்பணியாகக் கருதவேண்டும். ஆசான் போதனு சக்தி பெற்றிருக்கவேண்டும். தன் தாய் மொழியில் பூரணஞானமும், ஆரியம், ஹிந்தி, ஆங்கிலம் இம்மூன்றில் சுமாரான அறிவும், எண்சுவடிக் கணக்குகளைத் திறமையாகக் கற்பிக்கத்தக்க சக்தியும், பூகோளம், அறிவு நூல், பயிர் நூல், வைத்தியம், சங்கீதம், ஏதாவது ஒரு கைத்தொழில் இவற்றில் நல்ல தேர்ச்சியும் அவனுக்கு இருத்தல் வேண்டும். அவன் நல்ல உடலுறுதி பெற்றிருக்க வேண்டும். அவனுக்கு உலகியலறிவுவேண்டும். அதோடு சுத்தமத ஞானம் பூரணமாயிருத்தல் வேண்டும். எல்லா மதங்களின் சாரமும் அறிந்து அறவழியில் நடக்கும் சீலனுக இருக்கவேண்டும். அழுக்காறு, அவா, வெகுளி, இன்னுச்சொல், சோம்பல், நாணுமை, சரியான கல்விப் பயிற்சியின்மை, ஒழுக்கக் குறைவு, தொழிற்சோம்பல், அன்பின்மை, பணப்பேராசை முதலியவையுள்ளவர் ஆசிரியராகார். சமூக மைந்தரை ஆசிரியர் கவனித்துக் கொள்வர். சமூகம் ஆசிரியரின் உடல் தேவைகளைக் கவனித்துக் கொள்ளும்.

---

## 35. பாடம்

இச்சிறப்புடைய ஆசிரியனிடம் தக்க மாணவர் தம்மால் வருவர். இத்தகைய ஆசிரியன் தெருவுக் கொருவன் இருத்தல் நலம். ஆசிரியப்பதவி பரம் பரையாக வரலாம். அவ்வாசிரியன் தன்னைப்போல இன்னும் சில ஆசிரியரைப் பழக்கி வேறு கிராமங் களுக்கு அனுப்பவேண்டும். மாணவரை வீரராகப் பயிற்றவேண்டும். தாய்மொழி நன்றாக எழுதப் படிக்க வும், எண்சுவடிக் கணக்கும், தேச சரித்திரமும், ஜில்லா பூகோளமும், இயற்கைச் சுகாதார நெறியும் அறவழி யும், வாழ்வை உயர்த்தக்கூடிய பாட்டுக்களும், பத்தி ரிகை பார்த்துத் தன் தேச நிலையை அறியுந்திறனும், தோட்டப் பயிற்சியும், நூற்றலும், சாரணப் பயிற்சியும் அவசியம் தெரியவேண்டும்.

---

## 36. இடம்

நல்ல இயற்கையழகு வாய்ந்த சோலையே பள் ளிக்கூடத்திற்கு ஏற்ற இடம். மழைக்காலங் தவிர வேறு காலங்களில் மரத்தடிகளே (வேம்பு, ஆல்) வகுப்பிற்கு நல்ல இடம். பள்ளிக்கூடத்தினருகே நதி, மலை, ஏரி முதலியவை யிருப்பது அவசியம். மாணவரை அடிக்கடி இயற்கை யழகு நிரம்பிய இடங்களுக்கு அழைத்துச் சென்று தன்னுதவியைப் புகட்டவேண் டும். வாழ்வில் வரும் சோதனைகளைத் திறமுடன் தாங் கும் பயிற்சி பள்ளிக்கூடத்தில் மாணவருக்கு அமைய வேண்டும். ஒவ்வொரு மாணவன் பெயராலும் அத் தோட்டத்தில் ஒவ்வொரு செடி வளரவேண்டும். மாண

வருக்குச் சுவரெடுக்கவும் செங்கற்காளவாய் போடவும், கீத்து முடையவும், குடிலமைக்கவும் கற்பித்துக் குடிசை கட்டச் சொல்லி அதில் அவர்கள் வசிக்கும்படி செய்வது பெருமையானது. பள்ளிக்கூடத்தில் ஒரு கிணறு வெட்டலாம். அதைக் கொண்டு தண்ணீர் இறைப்பதும், தோட்ட வேலை செய்வதும் மாணவருக்குச் சிறந்த தேகப்பயிற்சியாகும்.

---

## 37. பயிற்சி முறை

மாணவர் குருதேவருடன் வசிப்பதே திறம். எல்லாரும் முடியாவிடினும் உபாத்தியாயர் வேலைக்கும், அத்யாத்மீக வாழ்விற்கும் பழகும் சிலராவது குருகுல வாசமே செய்தல் வேண்டும். அம்மாணவர் தோட்ட வேலையாலும், நூற்றல், நெசவு முதலியவற்றாலும் தங்கள் ஜீவனத்தைச் சம்பாதித்துக்கொள்ளலாம்.

நான்கு மணிக்கு மாணவர் எழுந்து நல்ல கானங்களுடன் தியானஞ் செய்து, பல்விளக்கிப், பிறகு வெளிக்குச் செல்லவேண்டும். 4-மணிக்கு வெளிக்குச் செல்லும் பழக்கம் இளமை முதலே பழக்கமாக வேண்டும். அப்பழக்கம் ஏற்பட்டால் நோய் அணுகாது. மலச்சிக்கலினால்தான் நோய்கள் பெரும்பாலும் வருகின்றன. வெளிக்குச் சரியாக வராவிடின் தண்ணீர் அருந்தி உபவாசமிருக்கவேண்டும். வெளிக்குச் சென்று வந்ததும், தோட்டத்தில் வேலை செய்தல், தண்ணீர் இறைத்தல், தென்னைக்கு மண்சுமத்தல், உரமிடல், மாட்டுச் சாணத்தைச் சேமித்தல், அறையை மெழுகுதல் முதலியவற்றைச் செய்யவேண்டும். அதன் பிறகு குளிக்கச் செல்ல வேண்டும். குளிர் காலங்களில் வெந்நீர் போட்டு முழுக

லாம். தங்கள் ஆடைகளை நன்கு சுத்தம் செய்து குளித்தல் வேண்டும். முழுகும்போது நன்றாக அழுக்குத் தேய்த்துக் களிமண்ணைப்பூசி முழுகவேண்டும். அதன் பிறகு உலர்ந்த ஆடை யுடுத்தி அனைவரும் அகண்டவுலகாலயத்தில் அரை வட்டமாக உட்கார்ந்து பிராணயாமம் செய்ய வேண்டும். அது ஆனதும் அனைவரும் எழுந்துநின்று கீதை, தருமஸாதன நூல்கள், திருமுறைநூல்கள், பைபிள், குரான் முதலியவற்றினின்று அறமொழிகளைச் சொல்லி, அவற்றிற்குச் சுருக்கமாக வியாக்யானம் அறிய வேண்டும். வழிபாடுகள் ஆனதும் மாணவர் முதலில் பாடங்களுக்குச் செல்வார்கள். காலைப் பாடங்கள் 7-முதல் 11-மணிவரை நடக்கும். தமிழ், ஆரியம், கணக்கு, ஆங்கிலம் இந்நான்கும் காலை நடக்கும். 11-மணிக்குப் பிறகு மறுபடியும் முகங்கழுவி, தோத்திரஞ்செய்து, சாப்பாட்டிற்கு உட்காரவேண்டும். குருபத்தினி சமையல் வேலையை ஒப்புக்கொள்வதே நலம். அன்னாருக்கு மற்ற மாணவர் உதவி செய்யலாம்; அல்லது மாணவரும் சமைக்கலாம். மாணவருக்குக் கரியடுப்பும் சட்டிகளும் வாங்கிக் கொடுத்துத் தனித்தனியாகச் சமையல் செய்து கொள்ளும்படியும் விடலாம். தினம் ஒரு மாணவனைக் சோறு பரிமாறலாம். சாப்பிடும்போது மௌனமாக நன்றாக மென்று சாப்பிட வேண்டும். தாமச உணவுகளை விலக்கவேண்டும். சாப்பிட்டெழுந்ததும் 12 முதல் 1½ மணி வரை நூற்றல்; பிறகு, சங்கீதம், நெசவு, பூகோளம், அறிவுநூல், சரித்திரம் முதலியவை கற்பிக்கப்படும். 4 மணிக்கெல்லாம் தோட்டவேலைக்குச் செல்லவேண்டும். 5½ முதல் 6½ வரை சாரணப் பயிற்சியும் ஆடலும் கற்பிக்கவேண்டும். 6½

முதல் 7 வரை மாலை வழிபாடுகளை முடித்து ½ மணி நேரம் உருக்கமாக பஜனை செய்து பிறகு இராச்சாப் பாடு செய்யவேண்டும். இரவு 8 முதல் வீரர் சரித்தி ரம், வான சாஸ்திரம், நாடகங்கள் நடித்தல் முதலிய வற்றைக் கற்கலாம். 10 மணிக்குத் தியானஞ்செய்து படுத்து, மறுபடியும் 4 மணிக்கு எழுந்திருக்கவேண்டும். இதுதான் குருகுலப் பயிற்சி முறை. இம்முறையில் பயிலும் மாணவர் வீரப்பூக்களாவர். இத்தகைய கல் விப் பயிற்சியைத் தரும் பாக்கியத்தை, இறைவியே ! எளியேனுக்குத் தருவாய். ஆயிரம் பிரம்மச்சாரிகளை என்னைச் சுற்றி அழகு செய்வாய்.

---

## 38. நன்னெறி

பரிசுத்தமடைந்த வாழ்வு பேரின்பம். சுத்தமே கடவுள். தூயவாழ்வு கடவுளைத் துலக்கிப் பிறருக் கும் அறவழி விளக்காய் இலங்கும். சுத்தமடைந்தவ னுக்கு வெளிவேஷங்களும் சடங்குகளும் வீண்காலப் போக்காகவே தோன்றும். பரிசுத்தப்பட்டவனுக்கு அவையெல்லாம் பந்தமே. பரிசுத்தமுடையவன் மனம் தூய கண்ணாடி போன்று கடவுளின் ஒளியைத் தெரி யக்காட்டும். அவனுடைய மொழிகள் மிகவும் சுருக்க மாகவும் திட்ப நுட்பமான சூத்திரங்கள் போலவும், மக்கள் மரபிற்குச் சிறந்த வழி காட்டியாகவும் உள்ள இன்சொற்களே. அவன் செயல்கள் தன்னலமற்றவை; பிறருக்கு நன்மை தருபவை ; மக்களுக்கு விடுதலை தரு வன. மனதைத் தூய்மைப்படுத்தி, நன்றாகச்சோதித்து உண்மையான அத்யாத்மீக வழியில் நிலைப்பித்தால் பின்னே அருட்பணியும் சிறந்த வாழ்வும் தம்மால்

வந்து அமையும். தனது வாழ்வைத் தன்னலத்துடன் கழித்தல், அதனை நல்ல நோக்கத்துடன் உலகினருட் பணிக்காகத் தந்த ஈசனை வஞ்சித்தலாகும். வாழ்க்கையைப் போக சுகங்களில் வீணுக்குவதே பெரிய ஆத்மஹத்தியாகும். வஞ்சமனத்தால் படிற்றொழுக்கம் பூண்டொழுகுவோர் தர்மதேவதைமுன் பெரிய நம்பிக்கைத் துரோகமும் கொலையும் புரிந்தவராவார். தன்னயம் பேராசை முதலியவற்றால்தான் களவு உண்டாகிறது. தன் தேவைக்கு மேலே சேர்த்தலும், புலன்களை அடிமைப்படுத்தும் வழிகளிற் புகவிடுதலும் பெருங் களவாகும். பஞ்சமா பாதகங்களும், மடமை, அடிமைத் தீமையால்வரும். ஆத்ம திருப்தியுடன், செய்யும் வினைகளைப் பலத்தில் இச்சையில்லாது வழிபாடாகச் செய்க. அழகுபோலும் சுகம்போலும் தோன்றி, வலைபோட்டு, அடிமைகொள்ளும் யாவற்றையும் மனிதன் விலக்குக. அன்பும், அருளும், இன்சொல்லும், அஹிம்சையும், பரோபகாரமும் மனித வாழ்வுடன் ஒன்றியிலங்குக. மனிதனைப் பிடித்த தீ நசைப்பேய் அறிவெனுந் தீயில் மடிக. அத்யாத்ம அறிவு பரிசுத்தமாவதற்கு இயம நியமங்களே சிறந்தவழி. இவற்றின் பலத்தினலேயே புத்தர் அருள்தொண்டு புரிந்தார். இவற்றை முயன்று அடைந்தால் மனிதன் பேரின்பம் பெறலாம்.

பொய், கொலை, களவு, தீமை, பொருளாசை, அடிமைத்தனம் இவற்றை விடுக்கவேண்டும் ; செம்மையும் சால்பும் கடைப்பிடிக்க வேண்டும். இதுவே இயமம். இது உள்ளத்தில் ஒளிர்க. இந்த இயம வழியில் நிற்பவன் பரிசுத்த மடைவான் ; சுதந்தரமடைவான் ; தன் உடையுணவைச் சார்பின்றி அடைவான். உழைத்து வாழ்வான் ; இரந்து வாழான். ஆண்மையுறுவான் ;

அடிமையுறான். மனத்தையும் சொல்லையும் இயமம் தூய்மையாக்கும்.

நியமம் செயலைத் தூய்மைப் படுத்தும். தூய செயல்களும், மனக்களிப்பும், திருப்தியும், கடவுள் வழிபாடும், ஆருயிர்க்கு அன்பும், தெளிந்த அறிவும், நற்செய்கையும், தூய நினைப்பும், அன்பர் பணியும் நியமமாகும். தன்னலமற்று, தன்னையும் பிறரையும் பரிசுத்தமாக்கும் செயல்களே தூயன. இவற்றில் உலகு உயரக் கூடிய பரோபகாரச் செயல்களெல்லாம் அடங்கும். தூய செயலுக்குச் சுத்த மனம்வேண்டும். மனம் சுத்தமடையக் கவலையென்னும் பிணி ஒழியவேண்டும். பேராசையால்தான் கவலையுண்டாகிறது. போன துயரையும், வந்த பிணியையும் இனி வரப்போகும் இன்னல்களையும் எண்ணாது, என்றுங் களிப்பெய்தி, என்ன வந்தாலும் சோர்வின்றி யிருக்கும் சாந்த மனமே ஆத்ம திருப்தி யளிக்கும். அந்த ஆத்ம திருப்தி சிறந்த நியமமாகும். எவ்வுயிரும் பராபரனுடைய சந்நிதியென்று வழிபடுவதே சிறந்த கடவுள் வழிபாடாகும். உலகையே கோயிலெனக் கொண்டு ஆருயிர்களையே நடமாடும் கடவுளெனக் களித்து அருட்பணி யாற்றுவதே சிறந்த கடவுள் வழிபாடு. பூமிதேவியைத் தாய் என்று வணங்கு. சூரியனை உலகின் சக்தியென்று வணங்கு. கடலை வேதமென்று வணங்கு. காற்றை உயிரென்று வணங்கு. இவற்றையெல்லாம் படைத்து நடத்தும் ஒரு இறைவனை மனக்கண்ணாற்காண முயற்சி செய். உலகின் மூலம் கடவுளை அடை. படைப்பின் மூலம் பரமனைப்பார். எப்போதும் மனதில் கடவுள் தோன்றும்படியாக அதைத் தெளியவை. சினம், வெறி, பொறாமை, திருட்டெண்ணம், பகை, காமம் முதலிய

அழுக்கில்லாது பரிசுத்தமாயிரு. உண்மையான ஞானத்தால் மனதைத் தெளியவை. செயலினின்றே மனிதன் வெளிப்படுகிறான். ஆதலின் நற்செயல்களையே செய்ய என்றும்முயல்.கடவுளின் கண்காணிப்பில்என்றும் இருக்கிறோமென்று எண்ணி உன் செயல்களைச் செய்.அன்பர்களை அடிபணிந்து போற்று. அவர்கள் கூட்டத்திலேயே இரு. இல்லையேல் தனிமையாயிரு. நல்லவர் கூட்டமே உன் அறிவிற்குச் சாணைக்கல். இத்தகைய நியமத்தால் மனிதவாழ்வு தூய்மையாகும்; தெய்வத்தன்மையடையும்; தனக்கும் பயன்படும்; உலகிற்கும் பயன்படும். நான் நலம் பெறுவது உலகின் நலத்திற்காகவே. நான் உண்பது உலகில் பிறர் நலத்திற் குழைக்கத் தூல பலம் பெறவே. நான் தவங்கிடப்பது பிறருக் குழைக்கும் மனோபலமடையவே. நான் தூய்மையாவது உலகு தூய்மையுறவே. சூரியன் ஒளிர்வது உலகம் ஒளி பெறவே. அன்பனே! உன்னைச் சுத்தப்படுத்திக் கொள்வதே பெரிய பாரோபகாரம். அதுவே பிறரைச் சுத்தம் செய்ய வழிகாட்டும். இயம நியம நெறியில் உறுதியாய் நிற்பாயாக!

---

## 39. தேக சுத்தம்

உடலுக்கும் மனத்திற்கும் நெருங்கிய பொருத்தமுண்டு. உடலழுக்குற்றால் மனமும் அழுக்குறுமென்பதற்கு ஐயமில்லை. குளிக்காமலிருப்பது மட்டும் உடலழுக்கை யுண்டுபண்ணு மென்பதில்லை. சோம்பல், இடம்பம், செருக்கு இவையும் அழுக்கே. நமது தோலைக் காலையும் மாலையும் நன்கு தண்ணீரால் கழுவ வேண்டும். அடிவயிற்றையும் முதுகையும் மண்டையை

யும் முதன்மையாகத் தேய்த்துத் தேய்த்துக் கழுவ வேண்டும். குளிப்பதனால் பல நோய்கள் அணுகா தொழிகின்றன. ஒரு கதர்த் துண்டை நன்றாகத் தண்ணீரில் நனைத்து முதுகை 10 நிமிஷம் தேய்த்தால் தொட்டி ஸ்நானத்திற்கு இணையாகும். வயிற்றின் மேல் ஈரத்துணியைப் போட்டுக்கொண்டிருத்தல் பல வயிற்று நோய்களுக்கு மருந்தாகும். தண்ணீரே மனிதனுக்கு உள்ளும் புறமும் உபயோகிக்கக்கூடிய உயர்ந்த மருந்து. காலை மாலை 6 மணிக்குக் குளிப்பது சிறந்த பழக்கம்.

வெளித்தோலை மட்டும் சுத்தம் செய்வது போதாது. உள்ளே குடலை நன்கு சுத்தஞ்செய்யவேண்டும். நாம் உண்ணும் உணவால்தான் குடலில் எல்லா நோய்களும் உண்டாகின்றன. அளவோடு தினம் இருமுறை இயற்கையுணவையே உண்டு வாரமொருமுறை உபவாசமிருந்தால், உடல் சுத்தியாகும். குடலில் மலம் தங்குவதனாலேயே எல்லா நோய்களும் பிறக்கின்றன. மக்கள் மலம் வைத்து உண்ணாமல் வாழவேண்டும். இந்த மர்மத்தை எப்போதும் எண்ணவேண்டும். மலக்கட்டு மலச்சிக்கல் உள்ளவர்கள் காலை 4 மணிக்கு 10 விழுங்கு தண்ணீரருந்தி பிறகு நல்ல காற்றில் 3 மைல் தூரம் நடந்தால் மலச்சிக்கல் நீங்கும்; இல்லையேல் எனிமா வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். மலச்சுத்தியானதும் மறுபடியும் 10 விழுங்கு ஜலம் சாப்பிடவும். இம்மாதிரிக் குடல் சுத்தி செய்வது மிகவும் இன்றியமையாதது. மூக்கு, காது இவற்றையும் சுத்திசெய்து கொள்ளவேண்டும். சாப்பாட்டிற்கு முன்னும் பின்னும் பல் விளக்குதல் இன்றியமையாதது. 5 நிமிஷங்களுக்கு மேல் பல் விளக்குவதில் செலவழிக்க வேண்டாம். எச்சிலை வீணாக்கக்கூடாது.

மற்றொரு முக்கியமான தேகசுத்தி சூரியஸ்நானம். இதைத் தினம்செய்வது மிகநலம். காலை 9½ மணி முதல் 10 மணி வரை முழு உடலையும் வெயிலில் நீட்டியிருக்கலாம். உடல் நன்ருக வேர்த்தவுடன் மறுமுறை குளிர்ந்த நீரில் குளித்து விட்டால் மிகவும் சுகமாகும். இது எல்லா நோய்களையும் போக்கும் ; நல்ல தேஜஸைக் கொடுக்கும். இதையொட்டியே முற்காலத்தில் சூரிய நமஸ்காரம் செய்தனர்.

மற்றொரு தேகசுத்தம் பிராணுயாமம். பத்மாஸனத்திலிருந்துகொண்டு இடது மூக்கின் வழியாக மூச்சை 4 மாத்திரைகள் உறிஞ்சி, 16 மாத்திரைகள் அடக்கி, 8 மாத்திரைகள் வெளிவிடவும். மறுபடியும் வலது மூக்கு வழியாக 4 உறுஞ்சி, 16 அடக்கி, 8 வெளிவிடவும். இப்படி 5 தடவை ஒரு மனத்துடன் செய்தால் போதுமானது. இது மனிதனுய்ப் பிறந்தஒவ்வொருவனும் செய்யத்தக்கது. காலை 4 மணி, 12 மணி, மாலை 6 மணி, இரவு 10 மணி 12-மணிக்கு இதைச் செய்யவேண்டும். இவ்விதமான சுத்தவழிகளால் உடலும் மனமும் சுத்தமாகும். உபவாசம், குடல்சுத்தி, சூரிய ஸ்நானம், பிராணுயாமம், ஜல ஸ்நானம், காற்றுப்பட வாழ்தல் இவையே தேக சுத்தத்தையும் மனக்களிப்பையும் தரும். இவற்றை ஒவ்வொரு மனிதனும் கருதுக. கண்டபடி குடலில் கண்ட உணவைத் திணித்தலும், அதிக நேரம் தூங்குவதும், நெருக்கமாகச் சட்டைகளை யணிவதும், மலம் வைத்து உண்ணுவதும் கொடிய நோய். உடலில் அணிகள் போடுவதும், தேவைக்கு மேலாக உடுப்பதும், பிறர் தன்னை அழகன் என்று சொல்லுவதற்காக உடுப்பதும், பகல் தூக்கமும்,

தீய உணவும் 4-மணிக்குமேல் உறங்குவதும் கொடிய நோய்க்கு முதற்படியாவன.

மிதமிஞ்சிய தூக்கத்தினுல் பலபிணிகளும் சோம்பலும் தளர்வும் உண்டாகின்றன. அதிலும் பகல் தூக்கம் கொடிது கொடிது. கண்ட ஆகாரத்தை உண்பதானுல் உண்டாகும் கேடே தூக்கம். பகல் தூக்கத்தை முற்றிலும் வெறுத்தல்வேண்டும். குடலில் மலமிருந்தால் நம்மைத் தூக்கமெனும் படுகுழியில் அயர்த்தும். இரவிலும் தூக்கத்தைக் குறைப்பது மிக்க நலம். பகல் போல இரவிலும் வண்டுபோல், சுறுசுறுப்பாயிருப்பது எவ்வளவு ஆனந்தம்! அதை அனுபவிகளே அறிவர். இரவு 10 மணிக்குப் படுத்து 4-மணிக்கு எழுந்திருக்கும் பழக்கத்தைக் கொள்ளவேண்டும். இரவில் மிகவும் மிதமாகவே உண்ணல் வேண்டும். படுக்கைக்குப் போவதற்கு 3-மணி நேரத்திற்கு முன்னே உண்ணவேண்டும். படுக்கும்போது வெறும் வயிற்ருேடு தண்ணீர் குடித்துப் படுக்கவேண்டும். இப்படிச் செய்தல் இந்திரியத்தை வசப்படுத்தும். அதை யொட்டிய பல நோய்களேத் தீர்க்கும். இயற்கை முறையை அனேவரும் பின்பற்றி மறுபடியும் பாரதநாடு வீர முனிவர் நாடாக முயலுங்கள்!

---

## 40. பெண்ணுக்கிரங்கு

சற்று அருள் விழி திறந்து நோக்குக! வாலிபர் உடலில் எலும்புக் கூடுதான் இருக்கிறது. காளே போன்ற தோற்றம் யாருக்குள்ளது? எங்கும் கூட்டு நெஞ்சு! எங்கும் கண்ணாடிக்கண்! குட்டி நரை! நூற்றுக்கு 99 இந்திரிய நோய்கள்! நடைப் பிணமாகிவிட்ட

னர் ஆண்மக்கள் ! இதில் வறுமைக் கவலை, வயிற்றுக் கவலை, பரீக்ஷைக் கவலை ; என் செய்வர் ! இவ்வெலும்புக் கூடுகள் சிறு பெண்களை மணப்பது மணமாகவா அல்லது சீக்கிரம் பிணமாகவா ? இவ்வலிவற்ற ஆண்கள் பெண்களின் வீரியத்தையும் கெடுக்கின்றனர். இத்தற்கொலையை எத்தனை நாள் நாடு பார்த்துக்கொண்டிருப்பது ? அந்தோ ! பெண்மணிகள், நம் நாட்டுச் சீதேவிகள், கண்ணீர் விடுத்துக் கலங்குகின்றனர் ! அவர்களுக்கு நம் நாடு என்ன செய்கின்றது ? கல்வி மணம் பெறுமுன் கலியாணம் ; சிறு வயதிலேயே திருமணம். இந்த பொம்மைக் கலியாணத்தை இன்னும் பாரத நாடு பார்த்திருக்க வேண்டுமா ? இன்னும் நமது நாடு நடைப் பிணக் காட்சியாக வேண்டுமா ? இப்போது இல்லறத்தில் இருப்போர் மீண்டும் தேவாங்குகள் போன்ற குட்டிகளைப் பெறாது இருப்பதே நலம். பெண்கள் முதன்மையாகப் பிரம்மச்சாரிணிகளா யிருந்து தக்க கல்வி பயிலுதல்வேண்டும். அவர்களைச் சிற்றின்பப்பொம்மையாகவும், சமையல் செய்யும் யந்திரமாகவும் எண்ணும் கொடுமை ஒழியவேண்டும். பெண்களை ஒரு வியாபாரச் சரக்கென்று எண்ணி விலை பேசுந் தீமை ஒழியவேண்டும்.

கைம்பெண்ணின் கண்ணீர் கடலாய்ப் பெருகுகின்றது ! ஏறக்குறைய 20 வயதிற்குமேல் பெண்களுக்குச் சொல்லொணுப் பிணிகள் வந்துவிடுகின்றன. நீரிழிவு, சூலைக்கட்டு, மாத விடாய் நோய்கள், மலச்சிக்கல், கருப்ப நோய்கள், நெஞ்சுக் குத்தல் முதலியன சிறு பெண்களுக்கு வருவதேன் ? அவர்களை நோய்வாய்ப் புகுத்தி உருக்குலைப்பது யார் ? அவர்கள் மனதைச் சரியான கல்வியில் திருப்பி எண்ணத்தை நல்வழியில் மாற்றி

ஞல், சிற்றின்ப இச்சையால் இத்துணை சீரழிவு வருமா? ஆண் பிள்ளைகள் தீய கல்வி பயின்று நோய்க்கிடந்தரும் கொடிய பழக்கங்களை வாலிபத்திலேயே அடையும் தீமை தீருவதெப்போது? அவர்கள் பிரம்மச்சாரி களாகத் தவமும் திறமும் செறிந்து நிற்பதெப்போது?

ஏ பாரத நாடே! உன் எழில் குன்றிவிட்டது! பிரம்மச்சரியம் போய்விட்டது! பிரம்மச்சரியத்தின் அளவே மணவாழ்வும் சிறக்கும். அதுவே இன்பத் திற்கு அடிப்படை. அஃதின்றிச் சேரும் ஆண் பெண் கள் நோய் வாழ்வே வாழுவர். ஆதலின் ஆண் பெண் களின் திருமண வயதை முடிந்த மட்டும் உயர்த்த வேண்டும். சில நாள் அவர்களுக்குக் கலியாணத்தின் நினைப்பே வரக்கூடாது. உண்மையான காதல் உண்மை யான உடல் வலிமையுள்ளவருக்கே பிறக்கும்.

சமூக நேயர்கள் சிந்திக்கவும் :—

விவாகத்திற்குமுன் பிரம்மச்சரியம் அவசியமா, இல்லையா? ஆண் பிள்ளைகள் 25 ஆண்டு மட்டும் பிரம் மச்சாரிகளாயிருப்பது நன்மையா தீதா? பெண்களும் பிரம்மச்சாரிகளாக 16 வயது மட்டும் தக்க கல்வி கற் பது நலமில்லையா? பார்வதி தேவி கௌரி சங்கரத்தில் குமரியாகத் தவஞ் செய்யவில்லையா? பரமசிவன் பார்வதியை அப்போது உண்மையான காதலால் மணக் கும்போது வயதென்ன? கிருஷ்ணன் உண்மையான காதலால் தூக்கிச்சென்று மணந்த ருக்குமணிக்கு வய தென்ன? ஆண் பிள்ளைகளுக்கும் பெண்மணிகளுக்கும் சுமார் 5 முதல் பத்து ஆண்டுகள்வரை வயது வேற் றுமையிருக்க வேண்டுமா, இல்லையா? பெண்களைக் கல்வி பயிலாது இப்போதிருக்கும் கலியாணம் தடை செய்கிறதா இல்லையா? பெண்கள் கல்வி பயிலவேண்டுவ

தில்லையா? 8 வயதில் ஒரு பெண்ணுக்கு இல்லறத்தைப்பற்றி என்ன தெரியும்? 12 வயதிலும் 16 வயதிலும் ஒரு பையனுக்கு இல்லற வாழ்வைப்பற்றி என்ன தெரியும்? இச்சிறு வயதில் கலியாணம் நடந்தால், இருவருக்கும் காமத்தில் நினைப்புச் செல்லுகிறதா இல்லையா? பிறகு படிப்பிற் கவனம் போகுமா? படிப்பின்றி வாழ்வால் பயனுண்டா? கலியாணம் செய்ததுடன் சம்பாதிக்கும் நினைப்பைத் தவிர அத்யாத்மக் கல்வி கற்கும் நினைப்பு உண்டாகுமா? சிறு வயதில் கலியாணஞ் செய்வது இருவர் மனத்தையும் சிற்றின்பத்திலேயே ஆழ்த்தவில்லையா? பருவமாகாதபோதும் புணர்ந்து எத்தனை அபாயமான சம்பவங்கள் நடந்துள்ளன? சிறு வயதில் மணமாகாவிடின், இருவர் மனமும் சிற்றின்ப ஏக்கமெடுத்து அவர்கள் வழி தப்பி விடுவார்களா? அவர்கள் மனத்தை நன்னெறியிற் புகுத்துங் கல்வியிருந்தால் அப்படி நேருமா? இக்கெட்ட எண்ணங்களுக்கு சுற்றமும் பழக்கமுமே காரணமன்றோ? ஒரே மனதுடன் 25 வயதுமட்டும் படித்தால் நலமா? அல்லது பெண்சாதி, மாமனார், மாமியார், பொங்கல் சீரு, தீபாவளிச் சீரு, நலங்கு, கண்ணூஞ்சல், என்பவற்றில் மனம் மூழ்கிய போது படிப்பேறுமா? சீக்கிரம் விவாகமாதல் வேண்டுமென்று பெண்ணைப் பெற்றவர்கள் எவ்வாறு தவிக்கின்றனர்! வரதட்சிணை வாங்கிக் கலியாணப் படிப்புப் படிக்கும் வாலிபர் எத்தனை! இருவருக்கும் பிழைக்கத் தொழிலும், மக்கள் அறமும், இல்லறவொழுக்கமும் தெரிந்த பின்பு மணம் புரிவித்தல் நல்லதல்லவா? சிறு வயதில் பெற்றோர்கள் தங்கள் இஷ்டப்படி மாப்பிள்ளை மறுமகளைத் தேடுவது பிறகு அனர்த்தமாகவில்லையா? அப்போது சிறுவர்

களுக்கு எப்படி விவரம் தெரியும்? அறியாப் பருவத்தில் புரியும் மணம் வெறுமையல்லவா? வயது வந்து, காதற் கண்களால் தகுதியறிந்து சேரும் மணமக்கள் மங்கலமான இல்வாழ்வு நடத்துவாரன்றோ? நம் நாட்டில் கைம்பெண்கள் இத்தனையிருப்பதற்குப் பல்வேறு காரணங்கள் உள்ளன. எனினும் ஆண் பிள்ளைகள் சிறு வயதில் தங்கள் வீரியத்தைத் தங்கள் வாலிப மனைவியர்பால் இறைத்தலும் ஒன்றல்லவோ? ஆண்கள் 25 வயதிலும், பெண்கள் 16 வயதிலும் உண்மையான பிரம்மசரியக் கல்வி கற்றபின் உண்மையான காதலுடன் மணந்தால் கெடுதல் என்ன? அப்போது 16 வயதிற்குள் விதந்துக்கள் ஆகும் கொடுமையாவது நிற்குமன்றோ? இருவருக்கும் உடல் உறுதியும், பொறுப்பும், காதலும், இச்சையும் பெருகியபோது இல்லறம் நடத்தல் இன்பமன்றோ? முற்காலத்தில் வாலிபர்கள் பிரம்மச்சரியமிருந்து தானே மணந்தனர்? பெண்களை எட்டுவகையாக மணந்தனர்.

இத்தகைய ஆராய்ச்சிகள் செய்துகொண்டே போனால், நம் நாட்டில் பாலிய விவாகக் கொடுமையால் வந்த சீரழிவுகள் நன்கு புலப்படுகின்றன. பழைய சாஸ்திரங்களைச்சொல்லிக் காலத்தின் ஓட்டத்தை எதிர்க்க ஒருவராலும் முடியாது. பழைய சாத்திரத்தில் அந்தணப் பிள்ளைகள் ஆங்கிலம் படித்து உத்தியோகஞ் செய்யச்சொல்லி யிருக்கிறதா? பழைய காலத்தில் வரதட்சிணைக்காகப் படிப்பதுண்டா? அந்தோ அந்தணரே! பழைய காலத்தை நீங்கள் அறியீர்கள்! புதுக்காலத்தையும் அறியீர்கள்! பழைய காலத்தில் அர்ஜுனனும் இராமனும் எவ்வளவு வீரந்ததும்பும் நிலையில் மணம் புரிந்துகொண்டனர் என்பதை அறிவீர்

களா? அத்தகைய வீரக் குறைவிற்கு வாலிப மணமும் காரணமே. கண்டபடி உண்பதால் நோய் உண்டாகிறது. கட்டுப்பாடுகளும் ஒழுக்கங்களும் பிரம்மச்சரியத்தால் உண்டாகின்றன. பாலிய விவாகத்தால் மாமனார் வீட்டுப் பணியாரந்தான் கிடைக்கும்.

இல்லறம் ஈசன் அருளால் எய்தும் நல்லறம். உலகம் உயிருடனிருப்பதற்கு மனை வாழ்வே அடையாளம். அவ்வில்லறத்திற் பெருத்த பொறுப்புகள் உள்ளன. ஆண்மையும், பெண்மையும் அழகுடன் கூடி, மானறங் காத்து, மக்களை யீன்று, அண்டிய விருந்திற் கன்புடன் ஊட்டித் தாமும்வாழத் தருமமும் வாழ, தாரணிவாழத் தாங்கிய தில்லறம். மனைவி வாழ்க்கைத் துணை; இல்லிற்கு விளக்குஇல்லாள். மென்மையும், உடலின்பமும், ஈகை, இரக்கம், அன்பு, தெய்வபக்தியுங்கொண்டு, நல்ல குணமணியாக நாணுடுத்து விளங்குவாள் இல்லாள். அறம், அன்பு, ஐங்கடன் முதலியவை செய்வதற்கு இல்லாளே துணை; உணவிற்கும் சிற்றின்பத்திற்குமே மனைவியல்ல. அவள் வீட்டிற்கே திரு. சமைத்தல், அணிசெய்தல், பாடுதல், இல்லறக் கடமைகளை அறிதல், கல்விப் பயிற்சி, கலைவளர்ச்சி, வைத்தியம் முதலியன இல்லக்கிழத்திக்கு இன்றியமையாதன. இருவரும் இப்படிக் கற்புடன்கூடி நடத்தும் இல்லறத்திற்கு அடிப்படை இளமையில் பிரமச்சரிய மன்றோ? ஆதலின் இவற்றை யெல்லாம் விரிந்த மனத்துடன் எண்ணிப் பார்த்தால் உண்மை விளங்கும். மனிதனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் மனச் சாட்சியையும் இயற்கையறிவையும் கொண்டு விசாரித்தல் வேண்டும்.

பாலிய மணத்திற்கு முடிவு வந்துவிட்டது. இனி நமது இளங் காளைகள் சரியான பிரம்மச்சரியத்திற்குப்

பிறகே நல்ல கன்னிகையை உவந்து மணப்பர். வரதட் சிணைக்கு ஒய்வு வந்து விட்டது. பெண் சுதந்திரக் கொடி நிவந்துவிட்டது. ஆண்களும் வீரராகி வருகின் றனர். பொம்மைக் கலியாணங்கள் பொன்றின. திண் மைக் கலியாணம் வந்தது ! தேவதாஸிகள் தேச சேவகி களாயினர். வியபசாரம் ஒழிந்தது.

போங்கும் மங்களம் எங்குந் தங்குக !

---

## 41. இல்லற வாழ்வு

ஒரு மின்பொறி (Battery) யோடுவதற்கு இரண்டு மின்வன்மைகள் (Electric Powers) வேண் டும். ஒன்று ஆகு மின்னல் (Possitive Current) மற் றொன்று ஏகுமின்னல் (Negative Current). இரண் டும் சேர்ந்து தான், விளக்குகள் எரிகின்றன; விசிறிகள் சுழல்கின்றன ; வண்டிகள் விரைகின்றன ; படங்கள் ஆடுகின்றன ; பேசுகின்றன. நாம் பார்க்கும் பொரு ளெல்லாம் இரண்டிரண்டாகவே நிகழ்கின்றன. ஆண், பெண் என்னும் தத்துவங்களே அவ்விரண்டும்.

> பெண்ணின்றி யாணில்லை ; ஆணின்றிப் பெண்ணில்லை ;
> எண்ணிருவர் சேர்ந்தே யிகம்.

ஆண் சிவமயம்; பெண் சக்தி மயம். ஆண் கதிர வன், பெண் கதிர். ஆண் தங்கம், பெண் அணிகலன். ஆண் அறிவொளி, பெண் அன்பழகெழில். ஆண் இறை, பெண் இயற்கை. ஆண் காவியம், பெண் இசை யின்பம். ஆண் கடல், பெண் திரை. இந்த இரண்டும் சமமான சம்பந்தமுள்ள நித்திய உண்மைகள். அதனல் தான் நமது பெரியார்கள் கோயில்களிலும், பாசுரங்களி லும், உமாபதி, சக்தி சிவன், இலக்குமி நாராயணன்

என்று பெண்ணான் வடிவிற் கடவுளைப் பாவனை செய்து போற்றுகின்றனர்.

> பூனோடு பொன்போற் பொருந்தி யறிவொளிரும்
> ஆணோடு பெண்சக்தி யாம்.

ஆணிலுள்ள சிவம், தான் பூரணம் பெறுவதற்குப் பெண்ணிலுள்ள சக்தியைக் கவர்வதே காதலின் உண்மை.

> காந்த வடக்குமுனை தெற்கைக் கவர்வதுபோல்
> மாந்தருள் ஆண் - பெண் மயக்கு.

இந்தக் கவர்ச்சியின் நோக்கம் ஒன்றை மற்றொன்று கூடிப் பூரணப் படுத்துவதேயாம். பூக்கள் வண்டுகளைக் கவர்ந்து; அவற்றின் மூலம் தமது பூந்தாட்களைப் (Pollen) பெண் பூவிற்குட் செலுத்தி யல்லவா தாவரங்கள் வளம் பெற்றோங்குகின்றன? அதுபோலவே அழகென்னும் மாயா சக்தியாலும், காதலென்னும் இயலுணர்வாலும் மனமலர்கள் ஒன்றின் சக்தியை மற்றொன்று பெற்று இரண்டும் நிறைவுற்று, உலக வாழ்விற்கே ஆதாரமாகின்றன. இப்படிக் காதலும், கற்பும், அன்பும் ஈகையும், உள்ளொற்றுமையும், அழகின்பமும் நுகர்ந்து உலகவாழ்வை மேன்மையாக்குவதே இல்லறத்தின் கருத்து. இல்லறத்தில் எய்தும் சிற்றின்பத்திற் பழுத்து, மனமாசகன்று, உலகின்பத்தினும் பெரிய பேரின்பம், உள்ளதென்று அறிந்து, அந்தப்பேரின்பமான, இறைவனடிபற்றிக் கடைத்தேறுதலே இல்லறம் அளிக்கும் பெரும்பயனாகும். இல்லற மில்லாவிட்டால் உலகமேயிராது. நல்ல மனையறத்தினால் தான் ஒரு நாடு பெருமை பெறும். அன்பும், அறமும், ஐங்கடனும் போற்றி இல்லறத்தொழுகும் சதிபதிகள் நாட்டிற்குப் பெரும்பணி புரிந்தவராவார்.

7

வீட்டின் விரிவே வியனுலகம்; ஆதலினால்
வீட்டறத்தில் வெற்றி விளக்கு.

சுமார் 23 வயதிற்கு மேற்பட்டு முப்பத்தைந்து வயதிற்குள்ளாக ஆண்மகனும், 16 வயதிற்கு மேற்பட்டு 24 வயதிற்குள்ளாகப் பெண்கனியும், தக்க கல்வியறிவு வாய்ந்து, ஒருவரை யொருவர் இயல்பாகக்காதலித்து நன்மணம் புரிந்து நடத்தும் இல்லறமே மனிதனுக்கு இவ்வுலகில் ஒப்புயர்வற்ற உடலுயிர் இன்பத்தை நல்கும். கண் கருத்தொத்த மனையில், பிணக்கின்றி ஒருவர் மனத்தை ஒருவர் அறிந்து, இரு கண்ணெனவும், ஒரே மார்பிலுள்ள இரண்டு உயிரிகள் (Lungs) போலவும், இடை பிங்கலை நாடிகள் போலவும் வாழும் இல்லறத்தில் அட்ட மங்கலங்களும் விளங்கும்.

கண்ணொத்த வீட்டிற் கருத்தொத்து மங்கலமாம்
மண்ணொத்த வான்பயிரைப் போல்.

தூய கற்பு, துகளறு நேயம், உள்ளுயிர்க் கலப்பு, உன்னத நினைப்பு, இன்னிய நல்லுரை, இயன்ற நல்லீகை, பசிக்கொரு நற்றொழில், பரமனிடம் நெஞ்சு, இயற்கைவழி வாழ்வு, உயிர்களுக்கு அன்பு, கலைவளர்ச்சி, கல்விப் பெருக்கம், தொழில்முயற்சி, தூய செய்கையுடன் தமக்கும், தம்மைச்சார்ந்த கிளையினர்க்கும், தமது அருமை மக்களுக்கும், ஊருக்கும் நாட்டிற்கும், உலகிற்கும் பயனாகும்படி இல்லறமாகிய நல்லறம் ஓங்குக !

மண்ணின வுயிர்களெல்லாம் மகாசக்தி மைந்தரென்றே [வோம்
எண்ணிநன் மதிப்போம்; அன்பும் ஈகையுந் தொண்டுஞ் செய்
கண்ணின மென்னக் காதற் கருத்தினில் ஒன்று பட்டுப்
பெண்ணினப் பெருமை போற்றிப் பீடுயர் ஆண்மை வாழ்க !

---

## 42. திருமணக் குறிப்பு

(இது நீண்ட காலத்திற்கு முன்னே சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்கள் எழுதியிருந்த தின சரிக்குறிப்பு).

பெண்கள் சக்தி வடிவங்கள். அவர்கள் சேய்வளர்க்கும் காமதேனுக்கள். அவர்கள் உலகின் சீதேவிகள். அவர்கள் புன்னகை உலகின் மகிழ்வு. அவர்கள் இன்னல் உலகின் இன்னல். அவர்கள் ஒழுக்கம் உலகின் ஒழுக்கம். அவர்கள் இழுக்கம் உலகின் நாசம். மனிதனுக்கருகே அவர்கள் சக்திக்கனலாகத் திகழ்கிறார்கள். ஒரு சமுதாயத்தில் இரக்கம், அன்பு, அருள், ஈகை, அழகுக் கதிர்களைப் பரப்புவது பெண் தெய்வமே. மனிதன் வீரம், தைரியம், ஆண்மை, ஆட்சி, பலம் முதலியவற்றை இயற்கையாகக் கொண்டவன். பெண்மையின் அன்பும் ஆண்மையின் வீரமும் சேர்ந்தால் தான் மனித சமூகம் பூரணமாகும். பெண்மையும் ஆண்மையும் வாழ்வின் இரண்டு துடிப்புகள்; உயிரின் இரண்டு நாடிகள். ஆணும் பெண்ணும் சேர்ந்து பூரணம் பெறலே மணவாழ்வின் பண்பும் பயனுமாம். ஒன்றுபட்டு வாழும் காதலராலேயே உலகம் நடக்கிறது. குணத்தைக் கணித்தே கன்னியை மணக்க வேண்டும். ஒருவர்பால் குறைந்த குணம் மற்றொருவரிடம் நிறைந்திருத்தல் காணவேண்டும்; தன் வாழ்விற்குச் சாதகமாயிருக்கும் இல்லாளையே கொள்ளவேண்டும். பணமும், வரதட்சிணையும், பொருளும், போகமும், செல்வமும், தோல் அழகும் கணக்கல்ல. வரதட்சிணை (ஆண்களைப் பெண்கள் விலைக்கு வாங்குதல்) சீர்கள், இடம்பமான ஆடைகள் இவற்றால் உலகு

ஏழையாகிறது. பெண்களை போகப் பதுமைகளாகவும் சமையல் செய்யும் யந்திரங்களாகவும் கருதக்கூடாது. ஆண்கள் தம் பெண்டு பிள்ளைகளுக்காகக் கண்ட தொழிலையெல்லாம் செய்து பொருளீட்டும் பொறிகளாயினர். ஆணும் பெண்ணும் அத்யாத்ம வாழ்வுடன் உலகின் பணி செய்து, தமக்குச் சந்ததி வேண்டும் போதே மகிழ்வுடன் கூடி வீரரைப் பெற்று மற்ற நாட்களில் பிரமச்சரியம் பூண்டு வாழவேண்டும். விவாகத்திற்கு எவ்வளவு தடபுடல்! வீண் செலவு!

நவ யுகத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் திருமணச்சாலை யொன்று உண்டு. அதிலேதான் எல்லா மணச்சடங்குகளும் நடைபெறும். சித்திரை, தை, மாசி, பங்குனி முதலிய மாதங்களே திருமணத்திற்கு ஏற்றவை. புதன், வெள்ளி இரண்டும் நன்னாட்கள். காலை 8 மணியே நாழிகை. அந்தக் கிராமத்தில் நடக்கும் எல்லா விவாகங்களுக்கும் ஒரே நாளாயினும் பாதகமில்லை. எல்லாரும் ஒன்றுபட்டு ஒரே சுப முகூர்த்தம் நடத்தலாம். மேளக்காரன், உபாத்தியாயர் முதலியோர் கிராம சமுதாயத்தின் காப்பிலிருப்பதால் அவர்கள் இனமாகவே வருவர். அவரவர்கள் திறத்திற்குத் தக்கபடி ஏழைகளுக்கு அன்னமிடலாம்; தர்ம ஸ்தாபனங்களுக்கு உதவலாம். முகூர்த்தத்திற்கு முன்னாள் இல்லற வாழ்வைப்பற்றிப் பெரியார்கள் சொற்பொழிவு செய்ய வேண்டும்.

அந்நாள் இரவில் மணமகனும் மணமகளும் தாங்கள் அறவழியில் இல்வாழ்வு நடத்துவதாக உறுதி கூறுதல் வேண்டும்.

பிறகு சதிபதிகள் கடவுளைத் தியானிக்கவேண்டும். "இறைவ! எமது இல்வாழ்வு அன்பும்அறமும், திருவும்

அருளும் அறிவும் நிறைந்து பொலிக ; எமக்கு அருட் செல்வமும் அன்பும், அருட்பணியும், வீரமும், ஆற்றலும், நன்மக்கட் பேறும் தழைத்தோங்குக!'' என்று வணங்கித் தியானிக்கவேண்டும். மறுநாட்காலை 4 மணிக்கு எழுந்து நீராடித் தூய உடையணிந்து, நாயகனும் நாயகியும் சூரியனைப் பார்த்துக் கைகோத்துத் தியானித்து நிற்பர். பெரியார் வாழி கூறி, தீ வளர்ப்பர். 'கதிரும் கதிரவனும், தீயும் ஒளியும்போல நாங்கள் ஒன்றுபட்டு வாழ்வோம்' என்று வாக்களிப்பர். பிறகு மாலைசூட்டி அக்கினியை வலம் வந்து இருவரும் வணங்குவர். பெரியோர் இராமாயணம், பாகவதம், பைபிள், கொரான், திருக்குறள் முதலிய அறநூல்களினின்று நீதிமொழிகள் சொல்லி விளக்குவர். அவற்றைக் கேட்டு ஏதாயினும் ஒரு நீதிநூலை உபதேசமாகத் தம் வாழ்க்கை முழுதும் ஆராய அக்கினி முன்னே எடுத்துக் கொள்ளுவர். மதியத்தில் வெய்யலில் $\frac{1}{2}$ மணிநேரம் இருந்து, பின்னர் முழுகி, மனைவி கணவனுக்கு நல்லுணவு கொணர்ந்து வணக்கமுடன் வைப்பாள். மணமகன் தன் மனைவியை அன்புடன் அழைத்து இருத்தி அவளுடன் உணவு கொள்வான். மனைவி கணவன் கொடுப்பதை யுண்பாள். கணவன் மனைவிக்கு உணவு தருவான். இது முடிந்ததும் கைகால்களைக் கழுவி மலர்சூடி இருவரும் கைகோத்து மணவரைக்குச் செல்லுவர். மணவரையில் இனிய பாட்டுகள் முழங்கும். சித்திரம், சிற்பம், சங்கீதம், நூலறிவு முதலிய பலதுறைப் புலவர் ஆற்றலெல்லாம் அப்போது விளங்கும். அவர்கள் சன்மானம் பெறுவர். மாலை 4 மணிக்குப் பெண்கள் மணமகனை

வாழ்த்தி நலங்கிடல், பூச்செண்டாடல், ஊஞ்சலாடல் முதலிய வைபவங்களைக் கொண்டாடுவர். 6 மணிக் கெல்லாம் மணமக்கள் தனித்தனியே சென்று மாலைக் கடன்களை முடித்து வந்து, அக்கினி தேவனை வணங்கி, "ஏதேவ! நீயே எமது சக்தி; நீயே எமது உள் ளொளி! உமது சக்தி எம்முள் வாழ்க" எமது இல் லற வாழ்வு உனது அருளால் மங்கலமாகுக! என்று வலம் வருவர். அப்போது நல்லோர் வாழ்த்துவர். பொருள் விளங்காத மந்திரங்களைக் காட்டிலும் தேவா ரம் திருவாசகம் திருவாய்மொழி முதலிய அருள்வாக்கு களை இன்னிசைக் கருவிகளுடன் பாடுதல் நலமாம். பெண்கள் வாழ்த்திப் பூச்சொரிவர்; ஆலத்தியெடுப்பர். பின்பு ஆகாயத்தில் அருந்ததி பார்த்துக் கற்பின் திற முணர்வர். அதன்பின் மணமகள் கணவனுக்குப் பாலும் பழமும் கலந்துகொடுக்க, நாயகனும் நாயகிக்கு அவ் வாறே செய்ய இருவரும் உண்பர். பின்னே இரவு 10-மணிக்குச் சகல வைபவங்களுடன் மணமக்கள் தனி யிடத்திற் கூடுவர். அன்று முதல் தங்கள் கடமையை யறிந்து ஒன்றுபட்டு வாழுவர். இல்லற நெறியை நன்கு உணர்ந்த பிறகே மணவினை முடித்தல் மாண்பு. ஆடவர் 25 வயதிலும், பெண்கள் 16 வயதிலும் மணத்தலே நலம். அதுவரை இருவரும் பிரம்மச் சரியம் வகிக்க வேண்டும்.

---

## 43. காதலர்

திருமணவாழ்வு நலம் பெற்ருேளிர்க! ஒருவருக்கொருவர் பொறுப்பான அன்பும் ஆதரவும், காதலும் கற்பும், நேசமும் பாசமும் பூண்டு, சதிபதிகள் நல்லறமாகிய இல்லறத்தை இனிது நடத்துக!

இரண்டு கம்பிகள் இணைந்தே ஒரு மின்சாரப் பொறியை நடத்துகின்றன; கதிரும் கடலும் இணைந்தே மேகமுண்டாக்கி மழை பெய்து உலகை வளர்க்கின்றன; பூக்களும் நூலும் இணைந்தே பூமாலையாகின்றன. அது போல உலகமும் மனமொத்த காதலரால் நடை பெறுகிறது. உலகம் ஆண் பெண் ஆடல்; ஆணின்றிப் பெண்ணில்லை; பெண்ணின்றி ஆணில்லை. இருவரும் சேர்ந்தே உலகம்; இருவரையும் சேர்க்கும் மஹாசக்தியே காதல். ஆணும் பெண்ணும் சேர்ந்தே மானிடம். பூக்களிலும் ஆண் பெண் பூக்களும், காதலுணர்வும் உண்டு. மானிடத்தின் ஒரு பாதியான ஆண் தனது மற்ருெருபாதியான பெண்ணினுல் பூரணம்பெற வேட்பதே காதல். சிவனும் உமையும் கூடி அர்த்தநாரீசுராயிருப்பதன் இரகசியம் இதுவே. நமது கோயில்களில் சுவாமியுடன் அம்மனுக்கும் சந்நிதியிருக்கிறது. ஆணில் உள்ள சிவம், பெண்ணிடமுள்ள சக்தியை விரும்புவதே காதல்.

உலக வளர்ச்சிக்காக மாயா சக்தியால் ஏவப்பட்ட காந்த சக்தியே காதல்; இவ்வுணர்வைத் தடுக்கவோ தப்பவோ யாராலும் முடியாது. மிகச்சில கடுந்தவ யோகிகளே இவ்வுணர்ச்சியை வெல்லுகின்றனர்.

ஐம்புலனின்பத்தையும் ஒரே காலத்தில் அளிக்கும் இக்காதல் வாழ்வைத் தமிழர் ஒரு கலையாகவே வளர்த்

தனர். அதற்காகவே அகப்பொருள் இலக்கண இலக்கியங்களை ஏராளமாக எழுதியிருக்கின்றனர்.

திருக்குறள் காமத்துப்பாலே தமிழரின் காதல் வாழ்விற்குப் போதிய சான்றாகும். திருக்குறள் இல்லற வேதமே.

கல்விகேள்வி ஒழுக்கங்களிற் சிறந்த ஒரு வாலிபன் வாழ்வென்னும் தோட்டத்தில் நுழைகிறான். அங்கே ஓர் இளங்கன்னியைக் காண்கிறான்; இருவர் விழிகளும் புல்லுகின்றன; ஒருவர் அழகை மற்றொருவர் மனத்தில் வியக்கின்றனர்; நாணம் தலைப்படுகிறது; இருவரும் ஒருவரையொருவர் அறியாதவர் போலப் பொது நோக்கு நோக்குகின்றனர் ; கண் கண்ணைக் கதுவுகிறது ; ஒருவர் மனத்தில் மற்றொருவர் புகுந்துறைகின்றனர் ; தோழி தூதுரைக்கிறாள் ; காதலர் கலக்கின்றனர் ; இருவரும் கூடி இல்வாழ்வு நடத்தச் சம்மதிக்கின்றனர். இவர் காதலை யறிந்து பெற்றோர் மணவினை முடிக்கின்றனர். தக்க தொழில் செய்து பொருள் தேடி மணமகன் மனையைத் தாங்குகிறான். மணமகள் மனையினுள் அரசியாக விளங்குகிறாள். அன்பு, அறம் இரண்டும் இல்லறத்தின் இரு கண்கள்.

ஒழுங்காக இல்லறங் காத்தால் அதைப்போல நல்லறம் வேறில்லை ; துறவறத்தை விட அன்பு, அறம், உண்மை, பொறுமை, நல்லொழுக்கங்களுடன் கூடிய இயல்பான இல்லறமே பன்மடங்குமேல். உலகில் எல்லாரும் உண்மையான துறவியாக முடியாது ; இல்லறமே பொதுவாக எல்லோரும் போற்றும் நல்லறம். வீடு எப்படியோ அப்படியே நாடும் ; கோடிக்கணக்கான வீடுகள்சேர்ந்தே நாடாகிறது. ஆதலால் இல்லற

வாழ்வு ஒழுங்காயிருந்தால்தான் நாடும் நலமுறும். வீடெப்படி நாடப்படி.

ஆண் ஆண்மை, வீரம், வலிவு, அறிவு வீரியம் ; பெண் அழகு, அன்பு, அணி, சக்திக்கனல் ; வாழ்வென்னும் மின்சார யந்திரத்தின் இரண்டு சக்திகளே ஆணும் பெண்ணும். இரண்டு சக்திகளும் பூரண வளர்ச்சி பெறவே இல்லறம் மேற்கொள்ளவேண்டும்.

சுமார் 22 ஆண்டுகள் வரை ஆண்மகன் பிரம்மச்சரியம் பூண்டு, கல்விகேள்விகளில் தேர்ச்சி பெற்று, குடும்ப நிர்வாகத்திற் கேற்ற தொழிற் பயிற்சியும், உடலுறுதியும் பெறவேண்டும். பெண்கள் சுமார் 16 வயதுமட்டுமாவது தக்க கல்விப்பயிற்சியும் குடும்ப நிர்வாகத்திற் கேற்ற அறிவும் திறனும் பெறவேண்டும். இயல்பாக, உள்ளார்ந்த காதலாற் கூடி இருவரும் இல்லறந் தாங்கவேண்டும்.

இவ்வாறு இயல்பாகக் காதலிப்பவர் தமதிச்சைப் படி களவொழுக்கம் செய்யக் கூடாது. பெரியோர்களுக்குத் தெரிவித்து, அக்கினி சாட்சியாகத் தக்காரைக் கொண்டு மணவினை நடத்திய பிறகே, மனை வாழ்வு வாழவேண்டும். இதுவே நமது தமிழர் நாகரிகம். தமிழ் இளைஞர் ஆண்மையும் தமிழ்ப் பெண்டிர் கற்பும் புகழ் பெற்றன.

இல்லறம் அனுபவச்சாலை; பயிற்சிக்கூடம். அதில் இன்பமும் உண்டு ; துன்பமும் உண்டு ; இரண்டையும் சமமாகத் தாங்கவேண்டும். வண்ணான் வேட்டியின் அழுக்கை எப்படிப் போக்குகிறான் ? மற்றோர் அழுக்கான மண்ணைக் கொண்டு வேட்டி வெளுக்கிறானல்லவா ? அதுபோல உலகானுபவத்தால் மனித வாழ்வு மாசறுகிறது.

## 44. மனைவி

மனைவி வீட்டுத் திருமகள்; அவளைக் கணவன் சக்தியாக மதித்துப் போற்றவேண்டும். எந்த வீட்டில் மனைவி மனக் கசப்பில்லாது, கண்ணீர் விடாது, புன்னகையுடன் விளங்குகிறாளோ அந்த வீட்டைத் தேடி வருவாள் சீதேவி! பெண்ணை அடிமைப்படுத்தும் மனைவாழ்வு நாட்டை அடிமைப்படுத்தும். பெண்ணைப் பெருமை படுத்தும் மனைவாழ்வு நாட்டைப் பெருமைப்படுத்தும். பெண் வீட்டரசி; அவள் மனையை அழகு செய்வாள்; வீட்டை மெழுகிக் கோலம் போட்டு, மலரால் அலங்கரித்து, சாமான்களை ஒழுங்காக அடுக்கி, விளக்கேற்றி வீட்டை மங்கலமாக்குவாள். தனது அழகாலும் கிளி மொழியாலும், பாசத்தாலும், முறுவலாலும், முகவிலாசத்தாலும், அன்பாலும், பணிவாலும் கணவன் உள்ளத்தைக் கவர்ந்து, காதலை வளர்ப்பாள். கணவன் விரும்பும் இனிய உணவுகளைச் சமைத்து, சுசிருசியாக ஊட்டி உபசரிப்பாள்; குழந்தைகளைத் தாலாட்டிச் சீராட்டிப் போற்றி வளர்த்துக் குலம் விளங்கச் செய்வாள். வீணையும் தந்தியும், தேரும் உருளையும், மலரும் மணமும், நீரும் நிலமும் போல நாயகனுடன் மனமொத்து வாழுவாள்; அவனது இன்ப துன்பத்தைத் தனது இன்பதுன்பமாகக் கருதுவாள்; கணவனுடன் சேர்ந்து பக்தி சிரத்தையுடன் கடவுள் வழிபாட்டையும் சமயக் கடமைகளையும் நடத்துவாள்; வந்த விருந்தை உபசரித்து ஊட்டுவாள்; கள்ளம், கபடு, போட்டி சண்டை, இளஞ்செருக்குகள் இன்றி, கற்பும், அன்பும் மிகுந்து கணவனுக்கு உற்ற துணையாவாள்.

அன்பு, பொறுமை, அழகு, அணி, இவற்றில் பெண்மைக்குச் சமானம் பெண்மையே! ஆண் கட்டித் தங்கம்; அதை நகாசு செய்து வகைவகையான அணிகளைச் செய்வது பெண். பெண் அன்புக் கற்பகம்; மக்களை வளர்த்துக் குலத்தை விளக்கும் காமதேனு. பெண் சமைத்துப் போடும் யந்திரமல்ல; சிற்றின்பப்பாவையல்ல; பெண்ணை மகா சக்தியாகக் கருதவேண்டும்; வாழ்வென்னும் மாத்தின் வேரும் அடிமாமும் ஆண்; கிளை, மலர், கனியெல்லாம் பெண் சக்தியால் விளங்குகின்றன. மனிதனிற் பாதி பெண். பாதியுடலை எப்படிப் பாதுகாப்போமோ அப்படியே பெண்ணை மதித்துப் பாதுகாக்க வேண்டும்.

கற்பு என்பது ஆண் பெண் இருவருக்கும் வேண்டும். இருவர் கண்ணும் கருத்தும் ஒத்திருக்க வேண்டும். தாரம் வாழ்வுத் துணைவி; ஸஹதர்மசாரிணி. தலை முதல் கால் வரை தங்கமாகவும் வைரமாகவும் இழைத்தாலும் பயனில்லை. அன்பும், கற்புமே பெண்மைக்கழகு. நகை போடும் வழக்கத்தைப் பெண்கள் குறைக்க வேண்டும். மலையாளத்திலும் வங்காளத்திலும் பெண்கள் அதிகமாக நகை போடுவதில்லை. தூய ஆடை, மஞ்சளும் குங்குமமும் குலுங்கும் புன்னகை முகம், நல்லொழுக்கம் இவையே பெண்களுக்கு அழகு. பணத்தை நகைகளிற் போட்டு வீணாக்காது குடும்பத்திற்குப் பயனாகும் தொழில் முயற்சியிற் செலவிட்டுப் பெருக்க வேண்டும். நமது பெண்டிர் நகைகளிற் போடும் பணத்தையெல்லாம் சேர்த்துத் தொழில் முயற்சியில் போட்டால் நமது தேசம் குபேர நாடாகுமே!

மற்றொன்று ; குலப்பெண்கள் தினந்தோறும் இரண்டொரு மணிநேரம் அறிவை வளர்க்கச் செலவிட வேண்டும். நல்ல நூல்களைப் படிக்க வேண்டும். நாட்டு நடப்புகளை அவ்வப்போது அறிந்துகொள்ள வேண்டும். வீட்டுப் பொறுப்புடன் நாட்டுப் பொறுப்பையும் பெண்கள் உணரத்தகும். கணவன் நாட்டுக்கு நன்மையான ஒரு பணி புரிந்தால், குறுக்கே நிற்காது, அவன் செய்யும் தன்னலமற்றப் பொதுநலப்பணி வெற்றி பெறும்படி உடனிருந்து உதவிசெய்ய வேண்டும். தமது குழந்தைகளுக்குச் சோறூட்டுவதுடன் நாட்டன்பும் புகட்டி வீரதீரராக்க வேண்டும். நாட்டின் நன்மையே வீட்டின் நன்மை என்றுணர வேண்டும் பெண்டிர்.

மற்றொன்று ; கணவன் செயலுக்கேற்றபடியே சிக்கனமாகக் குடும்பப் பொறுப்பை வகித்து, அவசரத்திற்குச் சிறு தொகை மீதி யிருக்கும்படியே செலவிடவேண்டும். கணவன் அளவிற்கு மிஞ்சிய பொருளில் ஆசை வைக்கக் கூடாது. மனைவி உடல்; கணவன் உயிர். ஒன்றிற்கு மற்றொன்று ஆதாரம்.

---

## 45. கணவன்

கணவன் கடமை யென்ன ? வீட்டிற்கரசியான மனைவியை நன்மதிக்க வேண்டும். குடும்ப நலத்திற்காக அவள் சொல்லும் நன் மதிகளைப் போற்றி நடக்கவேண்டும். கெடுதல் இருந்தால் இதம்பதமாகச் சொல்லித் தனது உதாரணத்தாலும் அன்பாலும் தூய நடையாலும் திருத்த வேண்டும். சொந்த மனைவி காக்காப்போலிருந்தாலும் அவளையே தேவலோக அரம்பையாகக்

கருதவேண்டும் ; பிறமாதரைக் கனவிலும் கருதக் கூடாது. குடும்பக் கலகங்கள் பெரும்பாலும் மனவேறு பாடுகளால்தான் வளர்கின்றன.

கணவன் தனது அறிவு, ஆற்றல்களால் தக்க ஒரு தொழிலைச் செய்து குடும்பத்திற்குப் போதுமான பொருளைச் சம்பாதிக்க வேண்டும். ஈட்டிய பொருளை, மனைவியுடன் கலந்துகொண்டு செலவிடவேண்டும். வீட்டில் அடுப்பிற்கு விறகிராது ; விளக்கிற்கு எண்ணெயிராது. தாம் மட்டும் இரசியமாகப்போய் காப்பிக்கடையில் வயிற்றை நிரப்பி வருவர் சிலர். இது நம்பிய மனைவியை வஞ்சிப்பதாகும். இல்லறத்தோர் மனைவி கையினால் அன்புடன் அளிக்கும் கூழையும் அமுதமாக உண்ணவேண்டும் ; மனைவி மக்களுக்குப் போதுமான உடை உணவு சௌகரியங்களைச் செய்யக் கணவன் கட்டுப் பட்டிருக்கிறான் ; குழந்தைகளை அன்புடன் பேணி வளர்த்துக் கல்வி கற்பித்து ஆளாக்கக் கடமை பட்டிருக்கிறான். ஒரு அரசபாரம் போன்றே குடும்ப பாரமும். கனிமுகங் காட்டல், கடுஞ்சொல்லின்மை, குற்றம் மறத்தல், குறையைத் திருத்தல், குறிப்பறிந் தொழுகல், கரவொழுக்க மின்மை, அறவழி நடத்தல், சிறுமையின்மை, செருக்கின்மை, கண்கருத் தொற்றுமை முதலியவற்றைப் பேணி இல்லறப் பொறுப்பை வெற்றியுடன் வகிக்க வேண்டும்.

மனைவியை அடுப்பங்கரைப் புகைக்கே ஆளாக்காது, உடல் நலத்திற்கேற்ற பயிற்சி தரவேண்டும். காலை மாலை இரண்டொரு மணிநேரம் மனைவியுடன் காற்றாட உலாவி வரலாம். பெண்கள் வெளியே கைவீசிச் சென்றால் குடிகெட்டுப் போகும் என்னும் பழைய கொடுமை ஒழியவேண்டும். நமது தமிழ்ப் பெண்கள்

சுதந்திரமாகவே வாழ்ந்தனர்; தமது மக்களை வீர தீர ராகவே பயிற்றினர். முக்காடும், பெண்ணடிமையும் இடையேபுகுந்தன. இன்றும் வடநாட்டைவிடத் தமிழ் நாட்டில் பெண்ணுக்குச் சுதந்திரம் அதிகம்; கோஷா கிடையாது. தமிழர் நாகரிகம் ஆணுடன் பெண்ணுக்குச் சமவுரிமை யளிக்கிறது. மனைவி, இல்லாள், இற்கிழத்தி, வாழ்க்கைத்துணை நலம், வீட்டரசி என்று பெண்டிரை தமிழர் பெருமைப் படுத்தினர்.

இவ்வாறு ஆணும் பெண்ணும் சமவுரிமையுடன், பொன்னும் பணியும், கதிரவனும் கதிரும் போல உட் புற மொன்றி இல்லற வாழ்வை நல்லறக் கற்பக மாக் குக ; வீட்டின் விரிவே வியனுலகம். ஆதலினால் வீட் டறத்தில் வெற்றிவிளக்கு. சுபம்! சுபம்!! சுபம்!!!

---

## 46. அவதார ரகசியம்

உலகம் தற்போதிருக்கும் நிலைமைக்கு, தெய்வ சக்தியை உத்தாரணத்திற்கு எதிர்பார்க்கிறோம். மதச் சண்டையும், ஜாதிசண்டையும், சமூக ஊழல்களும், அனுசாரமும், அடிமைத்தனமும், வறுமையும், மடமை யும், நோயும், போரும், பேராசையும், கொலையும், களவும் நிறைந்த காடானது உலகம். மக்கள் அறத்தை மறந்து, தன்னல முற்று வயிறே கடவுள், போகமே மோட்சம் என்று திரிகின்றனர். அத்யாத்ம தர்ம ஒளி மங்கியது. அஞ்ஞான விருளில் தவிக்கும் மக் களின் விழியைத் திறக்க ஒரு தெய்வ சக்தியை உலகு தேடுகிறது.

தெய்வ சக்தியானது புதிதாக உதிப்பதல்ல ; அது ஒவ்வொருவர் உள்ளும் நிலவுவது. மனிதனுடைய

மனக்கண்ணை ஆத்மபரமாகத்திருப்பி புலன்கள் வழியே செலவழிந்து செல்லும் சக்தியையெல்லாம் உள்ளடக்கி நெஞ்சைத் திண்மைப்படுத்தி நோக்கின் மனிதனுக்குள்ளே தெய்வவொளி காணலாம். அத்தகைய அத்யாத்ம நோக்குடையோர் தன்னல மறுப்புடன், தாம்உலகிற்கு வந்த மெய்வினை யாற்றி, பிறர்க்கென வாழுவர். அவர்களுக்கு உலகெல்லாம் கோயில், உயிரினங்களெல்லாம் நடமாடுங் கோயில்கள். 'வினையளவே தோற்றம்' என்பதை அவர் நன்குணர்ந்து ஈசன் இவ்வுலகக் கோயிலிற் கொடுத்த வினையை யுணர்ந்து அதைஅடக்கமாக மன்னுயிர் நலங் கருதிச் செய்வர். தமது பணி முடிந்ததும் தன்மயமாவர். இதுவே உண்மை வாழ்வின் உயர்ந்த நோக்கம். இந்நோக்கத்தோடு வாழ்க்கை நடத்துவோர் உலகிற்குத் தமது உதாரணத்தால் சாந்த வழி காட்டவல்லார். ஏசுநாதர், புத்தர், மஹாத்மா, அப்பர், முகம்மது, நானகன், சைதன்யர், இராமகிருஷ்ணர் அரவிந்தர் முதலியோர் இத்தகைய தெய்வீக புருஷரேயாவர். இவர்களே அவதார அமிசமுள்ளவர். கடவுளொளி இவர்களிடம் நிலவிப் பரவும். தெய்வம் இவர்கள் மூலமாகவே பேசுகிறது.

இத்தகைய தெய்வ சக்தி ஒவ்வொருவரிடமும் உள்ளது; சிலரிடம் மறைந்தும் சிலரிடை வெளிப்படையாகவும் இந்த சக்தி நிலவுகிறது. இந்த சக்தியை மனிதன், பல சாதனங்களால் அறிந்து தேவனுகலாம். மனிதன் ஒவ்வொருவனும் அவதார அமிசமுள்ளவனே. ஒவ்வொருவனும் அமரவாழ்விற்குரியவனே. தன்னை யறிந்தவன் தேவன். அவனே உலகின் உண்மை விளக்கு. அவனே பிறர்க்கென வாழும் பெரியோன். அவனே தன்னலந் துறந்து பன்னலம் புரிவோன்.

அவன் வாழ்க்கை மின்சார சக்தியுள்ளது. அதன் கதிர் பரவி அனைவரையும் தூய்மையாக்கும். அவன் தன் உண்மை வாழ்வால் உடலுக்கு வரும் இன்னலைப் பொறுத்து, உள்ளொளியின் மெய்யறிந்து, ஏசுநாதரைப் போன்று உண்மைக்காக உயிரைப்பலிதானமாக்கு வான். அத்தகைய உத்தமன் அவதார புருஷன்.

அவதாரம் ஒன்ருகவே யிருக்கவேண்டு மென்பது கட்டாயமில்லை. முன் சொன்னபடி அமர வாழ்வெய்தி, அன்புருவான அறவோர் அனைவரும் அவதாரங் களே. அத்தகைய மகாபுருடர் எத்தனை பேரேனும், எக்குலத்தினரேனும், எவ்வுருவினரேனும், அவர்களைத் தேவரென அடிபணிகிருேம். அத்தகைய மஹாத் மாவை நாம் கொண்டாடுகிருேம். அவதார லக்ஷணங்க ளுள்ள பல மகான்களைப் பற்பல விடங்களில் காண்கி றேன். அவர்கள் காலத்திற்காகக் காத்திருக்கின்றனர். தமது தெய்வ சக்தியை உலகிருள் தீர அருளும்போது அவர்களை நாம் அறிவோம். புதுயுகம் பூக்கப்போகிறது; அமர வாழ்வு உதிக்கப் போகிறது; ஆத்மானந்தம் பெருகப் போகிறது. மக்கள் சுத்தமுற்று தேவ வாழ்வு வாழப்போகின்றனர். அத்தகைய சாந்தயுகத்தை நிலை நிறுத்தப் பல அவதார புருஷர்கள் வரப்போகின்றனர். மனித சமூகம் முழுதும் முயன்ருல் அத்தகைய அவ தாரத்தன்மையை அடையலாம். மனித சமூகமே கட வுளின் அவதாரம். தன்னைக் கண்டவன் கடவுள்; விண் டவன் விண்ணேன்.

---

## 47. தேவீ !

தெய்வசக்தி அன்னையை அறியுங்கள் ! அவள் அன்புடன் அழைக்கிறாள் ! பீரங்கி சுடாது ; விஷப் புகை மூச்சைப் பிடிக்காது; ஆகாச குண்டு பிளக்காது ; தசைத் திமிர்களெல்லாம் ஒன்றுகூடி வந்தாலும், பதினா யிரம் இராவணர்கள் வந்தாலும் இந்த அத்யாத்ம சக் தியை அசைக்க முடியாது. குழந்தைகளே ! அத் தகைய சக்தியை உங்களுடைய தூய ஆதாரங்களில் பொழிய அன்னை புன்னகையுடன் அழைக்கிறாள். அகந்தையில் அலையவேண்டாம். ஆணவத்தால், மனி தச் சிறுமதியால், காரியம் நடவாது ; நடப்பினும் நிலைக் காது ! நிலைப்பினும் இனிக்காது ! காரியம் மனித பலத்தை மிஞ்சிப்போயிற்று. எவ்வெப்போது அசுர பலம் உலக மாந்தரை நடுநடுக்கித் தர்மத்தை அழிக் கிறதோ, அவ்வப்போதெல்லாம் மஹான்களும், தீர்க்க தரிசிகளும் தெய்வசக்தியைக் கூவியழைத்தனர். அந்த சக்தி அவதரித்து அதர்மத்தை ஒழித்துத் தர்மத்தை நிலைநிறுத்தியது. அகந்தையை விடுங்கள். பாரத சக்தி யைச் சரண் புகுங்கள் ! "தேவீ ! தெய்வ சக் தியே ! மனித முயற்சிகள் பல செய்தோம். எங் கள் குறை நீங்கவில்லை ; எங்களுக்குள் ஒற்றுமை பிறக்கவில்லை ; அச்சம் ஒழியவில்லை. ஒரு ஆவேசச் சூறாவளியில் ஆடிச்சாகின்றன எமது இயக்கங்கள். போட்டி பொறாமைகளும், சிறுமதி யகந்தைகளும், சிறுமைகளும், பொய்யும் கோளும், வஞ்சமும் புகழ் வேட்டையும், இன்னும் ஒழியவில்லை. தாயே ! நாங்கள் உனது சக்தி மைந்தரென்று உணர எமது கண்ணைத் திற. உன்னடியிற் சரண்புகுந்தோம் ! உன்னிச்சை எம்

முள் நிறைவேறுக! எமது அகந்தை வேரோடறுக! உனக்கே வாழ்வு வேள்வியாகுக! உன்னருளமுதிற்கு நாங்கள் தூய ஆதாரங்களாகுக! உள்ளே ப்ரம்மஞான மும், சுத்த நிலையும் வாழ்வில் சக்தியொளியும் வீச வேண்டும். இவ்வுலகம் உனது ஆத்ம ஸாம்ராஜ்யம்; உனது கோயில். இதில் ஏதோ ஒரு பணி எங்களுக்கு உள்ளது. இல்லையேல் நாங்கள் ஏன் பிறந்தோம்? நீ ஏன் பெற்றாய்? முதலில் நினது யோக சக்தி பெற்று, எமது உள்ளும் புறமும் நீயென்று அறிந்து, பிறகு உனதருளால் உன்னிச்சையை இந்த மனித சமுதாயத் திடை நிறைவேற்றும் வலிமையைத் தா. உள்ளே ப்ரம் மானுபவமும், உலகில் ப்ரம்ம சக்தியான நினது திரு விளையாடலும் காண அருள் புரி. வேறுபாடுகளை ஒழி! உன்னில் அனைவரும் ஒன்றுபட்டு உன்மயமாகி, உன் கரங்களாக உலகில் பணி புரிந்து உன்னுட் புகுக!

---

## 48. வீர விளக்கம்

பாரின் பெருமை வீரர் பெருமை. வீறு படைத்த வர் வீரர். வீறாவது சக்தி. ஞான வீரர், தர்ம வீரர், கர்ம வீரர் என வீரர் மூவகைப்படுவர். புலன்களை வென்று, பொய் மனமொடுக்கி, தன்னை யறிந்து, தன்மயராகி, ஆன்ம கோடிகளுக்கு அருளொளி காட்டினோர் ஞான வீரர். வேதரிஷிகள், வியாஸர், வள்ளுவர், அப்பர், சம் பந்தர், நம்மாழ்வார், வள்ளலார், பரமஹம்ஸர், ரமணாதி கள் ஞானவீரர் அல்லது ஆத்ம வீரர். மனித ஸமுதாயம் புலிவாய் மான்போல அசுரமாயத்தால் வாடி வருந்தி அறமிழந்து, திறமிழந்து, கதியற்ற காட்டில் கண்ணில் லாக் குழந்தை போலத் தவிக்கிறது. அப்போது இறை

வன் அருட்சக்தி அவதரித்து, அச்ச மொழித்து, அபயமளித்து அரக்கரை நலித்து அறத்தை நிலை நிறுத்துகிறது. அத்தகைய அருள் வல்லபம் வாய்ந்தவர்களே தர்ம வீரர். இராமன், கண்ணன், புத்தர், ஏசுநாதர், நபிமணி, நானகர் தர்ம வீரர். நாட்டின் அடிமைத்தளையை நீக்கி, கல்வி செல்வம் தொழில் வீரம் விடுதலை ஒற்றுமைக்காகத் தன்னலம் விடுத்துப் பொது நலத் தவம் புரியும் திருத்தொண்டர் கர்மவீரர். லெனின், மஜினி, மூாந்தார்க், சிவாஜி, குருகோவிந்தன், ப்ரதாப சிங்கன், வாஷிங்டன், காந்தி போன்றோர் கர்மவீரர். பிரான்ஸின் பெருமை மூாந்தார்க்; இங்கிலாந்தின் பெருமை ஷேக்ஸ்பியர், க்ராம்வெல்; ரோமின் பெருமை அகுஸ்தன், யூலியகேசரி ; கிரேக்கின் பெருமை ஹோமர், இலியாது வீரர் ; கார்தாகத்தின் பெருமை ஹன்னிபாலன் ; அமெரிக்காவின் பெருமை வாஷிங்டன். இவ்வாறு ஒவ்வொரு நாடும் வீரரால் பெருமை பெற்று விளங்குகிறது. நாட்டன்னையின் வெற்றித் திருக்கரங்கள் வீரர்.

## ஞான வீரன்

தன்னையறிந்தவன் தேவமனிதன். அவன் கடவுட் கலப்பில் சுடர்பெற வாழ்பவன் ; அச்சமில்லான்; அகந்தையில்லான் ; மாசறு தூயன் ; தேசுறு ஞானி ; யோக சித்தன்; தியாகமூர்த்தி; புலனடக்கியோன்; பொறுமை மிக்கோன் ; இன்னுரை சொல்வோன் ; தன்னலமில்லான் ; உள்ளத்துறைபவன் ; ஒருமயங் காண்போன் ; யார்க்கும் தீங்கிலான் ; ஆத்மானந்தன் ; அருள்வலி மிக்கான்; இன்ப துன்பம் இரண்டும் சமமாக நினைப்பவன், இத்தகைய தெய்வத்தன்மைகள் பொருந்திய புலவனே

தன்னைப் போல அனைத்தையும் கருதித் தற்பெருமை யின்றி, தன்னலமின்றி, அற்புதமான அருள்வல்லபத் தால் உலகிற்கு அறிவும் திறனும், ஒளியும் இன்பமும் நல்க வல்லான். நெய்யும் திரியும் அழிவதைக் கருதாது விளக்கு வெளிச்சந் தருகிறது. அதுபோல இத்தகைய ஆத்மவீரன்-ஞான வீரன் பிறர்க்கு இதஞ்செய்வான்; பலாபலன்களிற் கட்டுப்படான். அவனே சுத்தவீரன். அவன் வாழ்வு அமர வாழ்வு. அவன் இறந்தும் இற வான்; பிறந்தும் பிறவான்; செய்தும் செய்யான்; சும்மாவிருந்தும் எல்லாம் புரிந்தவனாவான். அவனைச் சுற்றிக் கடவுட் காந்தம் வீசும். அதுவே பல அற் புதங்கள் புரியும். அத்தகைய மகரிஷிகள், மஹாத் மாக்களே பாரத ஸமுதாயத்தின் பரமானந்தக் கனிகள். அத்தகைய கடவுட் பெரியாரே பாரத நாக ரிகத்தை அமைத்தனர். தவம், வீரம், தொழில், தொண்டு, இந்த நான்கும் பாரத நாகரிகத்தின் நான்கு சக்திகள். பாரத நாடு அத்யாத்ம தீரரைப் படைத்தது; போர் வீரரைப் படைத்தது; தொழிற் புலவரை யீன்றது; அருள் தொண்டரைப் பெற்றது. அத்யாத்ம தீரமே பாரத ஸமுதாய புருஷனின் தலை; தர்ம வீரம் உடல்; கர்ம வீரம் கை கால். தியாகம், தர் மம், ஸத்யம், தைரியம் இவை பாரத் வீர யாழின் நான்கு தந்திகளாகும். இத்தந்திகளை இனிது மீட்டி இன்னிசையளித்த வீர மணிகள் மிகப்பலர்.

"உலகில் இன்னும் ஒரு ஆன்மா, துயரில் வருந்து வதைக் காணினும் இந்த மோக்ஷ வாயிலிற் புகேன்" என்று உலகுயிர்களுக்கு இரங்கி மோக்ஷத்தையும் வெறுத்த புத்தன் தர்ம வீரன். உண்மை தாய், அறிவு தந்தை, அறம் சகோதரன், தயை தோழன், சாந்தம்

மனைவி, மன்னிக்கும் தன்மை மைந்தன்—இவை எனது ஆறு உறவினர் என்றான் தர்ம புத்திரன். தர்மன் மாயா நரகத்தை எதிரே கண்டான். அதில் துன்பப் படுவோர் அனைவரும் "புண்ணியனே! தாங்கள் எம்மருகே வரவர எமது நரக வேதனை தணிகிறதே" என்றனர். "அப்படி யானால் உங்கள் வேதனை முழுதும்தீர நானே நரகத்தில் குதித்து விடுகிறேன்" என்றான் தர்மன். அவ்வாறே செய்தான்! அது தெய்வ சோதனையாயிற்று. பிறகுஇந்தி ரனே அவனைச் சுவர்க்கத்திற்கு அழைத்துச் சென்றான். இத்தகைய தியாகம் மிகவும் அரிது. ஒரு காலத்தில் மலையரக்கர் இறக்கைகொண்டு பறந்து உலகைப்பாழ் படுத்தினர். அவர்களைச்சிறகறுத்து ஒடுக்க இந்திரனுக்கு வச்சிராயுதம் வேண்டியிருந்தது. ததீசி முனிவரிடம் சென்று "உலகை நலிக்கும் மலையரக்கரை ஒடுக்க ஒரு உறுதியான ஆயுதம் அளித்தருள வேண்டும்" என்றான். "இந்தா எடுத்துக்கொள் என் முதுகெலும்பை ; வன்ற வத்தால் வைரமானது" என்று தனது வீணாதண்டத் தையே அளித்தார். இது அற்புதமான தியாக வீரம்.

## மன்னர் நீதி

பாரத மன்னர் மன்னுயிரைத் தன்னுயிர்போல் காத்தனர். மக்களின் உயிர் நலம், உடல் நலம், கலைநலம், கல்வி நலம், செல்வ நலம், விளை நலம், தொழில் நலம், அமைதி, அன்பு அனைத்தையும் போற்றினர். மனச்சாட் சிக்குமாறின்றி நீதி வழங்கினர். தொழிலாளருக்கு நிலபலன்களீந்து உழைப்பும் பிழைப்பும் உண்டு பண் ணினர்; நீர்ப்பாசனம், பயிர் விளைவு, கைத்தொழில், வாணிபம், தீர்வைகள், வரிகளுக்காகத் தனித்தனி இலா காக்கள் முறை வகுத்துக் குடி நலம் போற்றினர். இங்

திய நாகரிகத்தை உலகில் முந்திய நாகரிகமாக்கினர். காசிக்குச்சென்ற ஒரு ஏழைப்பார்ப்பான் குடும்பத்தைப் பாண்டியன் உளவறிந்து காத்தான். அக்குடும்பத்துடன் அத்தெரு முழுதிற்கும் படியளந்தான். இரவில் மாறுவேடம் பூண்டு தானே அத்தெருவைக்காவல் புரிவது போல, அவ்வேழையின் வீட்டைப் பாதுகாத்தான். ஒரு நாள் வழக்கம்போல உஷார்ப்படுத்த அவ்வீட்டுக் கதவைத்தட்டினான். அன்று அந்தணன் வந்திருந்தான். "சோர புருஷனோ கதவையிடிக்கிறான்" என்று ஐயுற்றான். பாண்டியன் எல்லா வீட்டுக் கதவுகளையும் தட்டிக் கொண்டு சென்றான். மறுநாள், பெரியபுகார். "யாரோ என் வீட்டுக் கதவை யிடித்தான். நான் காசிக்குப் போயிருக்கையில் என்மனைவியிடம் வரும் கள்வனோ அவன்" என்று ஐயுற்று முறையிட்டான் அந்தணன். "இதோ அக்கள்வனை ஒறுக்கிறேன்" என்று இரகசியமாகச் சென்று தனது கையை அறுத்தான் பாண்டியன்—பொற்கைப் பாண்டியன்! குடிகளுக்குத் தன்னால் இம்மியும் இடர்வாராது காத்த இம்மன்னரின் வீரம் - அறப்பெருமை அளவற்றது.

ஆயிரக்கால் மண்டபத்தில் தன்னைமறந்து ஒரு சிலையைச் செதுக்கிக் கொண்டிருந்த சிற்பிக்கு ஒரு பாண்டிய மன்னன் தம்பலம் தாங்கினான். சட்டென்று திரும்பினான் தொழிலாளி! 'ஆ! மன்னனா' என்று திகைத்து நின்றான். "அதனால் என்ன! நீ தொழிலரசன்; தம்பலம் தாங்கும் பையனைக்காணோம். அதனால்உனது வேலைக்கு இடர் நேருமென்று நானே தாங்கினேன்" என்றான் பாண்டியன். நமது மன்னர் தொழிலை வளர்த்த பெருமை யென்னே!

வடக்கே ஒரு மன்னன் பஞ்சகாலத்தில் தொழிலாளிகளுக்கு வேலை வேண்டுமென்று தனது அரண்மனையை மூன்றுதரம் இடித்து இடித்து அழகாக அமைக்கச் சேய்தான்.

ஒரு இளங்கன்று தன்மைந்தன் தேரடியில் புகுந்து நசுங்கியதற்காகத் தனது அரசிளங் கன்றையே தேர்க் காலில் பலியிட்டான் மனுநீதிச் சோழன். நமது மன்னர் தாம், பிறர், தன்னவர், வேற்றவர் என்று பாராமல் நீதி கடைப்பிடித்தனர். சேரசோழ பாண்டியமண்டலத்தில் அக்காலம் அற்புதமான வீரர் நிலவினர். ' தன் மகன் போருக்குப் புறங்காட்டினுல் அவன் உண்ட முலையை அறுத்தெறிவேன்'' என்ருள் ஒரு வீரத்தாய். அவன் போரில் களிறெறிந்துபட்டதுகண்டு ஈன்ற நாளினும், பெரிதுகந்தாள் முதியள். நேற்று கணவன் போரில் பட்டான். இன்று தனது அருமைச் செல்வனைத் தலைவாரி, அமுதூட்டி, கையில் வேல் கொடுத்து "செல் ; போர்வெல்!'' என்று அனுப்பும் தமிழ்த் தாயின், நெஞ்சுரந்தான் என்னே! நெடுஞ் செழியன், ராஜ ராஜ சோழன், குலோத்துங்கன், சேரன் செங் குட்டுவன்—போன்ற பலவீர மன்னரைத் தமிழ்த் தாய் பெற்ருள்.

## பாரத வீரம்

கிரேக்க வீரரும், ரோம வீரரும் வாள்வலி, தோள்வலிவை வணங்கினர். பாரத வீரர் ஆண்மை கொண்டு அறங்காப்பதிற் பெருமை கொண்டனர். இராமாயண பாரத புறநானூறு வீரருக்கு நிகர் உலகில் இல்லை. புத்தருக்குப் பிறகும், சந்திர குப்தன், சமுத்திர குப்தன், அசோகன், பாலாதித்யன், சிலாதித்யன்,

ஹர்ஷன், பிருதிவி ராஜன் காலம்வரை பாரத நாட்டின் வீர விளக்கு சுயம்பிரகாச ஜோதியாக விளங்கியது. ஜய சந்திரன் வஞ்சனையால் கோரி முகமது பிருதிவி ராஜனைவென்றான். இப்பாட்டு யுத்தத்திற்குப் பிறகு வீர விளக்கு "பக்பக்" என்று அணையும் சமயம் இராஜ புத்திரர், சீக்கியர் மராட்டியரிடையே சக்தி மைந்தர் தர்மாவேசத்துடன் அவதரித்து வீரச் சுடரைத் தூண்டினர். தேசம், தர்மம் இரண்டையும் காக்கவே இவ்வீரர் தமது வாழ்வைப் பலிதான மாக்கினர். " இறந்தால் வீர விண் வென்றால் உலகாட்சி; எழுந்துநில் ; போர்புரி; அது வீரன் கடமை ; கடமை வழுவினால் இழிவு ; இகழ்ச்சி; தீது பயன் கருதாதே ; பணி செய்யக்கருது; கருத்தைக்கடவுளிடம் இருத்து ; உன்னறத்தைச்செய் !" என்னும் கீதையின் வீரவாசகம் மீண்டும் பாரத புத்திரரைத் தூண்டியது. படை வலிமிக்க முகலாய ஸாம் ராஜ்யத்துடன், மலையில் திரியும் பில்லர் துணைகொண்டு 25 ஆண்டுகள் தேச விரதம்பூண்டு தர்மாவேசத்துடன் போர்புரிந்து, சொல்லொணாத்துயர் பொறுத்த பிரதாப சிங்கனுக்கு இணை யார்? அவன் வீரவுலகின் விசித்திரம். ராவல்சாகி என்ற அக்னிகுல வீரன் நோய்ப்படுக்கையில் சாவது இழிவென்று ஒருமன்னனுடன் வலுப்போர் செய்து இறந்தான். இரும்புமுளை யடித்தகதவை யானை முட்டித்தள்ளும்படி தனது மார்பையீந்து சமர்வென்ற சக்தவாத ரஜபுத்திரன் வீரம் எண்ணினால் மயிர்க்கூச் செறிக்கிறது. தனது கற்பைக் காத்த சித்தூர் ரதிபத்மினி, நாட்டைக்காக்கத் தனது பதினொரு பிள்ளைகளையும் கணவனையும் வீரமுடன் போருக்கனுப்பினள். தன் மதலையை பாம்பீரின் கத்திக்குப் பலியாக்கி அரசிளங் குழந்தையான உதயசிங்கனைக் காத்தாள் பன்னா என்

னும் வீரத்தாதி. நீலா என்ற கற்பரசி பகைவர் சிறைப் பிடித்த கணவனைமீட்ட துணிவு கவியேறியது. துர்கா தாஸின் வீரப்புகழ் அற்புதமானது. துர்காவதி தாரா பாய் முதலிய வீரமாதர்சரிதை, போதிஸியா மூாந்தார்க் சரிதை போன்றது. சீக்கியர் வீர உதாரணங்கள் இணை யற்றன. சுடுசட்டியில் பகைவர் வாட்டியும் தர்மத்தை விடாத குரு அர்ஜுனன், கழுத்தைக் கொடுத்தும் அறத் தைக் கடைப்பிடித்த தேசபகதூர், வீரசக்தி வடிவான குரு கோவிந்தன், பகைவர் செங்கலடுக்கிப் புதைத்த போதும் கலங்காது அகாலன் திருவடி சேர்ந்த ஜோரா பர், பதேஹ்சிங், குருவிற்காக வாளேந்தி நாட்டின் விடு தலைப் போர் செய்த சுந்தரி, பாகோ எனும் மாதர், ஆனந்த புரிப்போருக்குப் புறங்காட்டிக் கள்ளத்தனமாக ஓடி வந்த கணவரை "நீங்கள் புடவை கட்டிக்கொண்டு வீட்டிலிருங்கள்; நாங்கள் வாள் பிடித்துப் போர் புரிகி றோம்" என்று இடித்துச் சுணை வரச்செய்து போருக் கனுப்பிய அகாலிய மாதர் உதாரணமெல்லாம் வீரநூல் களில் பொன்னெழுத்தால் எழுதத்தகும். இன்றும் ஸத்யாக்ரகப் போரில் சீக்கியர் அற்புதமான உறுதியும் துணிவும் காட்டிப் புகழ் பெற்றனர்.

ராமதாஸின் அருள் பெற்று ஹிந்து தர்மத்தை நிலைநிறுத்தி ஒருபெரிய ஸாம்ராஜ்யத்தையாண்ட சிவாஜி இந்திய நெபோலியன், அலெக்ஸாந்தர், க்ராம்வெல் ஆவான்.

பாரதவீரர்

சிவாஜி வீரன்; நெப்போலியன் வீரன். எனினும் இருவருக்கும் வேறுபாடுள்ளது. சிவாஜி விடுதலையிழந்த நாட்டிற்கு உயிரீந்தான்; அறங் காத்தான். அறப் பகைவரை வீழ்த்தினான். நெப்போலியன் குடியர

சிற்குச் சிறிது தொண்டு செய்தான். எனினும், தனது நாட்டை நிறைமுறையுடன் ஆண்டு முன்னேற்றுது கோடானு கோடிப் பேர்களைத் தனது மண் வெறிக்குப் பலிவைத்தான். பிரான்ஸு கோடானு கோடிப் பொருளையும் வாலிப மணிகளையும் இழந்தது. நெப்போலியனும் அலெக்ஸாந்தரும் ஸீஸரும் போரால் சாதித்ததென்னை ? எத்தனை மனிதான்மாக்களை இவர் பேராசை கொன்றழித்தது ! குருகோவிந்தன், அர்ஜுனன், ப்ரதாபசிங்கன் போன்ற பாரதவீரர் போர் புரிந்தனர்.எதற்காக? பாரததர்மத்தைக் காக்கவே; சத்யதர்ம பாரத வீரன் கீதையின் வடிவு. பாரத வீரர் புரிந்தது அறப்போர் ; ஆர்லியனில் ஆங்கிலேயரை முறியடித்து பிரெஞ்சு நாட்டின் அடிமைத்தளையை முறித்தெறிந்த வீராவேசக் கன்னியான ழாந்தார்க்கை ஐரோப்பிய வீரரின் முன்னணியில் வைக்கலாம். அவள் புரிந்தது அறப்போர் ; விடுதலைப் போர்.

அறிதல், அறஞ் செய்தல், அருட்பணி புரிதல் மூன்றும் மனிதர் கடமை. கேவலம் உண்டுடுத்துறங்கி, ஊடிக் கூடிப் பெற்றுப் பேணிமூத்துச் சாவதே மானிடத்தின் நோக்கமல்ல. இந்த அன்ன மயகோச விவகாரங்கள் விலங்குகளுக்கும் உண்டு. நம்மைவிட சுதந்திரமாக அவை உண்டுறங்கித் திரிகின்றன. மனிதன் பகுத்தறிவுள்ளவன். அன்பு, அறிவு, ஈகை, இரக்கம், நன்றி, ஒப்புரவு முதலியன மனிதன் இயல்பு. அன்னவிசாரம், சொன்னவிசாரம், பாவையரைப் பன்னவிசாரமே கொண்டு, சூது பொறாமை, சினம், தீது, தன்னலம், பேராசை பற்றிப் பிறர்க்கிடர் செய்து வாழ்வைச் சூதாடுவோன் காட்டு விலங்கினும் கடுவிலங்காவான். அவன் செய்யும் போர்கள் அதர்மப்

போர்கள் ; அசுரப்போர்கள். அவர் செயல்கள் தசைத் திமிர் கொண்டு நசை மதங்கொண்டு, எளியரைக் கசக்கிப் பிழிந்து, ஈனக் கொடுமைகளால் பிறர் உரிமை உடைமைகளைப் பறிக்கும் காட்டு மிராண்டித்தனம். அவர் விரிக்கும் வாணிபமெல்லாம் பிறர் பொருள் வெளவும் பேராசை வலைகளே; அவர் பெறும் அற்ப மகிழ்வு பிறரைக் கெடுத்த அழிமகிழ்வு. அவர் பெறும் இசையும் பிறரை நலித்த வசையின் வடிவேயாகும். புலிக்குப் பல்லும் நகமும் இருப்பதுபோல அவர்களுக்குக் கத்தியும் படைக்கலங்களும் உள்ளன. அவர் வலிவு பொதுநல நலிவு. பாணசுரன் தொட்டதை எரிக்கும் வரம் பெற்று சிவன் தலையிலேயே கைவைக்கத் தொடங்கினன். திரிபுர அரக்கர் பெருவலி பெற்று ஊர்களை அழித்தனர்.

உலகில் அசுரபலம் அட்டூழியங்கள் செய்யும்போது அதையடக்க ஒரு தெய்வ சக்தி அவதரிக்கும் ; அவதரித்துள்ளது ! கொலைக் கருவிகள் தாங்கிக் கொலையே தொழிலாகும் அதர்மக் கொடுமை இனியொழியும். பாரத தேவியின் தர்மசக்தி இப்போது அஹிம்சையினல் வெற்றிபெற்று வருகிறது ; இனிப் பாரத தேவியின் ஆத்ம சக்தியெழுந்து உலகில் அமைதியை நிலைநாட்டும் ; ஆத்ம ஞானவொளியைப் பரப்பி அசுரமாயத்தையொழிக்கும்; மனித சமுதாயத்தை ஒருகுல தெய்வ சமுதாயமாக்கும். கத்திவீரர் போய் சக்திவீரர் வருவர். மாந்தரிடையே புகுந்த சைதான் ஒழிவான்; சைதன்யம் விளங்கும். இரத்தவெறி யொழியும்; பக்திநெறி பொலியும் ; சித்தசுத்தி யுண்டாகும். அதர்மக் கொடுங்கோல் ஒழியும் ; ஆத்ம தர்மம் உலகையாளும். மண் வெறி யொழியும் ; உண்மையும் உயிரிரக்கமும் பொலியும்.

வருக ஆத்ம வீரர்! "நான் சுத்தான்மா" என்றறிக! உலகமெல்லாம் பலப்பல உடல்களைக் கொண்டு லவும் சுத்தான்ம மயம் என்றுணர்க! பிறகு யாரை யார் அஞ்சுவது? யாரை யார் பகைப்பது? யாரை யார் திருடுவது? யாரை யார் அடக்கியாளுவது? வருக ஆத்ம வீரர்! வெற்றி பெறுக!!

---

## 49. கடவுளுண்மை

ஏன் அனைவரும் கடவுளைக் காண முடியவில்லை? அவனைக் காண்பதற்குத் தடையாயுள்ளதெது என்பதைச் சற்று ஆராய்வோம். உயிரினங்களை உணர்ச்சியின் அளவால் மூன்றுபடிகளாகப் பிரிக்கலாம்; விலங்குப் படி மனிதப்படி தெய்வப்படி என்ற முப்பிரிவுகளுக்கும் மூவகை யுணர்ச்சிகள் உள்ளன.

### மனித விலங்கு

விலங்குகளுக்குப் புலனுணர்ச்சி மட்டுமே உண்டு. அதனால் அவை உண்ணும்; உணவு தேடும்; உறங்கும்; குட்டி போடும்; குட்டி பெரிதாகுமட்டும் பேணும்; தமக்காகவே வாழும்; தன்னெதிரேயுள்ள புறப்பொருள்களையே காணும். வேறுள்ளனவெல்லாம் அதற்கு நினைவிரா. இதுதான் விலங்கு நிலை. விலங்கு தனது உணவிற்காகத் தனது இயல்பிற்கேற்ற வண்ணந் திரிந்து தன் விழைவிற்காகக் கூடி முயங்கிக் குட்டிப் போடும். மனிதனாகப் பிறந்தோனும் மனிதனுக்குரிய கடவுள் நன்றி, சமுதாய உணர்ச்சி, பிறர் நாணத்தக்கது தான் நாணல் முதலிய உயரிய சுத்த சுதந்திர சமத்துவ வாழ்வில்லையேல் அவனை என்னென்பது?

சுடர், காற்று, கடல், புவி, செடி, கொடியனைத்தை யும் உண்டாக்கும் ஒரு சக்தியுள்ளதென்ற அறிவுமில்லா விடின், அந்தச் சக்தியிறைவன்பால் நன்றியில்லா விடின், அவன் அருள்பெற மனங் குழைந்துருகிக் கனி யாவிடின், அவன் அறவழியி லொழுகி நில்லாவிடின், மனிதனை விலங்கினுங் கீழாகவே மதித்தற்பாற்று. ஹோமர் எழுதிய ஒதேஸி என்ற காவியத்தில் ஸேர்ஸி என்ற ஒரு மாய நங்கையின் கதையுள்ளது. அப்பெண் தனது மாயத்திறனால் மனிதனை அவன் உள்ளத்தன் மைக்கேற்ற விலங்காக்கிவிடுவாள். ஒரு நாள் ஒதேஸ னுடையவீரர்கள் ஸேர்ஸியின் அரண்மனைக்குச் சென்று அவள் அளித்த விருந்தையுண்ணப் பன்றி போன்ற பெருந்தீனி யிச்சையுடன் உட்கார்ந்தனர். உடனே ஸேர்ஸி தனது மாயக்கோலால் அவர்களைத்தொட்டாள்; அனைவரும் பன்றியாயினர். தற்போது வீண் வம்புக ளும் வாதங்களும் போரும் கோளும் பொறாமையும் செய்யும் மக்களை ஒரு ஸேர்ஸி இருந்தால் அவ ரவர்களுக்கேற்ற மிருகங்களாகவே மாற்றி அவர்களின் விலங்கு நீர்மையை வெளிக் காட்டி விடுவாள். ஒருவன் சினமுறும்போது அவனை 'நீ ஒரு மனிதனா' என்கிறோம். வஞ்சம் புரிவோன் நரி; மறைந்து தீங்கிழைப்போன் பாம்பு; புன் விழைவிற் பொதிந்து அழுக்குறுவோன் பன்றி; எடுத்ததற்கெல்லாம் சினப்பவன் நாய்; தன்ன றத்தையும் நாட்டையும் பிறர் கற்பழிக்கப் பார்த்துப் பொறுத்திருப்பவன் பொதிக்கழுதை; பிறர் என்ன நயம் புகன்றாலும் கேளாது போன போக்கிலேயே சென்று தீங்கிழைப்போன் வெறிமத யானை; உண்மையான பொருளைக் காணாதவன் பகற்கூகை; தன் முயற்சி விடுத்துப் பிறர் பொருளை வௌவுவோன் கழுகு;

சோம்பித் தூங்கி மயங்குவோன் பனிக்கரடி அல்லது தேவாங்கு. அந்தோ! மனிதா! கேவலம் உன் உடலைப் பார்க்கின்றனே! உன் வெளிக் கண்ணுக்கே ஆட்பட்டாய்.

பன்றியும் உண்கிறது; உறங்குகிறது; ஊடல் கூடல் ஈனல் குட்டியைப் பேணல் எல்லாம் செய்கிறது. மனிதா? நீயும் அதற்காகவே வாழ்ந்தாயானல் நீ விலங்கினும் எப்படி உயர்ந்தவன்? உனக்குள்ளே மூச்சினும் அருகேயுள்ள எல்லாம் வல்ல பொருளை யறியாமல் நீ என்னென்னவோ செய்கிறாய்.

## மனித மனிதன்

மனிதனுக்குப் பகுத்தறிவுள்ளது. அதனல் மனிதன் தன்னலம் பொது நலம் பகுத்தறிகிறான். கட்புலன் செவிப்புலன்களைக் கடந்த உலகினின்று தான் வேறு; தன்னுள் அதனினும் பெரிய ஒரு செம்பொருள் உள்ளது என்றறிகிறான். திமிங்கிலத்திற்குத் தன் நிறையில் 309-ல் ஒரு பங்குதான் மூளையுள்ளது. யானைக்கு 100-ல் ஒரு பங்கேயுள்ளது. மனிதனுக்கோ தன்னிடையில் 45-ல் ஒரு பங்கு மூளையுள்ளது. மனிதனுக்கு ஏன் அனைத்தினும் பெரிய மூளை கொடுக்கப்பட்டது? தன்னறிவால் உள்ளே தேடி அனைத்திற்கும் மூலமான ஒரு பொருளை யறிந்து அப்பொருள் மயமாக உலகைக் காணவன்றோ? அன்பு, அறம், நன்றி, ஒப்புரவு, நாண், கற்பு, ஆராய்ச்சி, உண்மை, பொறுமை, சீர்மை முதலிய தன்மைகளை வளர்த்துக் கடவுட்டன்மையடைந்து உலக முழுவதையும் கடவுள் மயமாகக்காண்பதற்கன்றோ மனிதனுக்கு ஆண்டவன் பெருத்த மூளையைக் கொடுத்தான். அதை நல்வழியில் செலுத்தி யோங்

காமல் தீயவழியில் தன்னலம் பொருமைபோர் சச்சரவு விளைக்க மனிதன் வாழ்வைப் போக்கினுல் அதனினும் மடைமை வேறு என்ன இருக்கிறது!

மனிதன் உயர்ந்த வாழ்வுள்ளோன்; கடவுட் டன்மை யடையத்தக்கோன். தீனியும் முயக்குமே மனிதச்செய்கையல்ல. பேராசையால் ஊரைக்கலக்கிச் சச்சரவு விளைத்துத் திரிதல் மனிதனைக்காட்டு விலங்கினுங் கேடாக்குகின்றது. மனிதன்என்பது தோலல்ல; இரத்தமல்ல; தசையல்ல. மனிதன் என்பது அறிவு. அவ்வறிவில் ஆண்டவன் நிலவுகிருன். ஆனுல் மனித நிலையினின்று அவனைக்காண முடியாது. அது அவனுடைய சொல் மனங்கடந்த பொருள். அப்பொருளைச்சுற்றி ஐந்து கோட்டைகளுள்ளன. அக்கோட்டைகளைப்பற்றி ஆராய்வோம்.

## ஐந்து கோசம்

இக்கோட்டைகளே பஞ்சகோசம் என்பன. அதாவது முறையே அன்னமய கோசம் (உடல்) பிராணமய கோசம் (உயிர்) மனோமய கோசம் (மனது) விக்ஞானமய கோசம் (அறிவு) ஆனந்தமய கோசம் (இன்பம்) இக்கோசங்களின் தன்மைகளைத்தெளிக:—

சாதி குலம் நிறம் உடை நடை முதலியன அன்னமய கோச வேற்றுமைகளே. இக்கோசத்தை மனிதன் தன் திமிரினுல் தீய செயல்களுக்குப் பயன்படுத்துகிருன். இக்கோசம் தூய்மை யுற்ருல் மேலே பல உண்மைகளையடைய நற்கருவியாகும். புலாலும்மதுவும் பிறரை வஞ்சித்த இரத்த வுணவும் போட்டடைத்துப் பிறர் சமாதானத்தைக் கெடுக்குங் கொடுந்தொழிற்கே மனிதன் இதைப்பயன்படுத்துகிருன். கேவலம் அன்ன

மய வேற்றுமைகளைக் கொண்டு உலகில் எத்தனை சாதி சமயச்சச்சரவுகள் விளைகின்றன ! இக்கோசத்தினையே வாழ்வாக எண்ணுகின்றவன் மனித விலங்கேயாவான். இதன் ஆட்டங்களுக்கு இடந்தருவது பிராணமயகோசம். இதில் மனிதனுடைய பசி, தாகம், இன்னல், இன்பம், வாதனை முதலிய உணர்ச்சிகள் அடங்கியுள்ளன. இவ் விருகோசங்களையும் ஒழுங்குறுத்தவே ஹடயோகம் ஏற் பட்டது. தீ வழிச்செலுத்தாது ஆசனப்பிராணுயாதி இயமநியம விதிகளால் வாழ்வை நெறிப்படுத்தினுல் இக் கோசங்கள் வலுப்பட்டுத் தூய்மையுற்று நீளாயுளும் பேராற்றலும் கொடுக்கும்.

மூன்ருவதான " மனோமய கோசமே மனிதனின் இருக்கை. மனமெப்படி ; மனிதனப்படி. மனது மயங் குந் தன்மையுடையது. இதன் எண்ணங்களால்தான் மனிதன் கட்டுகளுக்குள்ளாகிருன். பண்டைவினை முன்வினை பின்வினைகளுக்கு மனிதனை உள்ளாக்குவது இம்மனமேயாகும்.

மனமதே தோற்ற வாதி மனமதே பற்றும் வீடும்
மனமதே யெண்ண மாகும் எண்ணமே வலிய பந்தம்
மனமதே மாயா பாச மதிலென வொளி மறைக்கும்
மனதினை யுறுதி செய்தால் மற்ருெரு வெற்றி யேனோ !

நமது இன்னல்களுக்கெல்லாங் காரணமான மனத் தைத் தூய்மைப்படுத்தி ஒன்றுபடுத்தி வென்ருல் அதன் ஆற்றல் அளவிறந்தது.

சினத்துடனே மண்ணைச் செயிப்பதினுந் தத்தம்
மனமடக்கி வாழுதலே மாண்பு.

உலகவெற்றி அவ்வெற்றிக் கீடாகாது. ஆகாயத் தந்தி, தொலையொலி கேட்டல், தொலைப்பொருள் காண்

டல், பிறர் மனமறிதல், பிறர் நோய் தீர்த்தல், வியன் செயற் செய்தல் முதலியவெல்லாம் பழக்கிய மனத்தின் செயல்களே. மனத்தை நன்கு பழக்கவே இராஜயோகத்தில் வளி நிலை, தொகை நிலை முதலிய முறைகள் ஏற்பட்டுள்ளன. மனத்தின் வடிவு நான் எனும் அகந்தை. அவ்வகந்தை அழிந்து எல்லாம் அவன் எனும் நிலை வந்தால்தான் அவனுடைய சக்தியான குண்டலி எழும்; அகந்தை யொழிந்தபின், கீழியல்பின் நாடகம் முடியும்; கடவுளுணர்ச்சி மலரும். அப்போது தான் ஓங்காரவுட் பொருளும், தனிப்பொருளும், சிற்பொருளும், தற்பொருளும் ஒவ்வொன்ருக அற்புதத்திரை தூக்கி நமது மனக்கண்ணில் இலங்கும்.

ஆனல் மனதினல் மட்டும் மனிதர் கடவுளைக்காண முடியாது. அடுத்தபடியாக விக்ஞான கோசத்தில்தான் அருட்பெருஞ் சோதியின் வாயிற்படியுள்ளது. அந்தவிக்ஞான வொளிதான் தன்னறிவு. அதில்தான் தெய்வப் புலமையுள்ளது. அதன்மீது தான் ஆண்டவன் ஆனந்த நடம்புரிகிருன். தெய்வப்புலமையால் மனிதன் ஆண்டவனின் லீலைகளை அறியலாம்; அவனை உணரலாம். ஆனந்த கோசத்திலேதான் சாந்தமாக என்றுங்களித்து மனிதன் இருக்கலாம். இப்பஞ்ச கோசங்களைத்தாண்டி ஆன்ம வடிவாகக் கடவுள் நம்முள் உள்ளான்.

இத்தகைய திரைகளைக் கடந்து அறியும் இறைவனை மனிதன் தனது வாயாலும் மனத்தாலும் அறியவொண்ணுத நிலையில் 'கடவுள் இல்லை' யென்ருல் அவனைக்கண்டு இரங்க வேண்டியதே. மனிதனுடைய சிற்றறிவினல் முடியாததை மறுத்தல் திராட்சைப் புளிப்பென்று நரி யோடிய கதையேயாகும். நரியாவது கண்டது. இவன் கனவிலுங் காணக்கூடாத வொன்றை

இல்லையென்று உபதேசஞ் செய்யக்கிளம்புவது இருள், மாயம் மடமை, அகந்தை, பகை; வேற்றுமை எல்லாஞ் சேர்ந்த புன்மை. பித்த நோயாளன் பலாப்பழம் கசப் பெனல் வியப்பா!

## தெய்வ மனிதன்

தெய்வ மனிதனின் உணர்ச்சியே கடவுட் புலமை. அருட்பெருஞ் சோதியால் உண்டாவது உடல், உயிர், மனம். இவற்றைக் கடந்த நிலையே தெய்வநிலை. இந்நிலை யையடைய மனிதன் விக்ஞான கோசத்தில் உழைக்க வேண்டும். இதைத் தன்அகந்தையால் மனிதன் செய்ய முடிவதில்லை. இப்போதுதான் மனிதன் தனக்கு எட் டாத ஒரு பொருளுணர்ச்சியை யடைகிறான்; ஞான விசாரத்தால் உண்மையைப் பெறுகிறான்; தான் என் பதை மறக்கிறான்.

எனதென தென்னல் இடராகும்;

என்றும்,

அவனது வென்ன அருள்

என்பதையும் உணருகிறான்; எண்ணங்களையும் சங்கற் பங்களையும் ஒடுக்குகிறான்; ஆண்டவனுக்குத் தன்னைத் தருகிறான்.

தெய்வ நம்பிக்கையும் உறுதியும் எய்துகிறான்; 'என் செயலால் யாவதொன்றுமில்லை; எல்லாம் உன் செயல்' என்று உருகுகிறான். அந்தக்கரண சுத்தியடைந் தால் இந்நிலைவரும். சித்தம் மனம் அகந்தை இவற் றைப் புத்தியால் பகுத்தறிந் தடக்கிச் சேட்டையொடுங் கினால் அந்தச் சுத்தமே கடவுள் நிலை. அதுவே மனி

தனைப் பந்தத்தினின்று சுதந்திரப்படுத்தும்; கடவுளுடன் சமரஸப்படுத்தும். அப்போதே

எல்லா வுலகிற் கிறைவ னொருவன்
எல்லா வுடலும் இறைவ னாலயமே.

என்று தானும் அவனாகப் பிறவும் அவனாகக் காணும் உண்மைச் சமத்துவமும் ஏற்படும்.

அருள் விழியை அகங்காரச் சூட்டுக் கோலால் பொசுக்கிக்கொண்டு என் கண் பொட்டை விண்ணும் மண்ணும் இருட்டே என்ற முடிவிற்கு வருதல் உதாரணங்களுக்கு எட்டாத மடமையேயாகும். கீதையில் கண்ணன் 'ஏ! அருச்சுனா ஊனக் கண்ணொன் உருக் காணாது! ஞானக்கண்ணை நல்குவேன் காணாய்' என்று கடவுள் விழியை யளித்ததனாலன்றோ விஜயன் கடவுட் பேருருவைக் கண்ணனுட் காண முடிந்தது. அக் கண்ணைத் தீவிரமான அறிவு அன்பாலே தான் பெற முடியும்?

ஆழ்ந்த அன்பும் உறுதியும் அடைக்கலமும் உயர்ந்த அறிவும் கீழியல்புகளி னின்று முற்றும் விடுதலையும் சித்த சுத்தியும் பெற்றால்தான் அவனருட்கண் உண்டாம்; அதனால் அவனுடைய காட்சிகளையும் திருவிளையாடல்களையுங் காணலாம்.

---

## 50. உலகம் பலவிதம்

அன்பனே! உலகம் பலவிதம்; ஊர் பல. நாடுகள் பல; பழக்க வழக்கங்கள் பல; கொள்கைகள் பல; எண்ணிப் பார்; உலகில் சுமார் 150 கோடி மக்கள் இருக்கின்றனர் ; இவர்கள் ஐந்து கண்டங்களில் சுமார் 75 நாடுகளில் வசிக்கின்றனர். பலவகையான நடையுடை பாவனைகள், பல கொள்கைகள், பலசமயங்கள், பலதொழில்கள் கொண்டு பலவாக வேறுபட்டு வசிக்கின்றனர் மாந்தர். தமிழர், இந்திய ஆரியர் ஒருவகை ; ஐரோப்பிய ஆரியர் ஒருவகை ; அரபியர், துருக்கியர், பாரசீகர் ஒருவகை ; ஆப்பிரிக்கர் ஒருவகை ; சீனர், ஜப்பானியர், பர்மியர் ஒருவகை ; அமெரிக்க இந்தியர் ஒருவகை ; இப்படி மக்களில் அமைப்பிலும், நாகரிகத்திலும் பலவகை; கிறிஸ்தவர், இஸ்லாமியர், புத்தர், ஜைனர், கண்பூசியர், வேதாந்திகள், சித்தாந்திகள், உலகாயதர் என மத வேறுபாடுகள் பல ; இம்மதங்களில் உட்பிரிவுகள் பல ; உதாரணமாகக் கிறிஸ்தவருள் கத்தோலியர், புரோதஸ்தாந்தியர், ப்ரிஸ்பிதேரியர், ஆங்கிலிகர் எனப் பல பிரிவுகள். இஸ்லாமியரில் ஷியாக்கள், ஸுன்னிகள் உள்ளனர் ; இப்போது அஹமதியரும் பஹாய் மதத்தினரும் எழுந்துள்ளனர் ; புத்தருள் மஹாயனர், ஹினயனர் ; ஜைனருள் திகம்பரிகள், ஸ்வேதாம்பரிகள், ஸ்தானக வாசிகள்; வேதாந்திகளுள் அத்வைதிகள், துவைதிகள், விசிட்டாத்வைதிகள் ; சித்தாந்திகளுள், சிவாத்துவைதிகள், வீரசைவர், காபாலிகர் உள்ளனர் ; இதுதவிர தாந்திரிகர்கள், ஸெளர்யோபாசிகள், காணபத்யர்கள், கபீர்பந்தாக்காரர்கள், ராமபக்தர், கிருஷ்ணபக்தர் உள்ளனர். தற்காலம் ப்ரஹ்ம ஞானிகள் (தியசாபிகள்) ஆரியஸமா

ஜத்தார், பிரமஸமாஜத்தார் (இவர்களில் ஆதிப்ரம்ம சமாஜம் சாதாரண பிரம்ம சமாஜம் என இருபிரிவுகள்), ராமகிருஷ்ண சங்கத்தார், ராமதீர்த்த பக்தர் உள்ளனர். இவற்றுடன் அருள்வள்ளலாரின் சமரஸசன்மார்க்கரும், சமதர்ம சங்கத்தாரும் உள்ளனர். இவர்களில் எத்தனையோ வேற்றுமைகள் உள்ளன; இத்தனை மதக் கிளைகளில் உனக்கு எது நல்லது; எதில் நீசேருவது என்கிறாய். அப்பனே! தான், தனக்கு என்று கோட்டை கட்டிக் கொள்ளும் சங்கங்கள் குண்டுநீர்போலத் தேங்கி, ஓட்டமின்றி நாளடைவில்வற்றிப்போம். இத்தனைசங்கங்களும் பொதுவாக என்ன சொல்லிக்கொள்ளுகின்றன? "நான் உண்மை: உண்மையே உயர்வு" என்று. ஒரு மதமே உண்மையாயின் மற்றவைபொய்யா? இல்லை. கேள்: கடவுளுண்மை ஒரு பெரிய கற்பக மரம்; அதில் பல கிளைகள் உள்ளன; ஒவ்வொரு கிளையிலும் அன்பெனும் இலைகள், அறிவு மலர்கள், உண்மைக் கனிகள், இன்பச் சுவை நிறைந்துள்ளன. பலவகைப் புட்கள் இக்கனிகளையுண்ண நாலா பக்கங்களினின்றும் வருகின்றன; ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையாகப் பாடுகிறது; ஆடுகிறது. ஒவ்வொன்றின் வடிவும் நிறமும் வேறு. ஆனால் எல்லாம் இந்த உண்மை யின்பக் கனிகளையே நாடி வருகின்றன. இது மாதிரி கடவுளுண்மையை நாடி அறிவுப் பசி கொண்ட மனிதர் ஒரு உண்மையின் பல கிளைகளான மத வகுப்புகளில் பல வகையாகக் கூடுகின்றனர்; சிலர் அருட்பா பாடுகின்றனர், சிலர் தேவாரம், சிலர் திருவாய்மொழி, சிலர் உபநிடதம், சிலர் பைபிள், கொரான், புத்ததர்மம், தவோ வேதம், ஜெந்தவஸ்தா, இப்படிப் பல குரல்கள் ஒரு உண்மையைப் பலவகையாகப் பாடுகின்றன. அவரவர்

காலமானதும் அவரவர் செல்கின்றனர். சிலர் புதிதாக வருகின்றனர். இப்படிப் போக்கு வரவு செய்து கொண்டு இருக்கும் நாட்களில் ஏதோ ஒரு கிளையைப் பற்றி, ஒரு சத்தம் போட்டுக்கொண்டு மாந்தர் வாழு கின்றனர்.

அப்பனே! கிளைகள் பல; கனி ஒன்று; கனிகள் பல; சுவை ஒன்று; எல்லாம் உண்மையறிவினின்று விரிந்து இன்பங் கனிந்தன. அன்பனே! மதங்கள் பல; நீ எதையும் வெறுக்காதே. எதையும் இதுதான் முழுவுண்மை யென்று பற்றாதே. மதக் கனிகளைப் பிழிந்து கட்டியாக்கி உனக்குத் தருகிறேன். இத்தனை மதங்களுக்கும் ஒரு பொது நெறி யுள்ளது. அதையே சொல்லுகிறேன்; இம்மதங்களி னும் உயர்ந்த உண்மையுள்ளது. அதையே நீ பின் பற்று. சில மதங்கள் கடவுள் உண்டெனும்; சில இல்லை யெனும்; சில நானே கடவுளெனும்; சில கட வுள் ஒருவன் எனும்; சில பல வெனும்; சில சக்தி யெனும்; சில உயிர் உலகம், இறைவன் வெவ்வே றெனும்; சில ஒன்றெனும். இப்படிப் பிரிவுகள் ஒரே கடவுளைப் பற்றிப் பல.

---

## 51. மதவாதம் வீண்

சில ஆண்டுகளுக்கு முன்னே யான் ஆண்டிற்கு நான்கு மாதங்கள் கால் நடையாக நமது நாட்டைச் சுற்றி மனித வியல்பையும், உலகியல்பையும் அறிந்து குறித்துக் கொள்வது வழக்கம். இவ் வுலகமே எனது பள்ளிக்கூடம்; இயற்கையே எனது சுவடி. முன் வருஷம் முடிவாகச் சென்ற இடத்தி

னின்று பின் வருஷ யாத்திரை கால் நடையாகத் தொடங்குவதுண்டு ; (நாளைக்கு 10 அல்லது 15 மைல் நடப்பது வழக்கம்) அப்போது நாட்டில் நாலாபக்கத் தினின்றும் பலபான்மை மாந்தர் உறவு கிடைக்கும். அதனுல் யான் அடைந்த பயன்கள் பல, பல. ஒரு முறை கோயிலடி ராயர் சத்திரத்தில் தங்க நேர்ந்தது. இன்னும் மணியடிக்கவில்லை. திண்ணையில் ஏகக்கூச்சல், வாய்ச்சிலம்பம், ரகளை ; எட்டுப் பேர் சத்தம்போடு கின்றனர். இருவர் வைராகிகள், ஒருவர் தெலுங்கர், ஒருவர் நம்பூதிரி (விகடன்) இரண்டு பரதேசிகள், மற் றிருவர் வைணவர்கள். வைணவர்கள் பல்லாண்டு ஆரம் பித்தார்கள் ; பரங்கள் "சங்கர சங்கர சம்பு - ஆதி யனுதியும் ஆகி" என்று கப்பறை தட்டத்தொடங்கி னர். "இதென்ன அபசகுனம். நாராயணு" என்று காதில் கைவைத்தார் வைணவர் ஒருவர். மலையாளி "ஜனகந்தன் மகளல்லோ சீதைப்பெண்ணே—தைத் தா—மொண்டு கொடுத்தது ராமச்சாரி!" என்று கிளி ராமாயணம் பாடுவதுடன் இருவருக்கும் சிண்டுமுட்டி விட்டான் ; இடையே வைராகிகள் "பஜரே பையா ராமகோவிந்த ஹரீ!" என்று ஷட்ஜமத்தில் தொண்டை யைத் திறந்து கமாஸ்ராகத்தில் ஆரம்பித்தனர். தெலுங் கர் ஒரு தூக்கம் போடலாமெனக் கண்ணை மூடினர் ; இந்தச் சத்தம் அவருக்குப் பொறுக்கவில்லை ; "ஏமி முண்டா கொடுகுலு" என்று எல்லாரையும் அதட்டினர். வைராவிக்கும் அவருக்கும் வலுத்த வாய்ச்சண்டை ; அவர் தெலுங்கில் ஊசி மிளகாய் மாதிரி சுரீர் சுரீரெனப் பேசுகிருர் ; வைராவிகள் உருதுவில் சிறிதுநேரம் திட்டுவதும் சிறிது நேரம் பாடுவதுமாயிருக்கின்றனர். இதனிடையே மலையாளி விகடம்பொழிகிருன்; அவன்,

மீது வைராவி பாய்கிறுன்; வடுகன் வைராவி மீது பாய்கிறுன். மற்ருெருபுறம் சிவ விஷ்ணுச்சண்டை. "எங்கள் பெருமாள் கவுத்துவமணிந்தார்; திருவை யணிந்தார்; உங்கள் சிவன் விடமுண்டார்; சுடுகாட்டில் எலும்புகளையணிந்தார்; பாம்புகளை யணிந்தார்; மண் சுமந்தார். எங்கள் திருமாலின் அடிகழுவிய தண்ணீர் தான் கங்கை. அதை உமது சிவன் தலையிலணிந்தார்!" என்றனர் வைணவர். சைவர் "மாலுக்குச் சக்கரம் அளித்தவன் எங்கள் சிவன்; உமது விஷ்ணு பன்றியாக பூமியைத் துளைத்துப் பார்த்தும் எங்கள் சிவனின் அடிகாண முடியவில்லை; பிரமன் முடிகாண முடியவில்லை" என்றனர். அவர்கள் "எங்கள் பெருமான் மோகினியாகி பஸ்மாசுரனை எரிக்காவிடில் உங்கள் சிவன் என்ன பாடுபடுவான்" என்ருர். "அந்த மோகினி எங்கள் சிவனிடம் மோகப்பட்டு ஹரிஹரபுத்ரனையும் பெற்றது நினைப்பில்லையோ?" என்று இப்படிப்பழைய புராணமெல்லாம் பேசத் தொடங்கினுர்கள். மலையாளி 'எந்தோ, மலஞாளம் பறைஞு' என இடைப்புகுந்து வேடிக்கை செய்தான். இச்சண்டைகள் ஓய்ந்தபாடில்லை. நான் காவிரியில் முழுகிவிட்டு அடுத்தாற் போலத் தியானம்செய்து ஜபமாலை உருட்டிக்கொண்டிருந்தேன்; [அப்போது ஏராளமாக ஜபம் செய்வதுண்டு] யுத்தகளத்தில்கூட அமைதியாகத் தியானம்செய்ய முடியும்; மனம் அப்படி அமைதியில் பழகியிருந்தது. இந்தச் சிறிய வாய் பாரத யுத்தம் என் பக்கம் திரும்பியது. அவரிடம் சொல்லுவோம் வாரும் என்று வந்தனர்; அப்போது எனது நெற்றியில் எப்போதேனும் குங்குவமே இடுவதுண்டு. அது சிவன், விஷ்ணு இருவருக்கும் பொது. பெரும்பாலும் சாதிசமயக்குறிகளையிடுவதில்லை.

சிவமே பரமென்றனர் பரங்கள் ; வைணவர் நாரணனே பரம் நீரென்ன சொல்கிறீர் என்றனர் மலையாளியை. நீர் என்ன சொல்கிறீர் என்ருன் மலையாளி. வைராவி ஹரிபோல்என்ருன். "ஐயாநீர்சொல்வதெல்லாம்ஒன்ருத் தானேயிருக்கிறது.வாய்ப்பேச்சைவிட்டுமனத்தில் எண் ணுங்கள் ; அப்போது ஒன்றே காணும்" என்றேன். ஆளுக்கொருமூலை வாதம் பேசினர்:"எப்படி ஒன்ருகும்? நானும் நீரும் ஒன்ரு? பெருமாள் பெரிதுதான்..." என்று வாதம் கிளம்பிற்று. இவர்களுடன் மேற்கோள் கூறி வாதமிடுவது வீண்முயற்சி என்று உண்மையான கேள்விகள் கேட்டேன்.

ஐயா, ஆளுக்கு ஒரு மூலையாகப் பேசுகிறீர்களே பேசுவது எது?

நாக்கு ; நாக்கு ஒன்று பலவிதமாகப் பேசுகிறது. எதைப் பற்றி வாதாடுகிறீர்? கடவுளைப் பற்றி. நீர் என்ன சொல்லுகிறீர்? என் சாமி பெரிது ; நீர்? எஞ் சாமி பெரிது ; என் என்பதை அழித்தால் மீதி? மீதி சாமி பெரிது. அதனல் ஒரு பெரிய சாமியை நீர் சிவ மென்கிறீர்; அவர் விண்டு வென்கிருர் ; இவர் மலையாளி என்கிருர் ; இவர்கள் ராதா காந்தன், ஹரி என்கின்ற னர் ; அந்தத் தெலுங்கருக்கு உங்கள் சாமி வாதம் தலை வேதனையா யிருக்கிறது. அவர் அமைதியாகத் தூங்க வேண்டுகிருர். சிவன் விஷ்ணு வென்று சாமிக்குப் பேர் கொடுத்ததார்? முன்னேர்கள் ; விஷ்ணு எங்கே? இதோ இருக்கிருர் அப்பக் குடத்தார் ; அப்பக் குடத் தார் சிலை செய்தது யார்? சிற்பி; அவன் எப்படிச் செய்தான் ; சாஸ்திரம் பார்த்து முறைப்படி செதுக்கி ஞன் ; அதற்குப் பெயரிட்டது யார்? பட்டாசாரியார் ; ஆதலால் பெயரும் வடிவும் தந்தது மனித மூளை

தானே? ஆம். கோவில் கட்டினது யார்? நம்மதான்; உமது கோவிலில்லா விட்டால் சாமி இருக்குமா, இராதா? அவர் எங்கு மிருப்பார்; எங்கும் நிறைந்திருப்பார்; எல்லாம் அறிவார். ஆதலால் மனித மனத்தின் கற்பனைதானே இப்படி பெயர் வடிவுகளைக் கொண்டு வாதாடுகிறது? ஆம். நீர் எதனால் இப்படி வாதாடுகிறீர்? கடவுளிடமிருக்கும் அன்பால்; உறுதியால். அவர்? அப்படியே. ஆதலால் நீங்கள் எம்மதமேனும், எப்படி வாய் பேசினும் உள்ளே கடவுளிடம் கொண்ட அன்பு ஒன்றேயன்றோ? ஆம். ஆதலால் அன்பு எல்லா மதங்களுக்கும் பொது. உமது கடவுளை நீர் கண்டதுண்டா? இல்லை. கேட்டதுண்டா? புராணங்களில்தான். காணாத ஒரு பொருளைப் பற்றி ஏனிப்படிக் கூச்சல் போட்டு இச்சத்திரத்தின் அமைதியைக் கெடுக்கிறீர்கள்? நாம் பெரிதென்பதை இவர் மறுக்கவாவது என்னும் காழ்ப்பினால். சிவனாவது விண்டுவாவது உங்களுக்குப் பேசும்படி வக்காலத்துக் கொடுத்தனரா? இல்லை. ஆதலால் பேசுவது எது? ஆத்திரம். இப்பேச்சால் கடவுள் மகிழுவாரா? உங்கள் முன் தோன்றிவிடுவாரா? மாட்டார். நீர் சிவன் என்கிறீர்; நீர் விண்டுவென்கிறீர்; இரு பெயர்களையும் சொல்லாதவர்கட்குக் கடவுளில்லையா? அவர் எல்லாருக்கும் பொது; அப்ப, அப்படி வாருங்கள்! இதோ இந்தக் காவிரி ஓடுகிறது; இக்கரையில் இதற்குப் பல படித்துறைகள் உள்ளன; அதில் வெவ்வேறு வகையினர் முழுகுகின்றனர். அவற்றிற்குப் பார்ப்பனர் படித்துறை..............முதலிய பேர்களும் உண்டு. சிலவேளை ஒரு படியில் மற்றவர் இறங்கினால் குடுமியைப் பிடித்துக் கொள்வதுமுண்டு. அதற்கொரு காவற்காரன் அதோ இருக்கிறான். இவற்றையெல்லாம்

காவிரியாறு பாராட்டுகிறதா ? அது பிராமணக் காவிரியா, சிவக்காவிரியா, விஷ்ணு காவிரியா, அல்லாக் காவிரியா—இல்லை. காவிரி ஒன்றுதானே ? ஆம்! படித்துறை அவரவர் சௌகரியத்திற்காக வெவ்வேறு கட்டிக்கொண்டுள்ளனர். அது மனிதன் வேலை. காவிரி என்ற பெயர் கூட மனிதனிட்டது. அதுபோல ஆண்டவன் ஒருவர் ; அவனது சக்தி உலகமாக விளையாடுகிறது. மன மாயையால் மனிதன் அந்த அகண்ட சுத்தசுதந்திர சமத்துவ வெள்ளத்தால் எங்கெங்கோ சாதிமதப் படித்துறைகள் கட்டிக்கொண்டு வாதாடுகிறான், என்று ஹிந்தி, தெலுங்கு, மலையாளம், தமிழ் எல்லாவற்றிலும் எடுத்துச் சொல்லவே அவர்கள் சண்டை ஓய்ந்தது. பிறகு பிரியமுடன் பல கேள்விகள் கேட்கத் தொடங்கினர். அதற்குள் சத்திரம் மணியடித்தது ; மணியக்காரர் வந்து என்னை மரியாதையுடன் அழைத்தார் ; பரதேசிகளை விட்டு நான்மட்டும் சாப்பிட ஒப்பவில்லை. இருவருக்கும் பசி ஒன்றுதானே. ஆதலால் "எனக்குக் கடலையும் கனியும் உணவு. இதோ இக்குடுக்கையில் கொத்துக்கடலை ஊறப்போட்டுள்ளேன். வாழைக்கனி வாங்கிச் சாப்பிடுகிறேன்" என்றேன். மணியக்காரர் ஏதோ ஒரு அன்பு மேற்கொண்டு உள்ளிருந்து பழமும் பாலும் கொண்டு வந்தார் ; பரங்களுக்குத் தந்து யானும் கடலையுடன் கனியுண்டேன். மணியடித்ததும் எல்லாரும் எழுந்து போய்ச் சாப்பிடத் தொடங்கினர். மலையாளி ஏதோ வாயெடுத்தார் "கடோ;பஹலேபோஜன்கரோ" என்றான் வயிராவி (பிராமணன்). அப்படியே பிறரும். சாப்பாடாயிற்று; திண்ணைக்கு வந்து மல்லாக்க விழுந்தனர். மலையாளி விகடம் செய்தான் ; பட்சிகள்போலக் கத்தினான். அப்போது வயிராவி என்னைச் சாதுவென்றழைத்துச்

'சாப்பிடுமுன் இவ்வளவு கூச்சல் போட்டோம்; இப்போது சிரித்து மகிழுகிறோம். எல்லாம் நீங்கள் சமாதானம் செய்ததால்; சிறிது எங்களுக்கு ஏதாயினும் சொல்லுங்கள்' என்றான். "ஐயா இதுஒரு சத்திரம்;இதில் பலர் கூடினர்; வெவ்வேறு இயல்பினர்; சத்தம் போட்டனர்; மணியடித்ததும் சட்டென எழுந்து வந்த காரியம் பார்த்தனர்; சாப்பிடும்போது பேச்சில்லை. அது போல் இவ்வுலகம் ஒரு சத்திரம்; இதில் நாடோறும் புதிய மனிதர் வருகின்றனர்; போகின்றனர். அவரவர் இக்காவிரியில் துறையறிந்து மூழ்கி அனுட்டானங்களைச் செய்துகொண்டு மணியடித்ததும் காரியத்தை முடித்துக்கொண்டு சென்றால் வம்பில்லை. சாப்பாடு போடுமுன் எத்தனை வாதங்கள் பேசினீர்கள்? மணியடித்ததும் அத்தனையும் அடங்கிவிட்டனவே! சாப்பிடும்போது பேச்சுண்டா? அதுபோல ஒருவன் உலகில் தான் வந்த காரியத்தை மறந்து வீண்வாதம் புரிகிறான். ஆண்டவன் அருள் மணியடிக்கிறது; "அடே! இது சத்திரம்; உன் வீடல்ல; இங்கு ஒரு காரியத்திற்கு வந்தாய்; காரியத்தைப் பார்த்துக்கொண்டு செல்" என்கிறது; உடனே தனது காரியம் நினைப்பிற்கு வருகிறது. 'ஆகா! நாம் வாது வழக்காட இங்கு வரவில்லை; ஆண்டவனின் அருளமுதை உள்ளாழ்ந்து உண்ணவன்றோ இவ்வுடலான சத்திரத்தில் புகுந்தோம்' என்று அறிகிறான். அவ்வருளமுதை யுண்ணும்போது வேறு பேச்சும் வாதும் வெறுப்பா யிருக்கிறது. ஆதலால் வாதமும் பேச்சும் வாய்மையைக் காட்டா. உள்ளே சோதித்து உண்மை யின்பமுறுமின்! அப்போது இவ்வாதங்கள் வெறுத்துப் போகும். ஒருவன் வீணை மீட்டுகிறான்; அது எல்லாருக்கும் இன்பமளிக்கிறது.

இன்பமளிப்பது அவன் மீட்டும் கீர்த்தனத்தின்மொழி களல்ல; அதன் இன்ஞெலியே. அதுபோல எல்லா மத நூல்களும் ஒரே ஆண்டவனையே இனிதுறப் பாடு கின்றன ; மொழிகளைக் கண்டு மயங்கவேண்டா. "நான் பேசுகிறேன் ; எனது சாமி" என்றீரே இந்த நான் யார்? உடலா? உயிர்போனுல் நானெனக்கைவீசு வீரா? இந்தப் பெயர் வடிவு வேற்றுமையெல்லாம் தூல விகாரம் ; பொருள் உள்ளத்திலுள்ளது ; உள்ளத்தி லுள்ளதே உலகெங்கும் உள்ளது. உமக்கிருக்கும் உயிர்தான் எறும்புக்கும் உள்ளது. பெயரையும் வடிவை யும் நீக்கி நோக்குமின் ; மிச்சம் ஒரே உயிர் ; அந்த உயிருக்குயிர் இறைவன். அவனைத் திடமாகப் பிடியுங் கள். அன்பர்களே! உங்கள் மதங்கள் உண்டாகு முன்- உங்கள் மதாசாரியர்கள் பிறக்கு முன்-இறைவன் இருந் தான் ; என்று முள்ளான் ; எங்குமுள்ளான். நூறு வகையான மதங்களில் தேடுவதைவிட உள்ளே தேடுங் கள்" என்றதும் எல்லாருக்கும் மகிழ்வு ஏற்பட்டது. மாலை என்னுடன் நீராடி அனைவரும் தியானம் செய் தனர். பிறகு இவர்கள் 150 மைல் என்னுடன் சுற் றினர்.

அன்பனே! இதை எதற்காகச் சொன்னேன். உலக இயல்பும், உண்மையிடமும் குறிப்பதற்கு. கவனி: உலக வாழ்வு ஒரு குடிநீர் ஊருணி. அதில் சிலர் விதிப்படி குடிநீர் மொண்டு செல்கின்றனர் ; விதிமுறை களை மதியாத பொல்லோர் சிலர் மெதுவாக இறங்கி முழுகச் செல்கின்றனர் ; இரவில் சிலர் கால் கழுவி ஓசைபடாது செல்கின்றனர் ; காவற்காரன் " இது குடி நீர் கால்கை கழுவாதே ! ஆபாசம் செய்யாதே" என்று கூவுகிறுன். உணர்ச்சியுள்ளவர்கள் "இதுமுறை;

நாம் ஆபாசம் செய்தால் தண்ணீர் கெடும் ; அது ஊருக் குத் தானே கெடுதல்'' என்று உணர்ந்து செல்கின்றனர்; சிலர் அவன் சத்தம் போடட்டும், நாம் இரகசியமாக.... என்று முறை தப்பிச் செய்கின்றனர். காவற்காரன் கிட்ட வந்து சொல்லுகிறான். சிலமூரடர் 'கிழவா பேசினால் உதை ; நான் யார் தெரியுமா ?' என்று வைர மோதிரத்தைக் காட்டி வீம்பாக ஆபாசம் செய்து செல்கின்றனர். கிழவன் பிடிவாதமாக நீதியுரைக்கிறான். முடிவில் சிலர் ஆபாசத்தால் குளமே கெட்டுப்போகி றது. அதைத் தூர்வை யெடுக்க ஒரு தர்மவான் (அற வோன்) ஏற்படவேண்டி யிருக்கிறது. இக்குளம் மனித வாழ்வு ; காவற்காரனே மனித தர்மம். "அப்பனே! சுத்தமாக வாழு; பொய் சூது, களவு, வஞ்சம், அகந்தை திருட்டு, விபசாரம், பகை, சண்டை வேண்டாம் ; இக் குளம் பரிசுத்தமா யிருக்கிறது; உனக்கு வேண்டிய சிறுதேவையை முகந்து வேறு தீங்கிழையாது செல்'' என்கிறான். சிலர் தர்ம தேவிக்குக் கட்டுப்பட்டு நடக் கின்றனர் ; சிலர் இரகசியமாக அக்ரமம், தீது செய்கின் றனர் ; சிலர் தாம் செல்வரெனும் மமதையால் முறை தப்பி நடக்கின்றனர். இதனால் மனித சமுதாய வாழ்வு முழுதும் கெடுகின்றது. அக்கேட்டைப் போக்கத் தர்ம தேவதை ஆண்டவனை யழைக்கிறாள். ஆண்டவன் குரு மாரை யனுப்பி வாழ்வுக் குளத்தை மீண்டும் சுத்தம் செய்கிறான். அப்பனே ! உன் மனசாட்சியே தர்ம தேவதை. இந்த உதாரணத்தை நன்கு சிந்தித்துப் பார் ! குருமார்களையே உபகாரத்திற்காக அவதாரம் என்பர். தூய்மை, அன்பு, உண்மை, தன்னறிவு, இன் சொல், அச்சமின்மை, பெரியோர் நட்பு, ஆன்ம வுறுதி, ஒப்புரவு, நல்லொழுக்கம், தனது உடை யுணவிற்காக

ஒரு தீங்கற்ற தொழில், அறிவு வளர்ச்சி, ஆசையாண வங்களை யடக்கல், ஒற்றுமை, உள்ளமைதி இவை எந்த மத்ததிற்கேனும் விரோதமா ? இல்லை. இவை எல்லா மதங்களுக்கும் ஒன்று. எல்லா மதங்களையும் பிழிந் தெடுத்தால் மூன்று அமுதச் சொட்டுகள் விழும்—சுத்தி, முத்தி, சமதி—தூய்மை, கட்டின்மை, ஆன்ம நேய ஒருப்பாடு. இவற்றில் எல்லாம் அடங்கும்.

---

## 52. சுத்தான்ம வாழ்வு

ஐயனே ! உலகில் பல மதங்கள் உள்ளனவே ! எதைப் பற்றுவது என மயங்குகிறாய் ! இம்மதக் கோட்டைகளுள் நடக்கும் சண்டை சச்சரவுகளையும், சிறுமைகளையும் நீ கண்ணுறக் கண்டால் மனங் கலங்கி நாஸ்திகனாய் விடுவாய். உன் சொந்த மதத்தையே எண்ணிப் பார். எத்தனை வகுப்புகள் பகுப்புகள் உள்ளன ? உன்னாற் சிறிதும் பின்பற்ற முடியாத எத்தனை விதிகள் உள்ளன ? நான் அந்த மதம் இந்த மதம் என்பதெல்லாம் மேற்பூச்சு. ஒவ்வொரு மனிதனுக்கும் மனச்சாட்சி ஆன்மா உள்ளது. அது உள்ளிருந்து ஏவிய வழியே தன்னறம். அதுவே அவனுக்கு அமைதிதரும். அதன்வழி எம்மதத்திற்கும் சம்மதமா யிருக்கும். பூச்சும், வீச்சும், பேச்சும் வேறுபடலாம். நாடக மேடையில் விதவிதமாக வேடம்போட்டு ஆடுகின்றனர் ; இந்த ஆட்டங்களால் விகாரப்படாத மனிதன் உள்ளே உள்ளான். அதுபோலே மேல் பூச்சுகளால் வேறுபடாத ஆன்மா, சுத்தான்மா ஒவ்வொருவருள்ளும் உள்ளது. அதைப்பற்றி அதுவாயிரு. காகம் ஆடுகிறான்; எத்தனை கெத்துகள், எத்தனை சதுர்கள், கிண்கிணி நடனங்கள்

புரிந்தாலும் கவனம் பானைமேல் இருக்கிறதல்லவா? அதுபோல, ஆன்மாவாகிய உன்னில் கவனத்தை வை; பிறகு உலகின் குணதொந்த விகாரங்கள் உன்னை ஒட்டா. குணம் குணத்துடன் குடுமி பிடித்தலைகிறது. எனக்கொன்றுமில்லை; நான் உள்ளவாறு இருக்கிறேன் என்றுணர்வாய்.

உலகின் இயல்பையும் அறிவாளி உலகில் எப்படி இருக்க வேண்டும், எத்தகைய முயற்சி செய்ய வேண்டும் என்பதனை அனுபவித்த புலவர்மணிகள் பலவாக வராளமாகச் சொல்லிப் போயினர். என் வாழ்வினின்று உதிர்ந்த சில அனுபவ மலர்களை உனக்குத் தருகிறேன். அவற்றை ஆழ்ந்து யோசித்துப் பின்பற்றி நில். உன் அனுபவத்திற்கு அவை ஒத்துக் கொள்ளாவிடில் விட்டு விடு. உனக்கு எப்போது அவை உசிதமென்று காணப் படுகின்றனவோ அப்போது அவற்றைப் பின்பற்று. பசித்தபோது ருசித்து உண்பாய்.

---

## 53. உலக மாயம்

பத்து வருஷமாக பாகவதம் படிக்கிறார் சாஸ்திரி. அரசன் மெச்சினான். "சாஸ்திரிகளே, தங்கள் பக்தியும் சிரத்தையும் என் மனத்தை உருக்குகின்றன; தங்கள் குடும்ப வாழ்வு எப்படிக் கழிகிறது?" என்றான். "இரவில் 4-மணி நேரம் பாகவதம்; அதில் வரும் வரும்படி உப்புப் புளிக்குச் சரி; அரிசி வகையராவிற்குப் பகல் முழுதும் புரோகிதம் - அலைகிறேன்."—"தங்களுக்கு இக் கவலை வேண்டாம்; குடும்பத்திற்கு வேண்டிய படித்திரம் தினந்தினம் அரண்மனை உக்ராணத்தினின்று போகும்."—"மஹாராஜன் நன்றாயிருக்க வேண்

டும்.'' அன்னவிசாரம் ஒழிந்தது. ஆறு மாதம் சென்று அரசன், "சாஸ்திரிகளே, இப்போது கவலையில்லாமல் பக்தி நடக்கிறதா ?''—"என்ன சொல்லட்டும். ஆத்துக்காரி தினுசு, தினுசாக பட்டுப் புடவை வேண்டுமென்கிருள். 50 ரூபா போட்டால் தானே ஒரு டில்லி தர்பார் புடவையாவது வாங்கமுடிகிறது ! சாப்பாட்டுக் கவலை தான் இல்லையே. சம்பாதிக்கிற பணத்திற்குப் புடவை வாங்குங்கள் என்கிருள்.''—"கவலைவேண்டாம் வருஷம் நான்கு புடவைகளும் வேண்டிய ஆடைகளும் தருகிறோம் பக்திநடக்கட்டும்!'' ஆறு மாதம் கழிந்தது;-"பக்தி எப்படி ?''—"மஹாராஜா புடவை துணிக்கவலையில்லை ; சம்ஸாரம் நகை நாணயம் வேண்டுமென்று பிடுங்கித் தின்கிருள். அதற்காக அல்லும் பகலும் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது; கிருஷ்ணாராமா என்று கூறக் கூடப் போதில்லை''-"கவலை வேண்டாம் வேண்டிய ஆபரணம் தருகிறோம், பக்தி நடக்கட்டும் ''; ஆறுண்டுகள் ஆயின. "பக்தி எப்படி?'' "தெய்வம் வீடு நிறையக் குழந்தை கொடுத்து விட்டது ; 5 பெண் குழந்தைகள். ஐந்து பெற்ருல் அரசனும் ஆண்டியாவான் என்ருல், ஏழையின் கதிஎன்ன ? முதல் இரண்டு பெண்களுக்கும் இந்த தை தப்பாது கலியாணம் ஆகவேண்டும். இந்தக் காலத்துப் பிள்ளையாண்டான்கள் பைபையாகப் பணம் கேட்கின்றனர். ஐந்து பெண்களுக்கும் சுமார் 20,000 ரூபாயாவது இருந்தால்தான் மானமாகத் தாலிகட்டிமுடியும்.இதைப்பற்றி அவளுக்கும் எனக்கும் வாக்குவாதங்கள் நடக்கின்றன''—"இவ்வளவு தானே இந்தாரும் பணம் ; கவலையற்றிரும்.'' சரி ; ஆறுமாதம் ஆனது. "பக்தி எப்படி?''-"மஹாராஜா பெண் பார்க்க வருகிறவர்கள் இந்தக் கூரைக்குச்சில் நான் பெண்ணெடுக்கமாட்

டேன் என்கின்றனர். வீட்டை நாகரிகமாகக் கட்ட வேண்டுமென்கிறுள் மனைவி''—''அதுவும் சரி; உங்களுக்குப் பெரிய பங்களா அமைத்துத் தருவோம்'' சரி; குச்சு போச்சு பங்களா வந்தது! நாலு வருஷம் ஆனது; ''பக்தி எப்படி?''—''மஹாராஜா! வீடு சரிதான். இரண்டு காணி இருந்தால் தானே கவலையில்லாதிருக்கும் என்று மனைவி தூண்டுகிறுள். இந்தக் காலத்தில் தான தர்மங்கள் யார் செய்கிறுர்கள்? கோதானம் பூதானம் எல்லாம் ஆதிகாலம்; மஹாராஜாதான் கண் பார்க்க வேண்டும்'' ''இதற்கென்ன பிரமாதம்; தங்களுக்கு 10 காணி ஆற்றோரத்தில் தானம் செய்கிறேன்''-''மஹாராஜா நீடூழி வாழ்க'' ஒரு வருஷம் ஆயிற்று! ''பக்தி எப்படி?'' மஹாராஜா! என்னென்று சொல்வேன்! ஆசைக்கொரு ஆண் குழந்தை வேண்டுமென்று இருக்கிறது. அதற்காகக் காசி யாத்திரை போகவேண்டும்.'' ''சரி போம்; இந்தாரும் பணம்.'' காசியாத்திரை ஆண் குழந்தையாகப் பழுத்தது. பயல் செழு செழுவென்று வளர்ந்தான். பி. ஏ. தேறினுன். ரூ. 2000 வரதக்ஷிணையுடன் பெண் வந்தது; போலீஸ் சேவகம் கிடைத்தது; மனைவியைக் கூட்டிக்கொண்டு துண்டாய்ப் போனுன்; தகப்பனுடன் சண்டை. ''பக்தி எப்படி?'' ''அந்தப் பயல் செய்கிற அக்ரமம் பொறுக்க முடியவில்லை; என் பணத்தையெல்லாம் வாரிக் கொட்டிக்கொண்டு, படித்து, வரதக்ஷிணைப் பணத்தையும் தன் பெயருக்குப் போட்டுக்கொண்டு துண்டாகப் போய்விட்டான்;வயதுக்காலத்தில் திண்டாடவிட்டான். பெண் குழந்தைகள் அவரவர் வீடுகளில் குடித்தனம் செய்கின்றன.''-''போனது போகட்டும்,கவலையற்று பக்தி பண்ணும்.''-''இப்போது பக்தி எப்படி?'' ''நான் பக்திபண்ணி வாழவில்லையா?

பாகவதமும் போயிற்று ! துண்டாய்ப் போனவன் ஒரு கலகத்திலே மண்டையுடைந்து மாண்டு போனான்! வயறும் பிள்ளையுமாக நாட்டுப்பெண் வீட்டிலிருக்கிறாள். என் செல்வத்திற்கு அவள் பக்கம் சீட்டு விழுந்தது. இரண்டுபெண்கள் கணவரையிழந்து நண்டுஞ்சிண்டுமாக ஒருடஜன் குழந்தைகளுடன் வீட்டிற்குத் திரும்பிவந்து விட்டன. மற்றொருபெண்ணைப் பேயிடம்கொடுத்தேன். அடிக்கிறான் ; திட்டுகிறான். மற்றொன்றிற்குக் காசக்காரன் வாய்த்தான்.ஒரு சுகமுமில்லை.சதா கவலை. அவளுடம்பும் மனமும் உடைந்துபோயின.என்னசெய்வது?"-"இதற்கென்ன செய்யலாம் ! நான் செய்யக்கூடியதைச் செய்தேன். தங்கள் மனம் குடும்பச் சக்கரத்திற் சுழல்கிறது. "ஆம்! மன்னா! உண்ண, உடுக்க இருக்கக் குறைவில்லை; மனைவியும் இருக்கிறாள் ; குழந்தைகளும் இருக்கின்றன. உலகின் இன்ப துன்பங்களை வெல்ல முடியவில்லை ; மனத்தை இதில் புகுத்தினால் மீள்வதரிது ; ஆதலால் மனத்தை உள்முகப்படுத்துகிறேன்" என்று உறுதி பூண்டார் சாஸ்திரிகள்.

---

## 54. உலகியல்பு

மனிதன் மூளை கொதிக்கப் படிக்கிறான் ; வாய் மாரி பொழிகிறான் ; புத்தகம் புத்தகமாக எழுதித் தள்ளுகிறான்; பணம் குவிக்கிறான் ; செல்வச் செருக்கில் தீங்கிழைக்கிறான் ; எமனோலை வந்ததும் கர்மமூட்டையைச் சுமந்து செல்லுகிறான். "இத்தனை பேசினாயே, படித்தாயே, எழுதினாயே, பணங்குவித்தாயே என்ன சுகம் பெற்றாய் ?" சுகக்கலம் பூஜ்யம். "எத்தனையோ சாத்திரம் கண்டாயே உன்னை நீ கண்டாயா?"

பெப்பெப்பே ! "வீடு வாசல் மனை பெண்டாட்டிபிள்ளை உத்யோகம், காசு பணம், நிலம் காணிகளை வேண்டு மட்டும் அடைந்தாயே, மனத்திற்குச் சமாதானம் உண் டாயிற்றா?" அதேது! கவலைத் தீயில் மண்ணெண்ணெய் வார்த்தேன். "அப்பனே! இந்தச் சிறு சுகங்களுக்குமேல் ஒரு பெரிய சுகம் உள்ளதே அதை எண்ணினையா ?" "என்ன ஸம்ஸாரம், என்ன ஸம்ஸாரமடா கடை நாய்ப் பிழைப்பு என்று ஆயிரம்தரம் எண்ணியெண்ணி மீண் டும் அதன் சிற்றின்பத்தையே வேட்டையாடினேன். பேரின்பத்திற்கு வழி தெரியவில்லை"—"அன்பனே ! மனது நிரம்ப இத்தனை எண்ணக்குழாங்களை நிரப் பினையே ! பரமசுகமான ஒரு கடவுள் உன் உள்ளத்தி லேயே உள்ளாரே—ஆன்மாவாக. அவரைக் காண முயன்றாயா?"-"அந்தப் பேச்சேது ? கடவுளைக்காணப் போகிறேன் என்றால் வீட்டில் உப்பில்லை புளியில்லை ; பிள்ளைக்குச் சம்பளம், பெண்ணுக்குச் சித்தாடை, மாப்பிள்ளைக்கு வரதட்சிணை, கிட்டுவுக்குப் பூணல், பட்டுவுக்குச் சாந்தி" என்று உலகமாயை வலைபோட்டு இழுக்கிறதே யொழிய விட்ட வழியாகக் காணோமே ! "உமது விலங்கை நீர் தானே அடித்து மாட்டிக்கொண் டீர்?"—"ஆமாம் ஐயா நானே மாட்டிக் கொண்டேன். அதுவும் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டது.ஜன்மக் கைதியாக மாயச்சிறையில் அடைபட்டு முழிக்கிறேன்" என்று அரைக்கணம் வருந்தி மீண்டும் அதே சிறையை வைகுண்டமென நினைக்கும் மாந்தர் மயக்கத்தை என் சொல்வது ? வாழ்வுக் குடிசையில் மாயப் பாம்பு விளை யாடுகிறது. கடவுளன்பென்னும் குழலூதி அதைப் பிடித்து வெளியே கொண்டுபோய் விடவேண்டும். "அக்கக்க, ராம ராம, ரங்க ரங்க, சுந்தரேசா !"என்று

கிளி கொஞ்சுகிறது; பூனை வந்தால் "கீச் கீச் கீச்!" என்று தனக்கு இயல்பான குரலெடுக்கிறது. உலக மாந்தர் அறிவைப் பேசுகின்றனர்; காரியம் வரும் போது பின்வாங்குகின்றனர். ஒரு பணக்காரன்; கொஞ்சம் சித்தாந்தம் படித்தவன்; "வாழ்வாவது மாயம், மண்ணாவது திண்ணம்" என்றெல்லாம் பேசுவான்; தினம் சிவன் கோவிலுக்குப் போய் சிவானந்த லஹரி பாடுவான்; தேவாரம் பொழிவான்; வெகு நேரம் கோவிலைவிட்டு நகரமாட்டான். "சிவனே என்னை இப்படியே ஐக்கியம் செய்து கொள்!" என்று கூவுவான்; நடிப்பான். கோயில் பட்டருக்கு இது சங்கடமாயிருந்தது. இவர் ஆடிப் பாடிக் கும்பிட்டுப் போக மணி பதினொன்றானது. ஒரு நாள் கோவில் அரவமடங்கித் தனித்திருந்தது. "அரனே சிவனே அம்பலவாணனே என்னை ஐக்கியம் செய்து கொள். மாணிக்க வாசகர், அப்பர், நந்தனார் போன்று என்னையும் உனது சோதியில் இதோ மறைத்து விடு" என்றெல்லாம் பேசினான். சிவன் மனம் இரங்கிற்று. "அன்பனே இங்கே வா. இனி வீட்டிற்குத் திரும்பிப் போகாமல் உடனே உன்னை ஐக்கியம் செய்து கொள்ளுகிறேன்!" என்று மூலஸ்தானத்திலிருந்து ஒரு ஒலி பிறந்தது. ஆசாமிக்குக் கிலி பிறந்தது. "அப்பாடி ஐக்கியம்போதும்! கல்லுச் சாமி பேசாதென்றல்லவோ சொன்னேன். ஐக்கியமாம்! வீடு திரும்பாது ஐக்கியமாம்! என் பெண்சாதி பிள்ளை, வட்டிக்கடை, மளிகை வியாபாரம் கோர்ட்டு விவகாரம், காணியாட்சி எல்லாம் விட்டுவிடுவேனோ! சீ இங்கே அரை நொடி நிற்கக் கூடாது" என்று ஆள் ஒரே மூச்சில் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தான். லிங்கத்

திற்குப் பின் ஒளிந்திருந்த பூசாரியும் வெளியே வந்தார். அத்தோடு கோவில் சரி.

இப்படியிருக்கிறது உலகின் இயல்பு. ஆசையாணவச் சூளையில் மனிதன் வெந்து இறுகி மனமாயக் கட்குடமாயிருக்கிறான். ஏழை 'இல்லையே' என்றழுகிறான். பணக்காரன் 'இன்னுமில்லையே' என்றழுகிறான். கல்லுக் கணபதி குழக்கட்டை சாப்பிட ஆரம்பித்தால் நிவேத்தியம் மண்ணுதான்! அலெக்சாந்தர் முன்னே ஒரு திருடன் கைதியாகக் கொண்டு வரப்பட்டான். "பொல்லாப் பயலே, நீ அநியாயமாக அந்த வீட்டில் 50 ரூபா திருடினாய்; இந்தக்குடிசையில் தீ வைத்தாய்; அடுத்த ஊரில் கொள்ளை யடித்தாய்; நீ பெருந் திருடன்" என்றான் அலெக்சாந்தர். "நான் ஒரு வீட்டில் சிறு தொகை திருடினேன். நீர் நாடு நாடாக நுழைந்து ஆட்களை வெட்டிக் குத்திக் கொன்று பெட்டி பெட்டியாகப் பணமும் பொருளும் கொள்ளையடிக்கிறீரே! நான் ஒரு வீட்டைக் கொளுத்தினேன்; நீர் ஊர் ஊராகக் கொளுத்தி வருகிறீர். நான் சிலருக்குப் புண்ணிழைத்தேன். நீர் போர் வெறியால் கண்ணிழந்து ஆட்களை லட்சக் கணக்கில் கொன்று குவிக்கிறீரே! என்னால் இரண்டொரு வீடுகளுக்கு அபாயம்; தேவரீரால் உலகிற் கெல்லாம் பயங்கரச் சனி பிடித்தாட்டுகிறதே! நான் என் பசியினால் திருடுகிறேன். சமூகம் இரத்த வெறியால், உலகையே கொள்ளை யடிக்கிறீர். நீரே பெரிய திருடன்; பெரிய கொள்ளைக்காரன். என்னைத் தண்டிக்கு முன் உம்மையே தண்டித்துக் கொள்ளவேண்டும்" என்றான். இப்படி மேலே பார்க்கப் பார்க்க உலகமாயம் சித்தப்பனுக்குப் பெத்தப்பனாக வளர்ந்து கொண்டே போகிறது. மஹா

ராஜா "ஒரு காசு" என்று பாட்டுப் பாடிக் கேட்கிறான் பக்கிரி. "ஆண்டவனே! எனக்கு மலை மலையாகத் தங்கக் கட்டி தா. என் எதிரியை நிர்மூலமாக்கு. உலகை எனக்கு அடிமையாக்கு. உனக்கு அடுத்தபடி உலகில் நான் தான் அதிகாரியாயிருக்கும்படி அருள். உனக்கொரு கோவில் கட்டுகிறேன். திருக்கல்யாணம் செய்கிறேன்" என்கிறான் பேராசை பிடித்த அரசன். "அரசு என்றால் யான்" (State-it is I) என்றது 14-வது லூயியின் அகங் காரம். "ஞானியே உனக்கு வேண்டியதைக் கேள் தரு கிறேன்" என்றான் அலெக்சாந்தர். "அப்பனே! எனக் கும் சூரியனுக்கும் குறுக்கே நில்லாதே; போ" என்றான் தொட்டிச் சாமியான தயாஜெனிஸ். இந்த ஞானி பக லில் விளக்குப் பிடித்துச் செல்வான். "ஏனிந்தப் பைத் தியம்?" "ஐயா நான் மனிதனைத் தேடுகிறேன். அகப் படவில்லை" என்றான். ஸொக்ராத்தன் தன் சிறிய குடி லில் நெடுநாளாக ஒரு நாற்காலி போட்டிருந்தான். அதைப் பற்றி இறுதிக் காலத்தில் சீடர் கேட்டனர். "நண்பருக்காக அந்த நாற்காலியைப் போட்டிருந்தேன். அதில் உட்கார ஒரு நண்பனுமில்லை; இறுதி மட்டும் எனது நாற்காலி காலியாகவே யிருக்கிறது" என்றான். உலகில் நட்பும், அன்பும், உண்மை யுள்ளமும், மிக மிக அரிது. ஆணவ மாயம் எங்கும் தாண் டவமாடுகிறது. சிறிது அதிகாரம் வந்தால் ஆட் களை ஏறி மிதிக்கத் தொடங்கித் தானும் முடிவில் மிதி பட்டிறக்கிறான் மனிதன். எவ்வளவோ ஞான நூல் களைக் கேட்கிறான்; கற்கிறான். எல்லாம் உவர் நிலத் திற்குப் போட்ட உரம்போல் பயன்படாது போகிறது. சொரியச் சொரிய சொகுசு; பின்னாலே மேகப் புண், வலி, அரிப்பு விடுகிறதா! மேகப்பற்றுப் போலே

உலகப் பற்று பிடித்துக் கொள்கிறது! பணம் சேர்க்கிறான் ; புதைக்கிறான்; மறக்கிறான்; இறக்கிறான். பிள்ளைகள் பங்குச் சண்டை போட்டு மண்டை உடைகின்றனர். தட்டில்லாது வரங்கொடுத்தால் "கடவுளே தொட்டதெல்லாம் தங்கமாக வேண்டு"மென்று வரம் கேட்கிறது மனிதனிடமுள்ள மதாசு (Midas).

---

## 55. உண்மைச் சுடர் வணக்கம்

அன்பனே! வணக்கம் என்பது மனத்தை வணக்குவது. எதற்கு ? உள்ளத்தில் உள்ளவாறு உண்மையறிவின்பவொளியாக விளங்கும் பரம்பொருளுக்கு ; உள்ளம் அதுவே ; உலகம் அதுவே. உள் வணக்கம் தியானம் ; புறவணக்கம் வழிபாடு. வழிபாடு என்பது ஆன்மாவாகிய அந்தப் பரம்பொருளை யுள்ளேயுணர்ந்து வாழ்வை அதன் வழிப்படுத்தல், (வழி + பாடு). வாழ்வை அதன் வழிப்படுத்தலாவது, அதன் விரிவாக, அதன் காட்சியில், அதன் இன்பம் இன்னதென்றறிந்து மற்றைப் பொய் போலியின்பங்களைத் துறந்து அனைத்திலும் அந்த ஆன்ம வொருமையே கண்டு அன்பு, அருள், அறிவு, அமைதிசேர வாழுவது. இத்தகைய வாழ்வைத் தியானத்தினால் பெறலாம். தியானம் என்றால் எண்ணல், நினைத்தல், சிந்தித்தல். எதை எண்ணுவது ? எப்படி நினைப்பது ? எப்படி வழுத்துவது ? எப்படி வழிபடுவது ? என்று நீ கேட்கிறாய். சொல்கிறேன்.

அருமைக் குழந்தாய்!உள்ளது ஒன்று.அதை ப்ரம்மம், சிவம், பரம், விஷ்ணு, அல்லா என்று பலவாக உலகோர்வழிபடுவர். தங்கள் மனங்கொண்டபடி தங்கள்

தங்கள் ஊகத்திற்கும், நினைப்பிற்கும் எட்டிய பெயர் வடிவுகளைப் பலவாகப்பெருக்கி ஒரு பொருளைத் தனித் தனியாக, பலவாக வணங்குகின்றனர் உலகோர். அதை ஆணென்பர், பெண்ணென்பர், மாயியென்பர், மாயை யென்பர், சிவம், சக்தி, ஒன்று, இரண்டு, பல, ஒன்று மில்லை, நிறைசூனியம், உண்டு இல்லை என உலகில் வழக்காடிப் பொழுது போக்குவர். அன்பனே!உள்ளது ஒரு உண்மைப் பொருளே. அது சுத்தம், அமலம், பூர ணம், நிறைவு, ஆதி, அனாதி, அவிகாரம், சுயஞ்சோதி ; அது மனமொழிக்கெட்டாதது;அதுஅறிவாக உன்னுள் உள்ளது; எங்கே? உள்ளத்தில். நான் செய்தேன்; என் னையா சொல்லுகிறாய்? எனும்போது உன் வலதுகையை எங்கே வைக்கிறாயோ அங்கேயே உனது அறிவான்மா, உனது தெய்வத்தன்மை கொழுந்தெரிகிறது. அங்கே நினை. அன்பனே ! நீ அதை அறியலாம். அக்கடவுளின் அருளை சக்தியென்பர். அந்த அருளாலேயே இறைவன் எங்கும் உள்ளான்; எல்லாம் புரிகிறான். அனைத்திற்கும் சாட்சியாக விளங்கும் மோனமணி விளக்கான இந்தச் சூரி யனைப்பார். இவ்வுலகு முழுதும் ஆண்டவன் வடிவென நினை. இவ்வுலகுடலுக்கு ஆன்மா கதிரவன். கதிரவன் உதித்ததும் அவன் சந்நிதி மாத்திரத்தில் தாமரை இதழ் விரிகிறது ; உலகம் விழித்தெழுகின்றது. உல கோர் பல தொழில் பயில்கின்றனர். கடல் ஆவியாகி, மேகமாகி மழை பொழிகிறது; பயிர் விளைகிறது; உயிர் கள் அதையுண்டு பிழைக்கின்றன. அதுபோல உண் மைப் பரம்பொருளின் முன்னிலைக்கே எல்லாம் நடக் கும்—ஐந்து தொழிலும் நடக்கும். கதிர் + அவன் = கதிரவன். அவன் ஸத், நிலை பொருள், சர்வ சாட்சி, உண்மை; அவனது கதிரே எங்கும் பரவி, எல்லாமியற்

றுகிறது. அவனொளி அக்கதிர்களால் எங்கும் ஒளிர்கின்றது ; அவன் கனல் அக்கதிர்களின் மூலம் கனலுகின்றது. அதுபோலேயப்பா, ஆண்டவன் நிலையாக, தானே தானாக உள்ளான் ; அவனருள் (அருட் பெருஞ்சுடர்) எங்கும் பரவி அனைத்தையும் மென்மேலும் வளர்த்து அறிவாகநிறைந்து அண்டங்களை ஆக்கி, அளித்து, அடக்கித் தோற்றுவிக்கிறது. அறிந்தாயா? மற்றொருதாரணம்; இப் பொத்தானை (Switch) அமுக்கியதும் பளிச்சென இந்த மின் விளக்கு எரிகிறதே. ஜடமான, ஒளியற்ற இந்தக் கண்ணாடிக் குமிழில் (BULB) ஒளி எப்படி வந்தது ? மின் சக்தியால். எதினின்று ? மின் பொறி (Dyanamo) யினின்று. மின்பொறி ஸத்து. அது, அவன், பரம் பொருள் ; அதன் மின்ஸாரக்கனல் சக்தி. அது பல கம்பிகள் மூலம் விளக்குகளாகவும் மணிகளாகவும், ஒலி பரப்பியாகவும், மின் அச்சாகவும், படக் காட்சியாகவும், மின்வண்டியாகவும் பலவிதமாக விளையாடுகின்றது. காண்கிறாயல்லவா ? இப்படிப் பலவானது எது ? ஒரு சக்தி ; எதனின்று ? நின்று நிலைத்த ஒரு சக்திப் பொறியினின்று. அப்பனே! இது தூலமான மின்ஸாரம். வானத்தில் பளிச்சென்று மேகத்தைப் பிளந்து ஒரு மின்னல் வெட்டுகிறதே ; அதனின்று இந்த சக்தி உண்டானது. நாம் சக்தியென வணங்குவது இதற்கு மேற்பட்டது. இதைத் தனியாக உனக்கு விளக்குகிறேன். இறைவன் சுத்தன் ; அவன் அருளாற்றல் சக்தி.

இப்போது உள்ளது உண்மை என்றறி ; அது தனது அறிவால், அருளால் எங்கும் நிறைந்து இன்பமாகப் பலவகைத் தோற்றங்களாக உலகில் விளையாடு

கின்றது. அப்பொருளுக்குப் பல பெயர், பல வடிவு கள். அதைச் சுற்றிப் பல சமய நெறிகள், கொள்கை கள், உண்டு,—இல்லை—ஒன்று—இரண்டு—மூன்று—பல—எனது—உனது எனும் வாதங்கள், கோயில்கள், திருவிழாக்கள், கூத்துகள் எல்லாம் நடமாடுகின்றன ! இவையெல்லாம் உண்மைப் பொருளினின்று வெகு தூரம் விலகியவை. இந்த விளக்கைப் பார் ; அசையா திருக்கிறது. அதைச் சுற்றிச் சிலர் கூத்தாடுகின்றனர்; பாடுகின்றனர்; படிக்கின்றனர்; வீண் வாதாடுகின்றனர்; சூதாடுகின்றனர் ; சண்டை போடுகின்றனர். எனில் விளக்கு எதிலாயினும் கலக்கிறதா, வாதாடுகிறதா, சண்டை போடுகிறதா ? இல்லை. தானே தானகத் தாக்கற்று அது ஒளிர்கின்றது. அது போலவே பரம் பொருள் ஒவ்வொருவருள்ளத்தும் கோயில் கொண்டுள் ளது. அது அறிவாயுள்ளது.

என்னுள் உள்ளதெனில் நான் ஏன் அறியமுடிய வில்லை என்கிறாய் ? அன்பனே! உள்ளத்தை ஒரு கதவு மூடிக்கொண்டு மறைக்கிறது. அக் கதவைத் திறக்க வேண்டும். விளக்கைக் கண்ணாடி லாந்தலில் வைத் தால் சுற்றும் தெளிவாக ஒளிர்கின்றது. இரும்புக் கதவுகள் போட்ட லாந்தலில் வைத்தால் ஒளி ஊடுருவி நிலவுமா ? மாட்டாது. அதுபோல உனது அறிவுப் பொருள் சுற்றும் மனமயக்கத்தால், அச்சம், ஆசை, ஆணவம், வெகுளி, கலக்கம், பற்று முதலிய பல அடைப்புகளால் சூழப்பட்டுள்ளது. அவற்றை நீக்க வேண்டும். தேங்காயைத் தடிப்பான நார்—மட்டை மூடிக்கொண்டிருப்பது போல உள்ள பொருளைக் கள்ள

மனமாயை கவர்ந்து கொண்டுள்ளது. ஐயனே! ஐயம் வேண்டாம். இவ்விரும்புக் கதவுகளைத் தகர்க்கலாம்; நாருரித்து ஓட்டை யுடைத்துக் தேங்காயுண்ணலாம். வழியென்ன என்கிறாய். நாளைச் சொல்லுகிறேன்.

---

## 56. சுத்த சக்தி

இறைவன் சுத்தன்; அவனிடம் இணைபிரியாத அருளாற்றல் சக்தி; ஆதலினே சுத்த சக்தி என்று நான் அப்பரம்பொருளைக் கூறுகிறேன். அது சிவசக்தி; உண்மையறிவு, கதிர்+அவன்; உண்மை அறிவு, இன்பம், அமைதி, எல்லாம் "சுத்தம்" என்ற பொருளில் அடங்கும். எல்லா மதத்தினரும் வணங்கும் தெய்வமும் சுத்தன். ரஸூல் சுத்தன்; பரமபிதா சுத்தன், சுத்த மனத்தில் ஒளிர்பவன்; சிவன் சுத்தன்; புத்தன் சுத்தன். அவனது அருள் வல்லபம், ஆணை, ஆற்றலே சக்தி—ஓம் சுத்த சக்தி. [ஓம்=அ+உ+ம்=அறிவு+உண்மை+இன்பம். உண்மை அறிவு இன்பப்பொருள் சுத்த சக்தி] இப்பொருள் ஒன்றிஞென்று இணைபிரியாது கலந்தது. பால் சுத்தன், வெண்மையும் சுவையும் சக்தி; அனல் சுத்தன், சூடும், தணலும் சக்தி; ஆகாயம் சுத்தன், காற்று சக்தி. இப்படி ஒன்றாகக் கலந்து எங்கும் நிலவி நிறைந்த சுத்தசக்தியை எப்போதும் உள்ளக் கோயிலில் நினை. அன்பனே மனக் கதவு திறக்கும்.

இந்த உண்மையறிவுப் பொருளையே கணக்கற்ற சமயங்கள் தனியுணர்வுடன் வணங்குகின்றன. அவரவர் அறிவு முதிர்ச்சிக்கேற்றபடி சங்கம், கோஷ்டி, நூல், கோயில், ஆசார அனுஷ்டானங்களை ஏற்படுத்திக்

கொண்டுள்ளனர். இவற்றை ஏற்படுத்திய அறிவாளி களும் அருட்புலவர்களும் நன்னோக்கத்துடனேயே தங் கள் கொள்கைகளை உலக வொற்றுமையின் பொருட்டு உரைத்துச் சென்றனர். அவர்களுக்குப் பின் மனித மதி, கொள்கைகளைச் சுற்றித் தன்னல மதவாதக் கோட்டைகளை எழுப்பியது. அச்சத்தாலும், ஆசையா லும், பழக்கத்தாலுமே பெரும்பாலும் மக்கள் இச்சாதி சமய சாத்திர கோத்திரக் காட்டில் இன்னும் கண் கெட் டலைகின்றனர். பாவாடைக் கருப்பன் முதல், பரம் பொருள் மட்டும் எத்தனை தெய்வங்கள் ! விதவித வடி வங்கள், பெயர்கள், பூசை முறைகள்—நெற்றியிலும், கழுத்திலும் எத்தனை புனை வேடங்கள் ! இவை யெல் லாம் கொள்வோர் கொள்ளட்டும். அப்பனே! நீ எவரை யும் பழியாதே. நம்பிக்கையோடு எவன் எதை வழி படினும் அதுவாக அவனுக்கு ஆண்டவன் அருளு வான். பெரும்பாலும் மக்கள் வரத்திற்காக வழிபடுவர்; நீ பரத்திற்காக வழிபடு. மக்கள் புவிச் செல்வத்திற் காக வழிபடுவர் ; நீ சிவச் செல்வத்திற்காக வழிபடு. மக்கள் பொறியுணர்வாற் காண்பர் ; நீ அறிவுணர்வால் காண் ; அன்பனே! ஆழநிறைந்த உண்மையறிவுக் கடல் மேல் எழும் அலைகளிற் பொங்கும் நுரைகளே இப் புற வேறுபாடுகள்.

---

# 57. தேகி

உள்ளத்தைக் கோயிலாக்கு; உண்மையறி வின்ப மான சுத்த சக்தியை அதில் வணங்கு; பாவும் பூவும் சாற்றி வணங்கலாம். அதனினும் அன்பும், ஆர்வமும் கொண்டு வணங்கு; நாவினும் மனம் ஆயிரம் மடங்கு வலிவுள்ளது; அதனினும் உள்ளம் பன்மடங்கு; அதனினும் உன்னுதது அறிவா யடங்குவது கோடி மடங்கு வலிவுள்ளது. ஆனால் எடுத்தவுடன் சுத்தான்மாவை யறிந்துணர்ந்து அதுவாக அடங்கல் மிகமிக அரிது. அதன்பால் மனத்தைப் பயிற்றவே அருட்பெருஞ் சோதிப் புலவர்மணிகள் உருவழிபாடு, பாவழிபாடு, சரியை, கிரியை, யோகம், ஞானம், இயமம், நியமம், ஆஸனம், ப்ராணாயாமம், ப்ரத்யாகாரம், தியானம், தாரணை, ஸமாதி என்று பல படிகள் ஏற்படுத்திச் சென்றனர். நமதுமுன்னோர்கள் மக்களைப்பக்குவப்படுத்தஅருட்பாக்களும், ஆலயங்களும், அறநூல்களும், அடியார் கூட்டங்களும் ஆக்கிச் சென்றனர். எல்லாம் நலமே; ஆலயங்களில் ஒரு சுத்த சக்தியையே பலவாக வணங்கினர். அழகு, அன்பு, இன்பம், அறிவு, யோகம், அருள், இளமை, தீரம் முதலிய கடவுட் குணங்களை உருவாகச் செய்து நம்மவர் சுந்தரி, சுந்தரேசன், கண்ணன், கிருபாநாதர், சிவன், சிவகாமி, ஞானம்பிகை, யோகாம்பிகை, முருகன் என்று பல பெயர் வடிவுகளுடன் வணங்கினர். ஆனால் இவை பெரும்பாலும் எஞ்சாமி, உஞ்சாமி, எனது பெரிது, உனது சிறிது, சாமி கண்ணைக் கெடுக்கும், மதியைக் கெடுக்கும் என்று வேற்றுமையும், அச்சமும், ஒருவிதமான மூட மதப் பிடிவாதமும் விளைவித்து இத்தத்துவ வடிவங்களின் கருவான உண்மையை மறைத்து நிற்கின்றன.

சோமநாதனை முகம்மது கஜினி சம்மட்டியா லடித்து உடைக்கும்போது கலகலவென்று பொன்னும் மணியும் கொட்டின. அனைத்தையும் அள்ளிச் சென்றான் கஜினி. சோமநாதனாவது சிவன். சிவன் எங்கே? எங்குமுள்ளான். சோமநாத விக்ரகத்தைக் கும்பிடும் போது எதைக் கும்பிடுகிறார்? பொன்னையா? கல்லையா? இல்லை. சோமம் என்பது வேதத்தில் அமுதக் கடவுள். எல்லாருக்கும் இன்பமளிப்போன்; அத்தகைய பரம் பொருளை மனமடக்கி நினைக்க ஒரு குறியாக உருவில் அமைத்தனர் மேலோர். சிவலிங்கத்தை வழிபடுகின்றனர்; அதற்கு விநோதப் பொருளைச் சிலர் வழங்கிக் கேலி செய்கின்றனர். நீ அவர்களுடன் சேராதே. இலிங்கம் என்பது உன் உள்ளத்திலுள்ள ஆன்ம வடிவு. அதன் ஆவடை சக்தி, அருள் ஆதாரம். உள்ளம் ஆவடை; ஆன்மா சிவம் எனக் கருது. சிவலிங்கத்தை வணங்குகையில் நீட்டிவைத்த கல்லையா வணங்குகிறாய்? இல்லை. கல்லிலும் புல்லிலும், எதிலும் எங்குமுள்ளவனை வணங்குகிறாய். ஆதலால் வணக்கம் எதற்கு? ஆன்மதேவதைக்கு; சுத்த சக்திக்கு. நிலைத்த பிரமன் சுத்தன்; ஆடும் பிரமம் சக்தி. அன்பனே! ஒரு உதாரணம் பார்; இதோ நான் உள்ளேன்; என்னிடம் நீ அன்பு செய்கிறாய்; என்னிடம் உனக்கொரு பற்றுள்ளது; உண்மைதானே? என்னிடம் என்றால் எதனிடம்? என் + இடம் எது? நீ யார்? இதோ இந்த உடல் தனது வினையாட்டம் ஒழிந்ததும் மறைந்துவிடும்; அல்லது விழுந்துபடும். அப்போது அந்தப் பிணவுடலைப் பற்றுவாயா? விரும்புவாயா? அதைக் குழிதோண்டிப் புதைத்துவிடுவாய். ஆதலால் நீ விரும்புவது இச்சிறிய மெல்லுடலல்லவே; பின்னே எதைவிரும்புகிறாய்? என்னை.

நான் யார்? இந்த பூத உடலுள் ஒரு நுண்ணுடல் ஒரு நுட்பமான உடல் உள்ளது; அதுவே அந்தக்கரணம். அதனுள் ஒரு உடல் உள்ளது; அதுவே உள்ளம். அதனுள் என் + இடம்—நான் - ஆன்மா - சுத்தான்மா ஆனந்தமாக இருக்கிறேன். அதன் அருளறிவால் ஏதோ உனக்கொரு ஆறுதலளிக்கிறேன். அதனால் நீ விரும்புகிறாய். நீ யார்? உடலா உயிரா? முன்னுரைத்தது போலவே நீ ஒரு ஆன்மா. இதுவும் அதுவும் உள்ளே உண்மையறிவு; ஒன்று; அது உன்னிடத்தில் அன்பாக எழுந்து, என்னிடமுள்ள அன்பறிவை நேசிக்கிறது. இதுதான் ஆன்மநேய வொருமைப்பாடு. ஆதலால் பெயர் வடிவுகளை வணங்குகையில் அவற்றுள்ளே கோயில் கொண்டிலங்கும் சுத்த சக்தியைக் கருதி வணங்கவேண்டும். நாளாக நாளாக உனக்கே அவ்வறிவு எழுந்து பிறகு அனைத்தையும் தன் மயமாகக் காண்பாய். இந்த அறிவு மனவாக்கிற் கெட்டாதது. அன்பு, ஆர்வம், அடைக்கலம், பணிவு, அருட்பணி, அச்சமின்மை, மறவா நினைப்பு, துணிவு, தூய்மை, இனிமை, அடக்கம், அறம், அறிவாராய்ச்சி, நல்லோர் கூட்டம், பெரியோர் வணக்கம் இவற்றால் இவ்வறிவு நாளடைவில் துளிர்க்கும்.

நினைப்பிற்கேற்ற நிறைவு. மனம் போல மங்கலம். ஆதலால் எப்போதும் உன்னை ஒரு நடமாடும் கோயிலாகவே நினை; அதன் மூலஸ்தானம் உள்ளம்; அதில் சுத்த சக்தி சிவசக்தி, ப்ரம்ம சக்தி (எப்பெயர்கொண்டு அழைத்தாலும் சரி) யாகிய ஒரு உண்மையறிவு நின்று நிலவுவதாகக் கருது; அதன்பால் அதையே வேண்டு; இவ்வாறு அதை உள்ளே கருது.

---

## 58. தியான மலர்கள்

(க) எனது உள்ளத்தில் கோயில் கொண்ட ஒருவனே, உலகெலாம் நிறைந்த அருள் முதல்வனே! உயிருக்குயிராய், அறிவிற்கறிவாய், அன்பிற்கன்பாய், எங்கும் விளங்கும் இறைவனே! பரமனே! எனதுமனத் திரையை நீக்கி உனது சந்நிதியைத் துலக்கு! ஓம்சுத்த சக்தி ஓம்!

(உ) அருளால் அனைத்தையும் ஆக்கித் தாக்கற்றிருக்குந் தனி முதலே! உன்னுடன் ஒளியும் கனலும், கனியும் சுவையும், மதியும் நிலவும்போல இணைபிரியாது கலந்த நினது சக்திக்கு வணக்கம்! ஓம் சுத்த சக்தி! உனது ஆணை, அருள் வல்லபி, சிற்சக்திக்கு வணக்கம்! இவ்வுலகம் நினது அருளான சக்தி விளக்கம். அதில் அருள் வடிவாக எங்கும் நிலவுகின்றனை. அம்மை யப்பனே! இக் குழந்தைக்கு நினது உண்மை யறிவின்பத்தைத் துலக்கு. ஓம் சுத்த சக்தி ஓம்!

(ந) நீயே எனது தந்தை; நீயே எனது தாய்; நீயே எனது ஆசான்; நான் உனது அருட்குழந்தை. சக்தி முதல்வனே, உன்னை உன்னருளாற் கண்டு, உன்னறிவாகி, உன்னோடு ஈரறக் கலக்க அல்லும் பகலும் ஆர்வமுற்றலமருகின்றேன். ஞானப்பாலளித்து என்னை நினது ஞானசம்பந்தனுக்கு. ஓம் சுத்த சக்தி ஓம்!

(ச) நிலைபெருமானே, எங்கும் நிறைபெருமானே! எனது ஆவிக்கிறைவனே! உனக்கும் எனக்குமிடையே தடையாக மறைக்கும் பாசத் திரையை விலக்கி, உனது அருட்சுடரை விளக்கு. அப்பனே! அறியாக் குழந்தை, அறியாமையிலுழலும் பேதை, யானே உன்னை அறியக்

கடவேன்? தந்தையே! உன்னருளாலேயே உன்னை யறியமுடியும்; வாய்மனங் கடந்த தூயனே! பெயர் வடிவான பேதங் கடந்த பெரியனே! பலவாகிய உலகிற்கு ஒருமுதலாய் நிற்கும் அருட் பெருமானே! தானே அனைத்துமாகி எதிலும் தாக்கற நிற்கும் தனி முதலே! நின்னை எவ்வாறு நினைவேன்? மொழிகளாற் புனைவேன்? உன்னருளிச்சைக்கு என்னை முற்றும் அளிக்கின்றேன். எம்பெருமானே! நீ என்னுள் உயிர்; ஆதலினே உயிர்க்கின்றேன்; விண், வெளி, தீ, நீர் மண்ணுலான இப்பூத பௌதிகச் சட்டையணிந்து நடமாடும் பொதுநடத்தரசே! எனது உள்ளமாகிய சிற்சபையில், அம்பலத்தில், தகராகாசத்தில், "நான் நான்" என்று திருநடம் புரியும் அம்பலக் கூத்தனே, நீ என்னுள் நடமாடுகிறாய்; ஆதலாலே நான் உலகில் நடமாடுகிறேன்! என்னை உன்பால் மேன்மேலும் நடத்து. ஓம் சுத்த சக்தி! ஓம் சுத்த சக்தி!

(ரு) எம் பெருமானே! எல்லாம் நீ யறிவாய்; என் குறை நிறைகளை நீ யறிவாய்; உன் கழலடியில் என்னை மீளா வாளாய் வைத்துப் பணிகின்றேன். நான் உனது நிவேதனம்; என்னைஏற்று உனதருளிச்சையை நடத்து. எல்லாம் வல்லவனே! புல்லவனாகிய யான் உன்னைக் கேட்பதென்ன வுள்ளது? இந்தப் புல்லிய நாவாற் சொல்லியோ நீ யறியவேண்டும்! வாய் மனங் கடந்த தூயனே! சுத்த சக்தியே! உனது இச்சை நடக்கட்டும்; எனது உடல், உயிர், மனம், உள்ளம், வினை, நினைப்பு, அசைவு, ஊண், உறக்கம், கற்பு, கேள்வி எல்லாம் உனக்கு அர்ப்பணம்! அறிவுத் தந்தையே! அருட் கொழுந்தே! நான் உறங்கும்போதும் என்னுள்ளே

உறங்காத நாயகனே! என் வாழ்விற்கரசே! உன்னடி தஞ்சம், தஞ்சம், தஞ்சம். ஓம் சுத்த சக்தி !

(சு) வானும், இவ்வுலகும், உயிரும் உண்டாவதற்கு முன்னே நீயே இருந்தாய் ; நீயே இவ்வுலகுயிரானுய் ! ஒரு வினையும் இல்லாது எல்லாம் இயற்றும் தொழிலாளியே! உனது அகண்டத் தொழிற்சாலையான இவ்வுலகில் உனது அருட்பணியை எனக்குத் தா. அதற்கேற்ற அருட்சக்தியளி ; உன்னிச்சை என்னை இயக்கட்டும். உன்னின்பத்தினின்று எல்லாம் பிறந்து உன்னின்பத்தில் எல்லாம் உறைந்து, உன்னின்பத்தில் எல்லாம் மறைந்து உன்னின்பமாக எல்லாம் இயங்குகின்றன. உலகம் உனது சக்தி விலாசம் ; உனது இன்பச் சிற்சபை ; நீ ஆருயிர் மேனியன்! உனது அருட்சுடர்ப் பொறிகளே எல்லையற்ற நீல வானொளித் திரள்கள் ; அவ்வானப் பந்தல் மேவிய இந்த அகண்ட வுலகரங்கத்தில் நீ பலகோடியுயிர்களாக அருள் நடம் புரிகின்றனை. என்னுள் உன் ஞானநடத்தை விளக்கு! ஓம் சுத்தசக்தி!

(எ) அப்பனே! கல் முதல் கடவுள் மட்டும் நின் சேதனசக்தி, சிற்சக்தி பரவி நிறைந்து விளையாடுகிறது. கல்லில்உறங்கிப் புல்லில்துளிர்த்து, விலங்கில் உயிர்த்து, மனிதனில்நினைத்து,சடமாகி, உயிராகி, மனமாக நினது சிற்சக்தி விஞ்ஞான சச்சிதானந்த வுணர்விற்கு எம்மை நடத்துகிறது. நின்னுறவால் நின்னருளால் நின்னுடன் ஈரறக் கலக்கும் யோகத்தால் இச்சித்தறிவு விரைவாக முதிர்ந்து எம்மை எமது இயல்பாகிய உன் மயத்திற்கு, உன்னுண்மை யறிவின்பத்திற்கு உயர்த்துக. அகண்ட யோகேசனே ! என் அந்தக் கரணம் உனது பொற் கோயிலாகுக ! யோகத்தில் உன்னோடொன்றி இம்மன வுயிர், உன் அறிவின்பமாக மாறுக !

(அ) சர்வ சுதந்திரனே ! இடங்காலம், வினைகளிற் கட்டுப்பட்ட இம்மானதனே உன்னை யறியவல்லான்? என்றுமுள்ளவனே ! நான் பிறப்பதன் முன், நீ யிருந் தாய்; இவ்வுலகின்முன் நீ யிருந்தாய் ; வினையுட லெடுப் பதன்முன் நீ நானுயிருந்தாய்! எழுத்திலும் பேச்சிலும் நினைப்பிலும் யார் உன்னை யடக்க முடியும் ? துரியனே ! பெரியனே! உன்னையார் பெயர் வடிவாற் குறிக்கமுடியும்? கண்டேன் என்பவன் காணுதான் ; காணேன் என்ப வன் கண்டான். உரையும் உளமும், ஒடுங்கிய மோனத் தில் உன்னருளொளி நிலவுகிறது. நித்தியனே ! என் னுளம் உனது இன்ப அரியணை. அதில் - நீ - அரசன் - வீற்றிருக்கிருய் ! உனது திருமலரடியில் ஒரு மெல்லிய அன்பு மலராக என்னை வைக்கிறேன் ! என் ஆர்வ வண்டு அவ்வன்பு மலரைச் சுற்றி நின்னிசையை முரல் கின்றது. ஓம் சுத்த சக்தி !

(கூ) அம்மையப்பனே ! இவ்வாழ்வு உனக்கு நிவே தனம். ஐயனே ! எந்த மந்திரம், எந்தத் தோத்திரம் சொல்லி நிவேதித்து வழிபடுவேன்—ஐயே ! யான் எழுத்தறியேன், சொல்லறியேன், பொருளறியேன், யாப்பறியேன், அணியறியேன் ! யான் கல்லாதவன், கேளாதவன், மனத்தை வெல்லாதவன், உன். புகழ் சொல்லாதவன், உன் வழி நில்லாதவன், பொல்லாத வன் ! ஆனல் உன்னையன்றி எத்துணையும் இல்லாதவன். ஏழை, கோழை, மோழை, ஆனல் உன்னடி வாழும் ஊழியன். ஐயனே என் மழலைச் சொல்லால் உன்னு டன் பேசுகிறேன்:—ஓம் சுத்த சக்தி !

(க0) கடலாவி மழையாகி மழைநீர் கடலுக்கே வந்து சேருகிறது; உன்னினெழுந்த இவ்வுடலாவி உன் னருளாகி யறிவாகி மீண்டும் உன்னையே ஈரறக் கலக்க

வருள். அருட்பெருஞ் ஜோதி முதல்வனே! ஒவ்வொரு வான மீனும் உன் புன்னகையால் தளுக்கிடுகிறது. உல கன்னையை அணியுறுத்தும் நாண் மலர்களில் உன் அழகு புன்னகைக்கிறது! காற்றில் உன் இச்சையே வீசுகிறது; உன் இன்பமே மரங்களில் பொன்னும் கெம்புமாகக் கனிகின்றது; உன் மாண்பே வானையும் மண்ணையும் அளக்கும் மலைகளாக நிற்கின்றன. நின் கருணையே தெள்ளாறுகளாகப் பாய்ந்து நிலமகளுக்கு மரகதப் பசு வளமளிக்கிறது. ஐயனே! நினது விழிக ளன்றோ இரவி - மதியாயின. அறிவின்பனே! உன்னை அணுவணுவிலும் என் உள்ளமும் விழிகளும் காண்க! ஓம் சுத்த சக்தி!

(கக) மூச்சினும் நீ இன்றியமையாதவன்; உனது கையின்றி எது செய்யும்? இயற்கை வனப்புகளெல்லாம் உனது கைத்திறல் விளக்கம்; எங்கும் நிறைவே! காணு மிடந்தோறும் உன்விழி என்னைக் காண்கிறது; வான கத்தில் உனது நெற்றிக் கண்ணைத் திறந்து நிலவுகிறாய்; அந்த அறிவொளியாலே சுற்றிலும் உனது பெரு மையை அறிகிறோம். எம்முளத்தில் உன்னையறிவித்து அணைத்தருள்.

(கஉ) என்னுயிர்க் காதலனே, நீயின்றி நினைப் பில்லை, செயலில்லை! என்னுள்ளிருந்து என் காதலைத் தூண்டுகிறாய்! அக்காதற் கனலை நீயே என்னையணைந்து தணிக்கிறாய். நீயே முறை செய்கிறாய்; நீயே எம்முறை யைக் கேட்கிறாய்; நீயே அளிக்கிறாய். அருட்சுடரே! ஞானப் பொதுநடத்தரசே! உண்மையறிவின்ப விண் ணரசே! என்னுள்ளிலகும் பொன்னம்பலக் கூத்தனே! உனது உலகமன்றில், உனது திருவிளையாடலிற்கூட உன்னாணையின் கருவியாக இங்கு வணங்கி நிற்கும் அடி

யேனுக்கு உன்னையே எங்கும் இலக்கு ; எல்லாம் உன் மயமாகக் காணவருள். என் மனமுடல் உரையில் உறைந்து உன்னையே நினைக்க அருள் ; உன் பணியே புரியவருள், உன்னிசையே பாட அருள். என் உரை யடக்கி உள்ளந்திற; மனத்திரை யடக்கிச் சித்துணர்வை அமைதியிலறிவித்தருள் ; என் புற விழிகளை மூடி உள் விழி திறந்தருள். ஓம் சுத்த சக்தி !

(கரு) எல்லாம் வல்லவனே ! என்முறையீடுகளைக் கேட்டருள் : என் மூச்சு உன் அருட்பணியாகுக ; என் பேச்சு உன் அருண் மொழியாகுக ; என் உள்ளம் சித்தத் திரையடங்கிக் காலையின் அழகிய தெளிவுடன் உன்னமைதியொளி பெறுக ; உள்ளத் தாமரையில் உனது அன்புத் தேன் பொங்குக ; உச்சித்தாமரையில் உனது அறிவொளி நிலவுக ; என்னை யுன்னுளும், உன்னையென்னுளும் வைத்த இன்பக் கலப்பால் உன்னையே எங்குங் கண்டு பணிய வருள். என்னின்று, நின்னின்று பிரித்தெண்ணாது எல்லார்க்கும் அன்பு செய்ய அருள். தூய்மை, வாய்மை, ஒருப்பாடு, ஆற்றல், அருளழகு, அருளின்பம், அளவற்ற அன்பு, பெரியார் நட்பு, பொறுமை, களிப்பு, தன்னறிவு, அச்சமின்மை, சுதந்திரம் இவையே யான் உன்னை வேண்டும் செல்வம். வாழ்வை நற்பணியில் உய்வி. ஒவ்வொருவருக்கும் ஒரு பணிதந்துள்ளாய். இத்தமிழ்ப் பணி எனக்களித்தாய். அதைத் தவமாகப் புரிந்து வெற்றியோ டியற்ற அருள். அப்பனே ! வறுமையும் மடமையும் வாழ்வின்பத்தை விழுங்கும் கவந்தக் கரங்கள். அவை அணுகா தொழிக! உடை, உணவு, மனை முதலிய தேவைகளைப் பிழையற்ற தொழிலால் போதியமட்டும் அடைந்து, இல்லையென்ற கவலையும், இருக்குதென்னும் செருக்கும் இல்லாதிருக்க

அருள். தோன்றாத் துணையே! இச்சிறு தோணி உன தொளியை நாடியூர்கிறது. அதைத் துறை சேர்த்தருள். உனது வெற்றித் துணை எமது உண்மை முயற்சிகளுக் காகுக! உன் அருள் வழிக! உன் அன்பமுதம் பொழிக! உன் அறிவு வளம் செழிக! இருளொழிக; இன்பம் எழுக! ஓம் சுத்த சக்தி.

(கச) அறிவுக்கூத்தனே! நீயே என்னுள் அறிவிற் கறிவு; நீ விளக்குப்போல என்னுள்ளத் தொளிருகின் றாய்; நீயே ஜீவசாட்சி; தீபசாட்சி. உண்மை விளக்கே! உன்னொளி வழியே யான் செல்லுகிறேன்; வேறு வழி யறியேன்; உன்னொளியே என் விழி. உன்னுண்மை என்னை நடத்தட்டும். உலகின் வழியில் நான் செல்லேன்; உன்னுண்மை வழியே நாடிச் செல்கிறேன். என்னப்பனே! என்னகந்தையை முற்றும் உண்டுவிடு; "நான்" உன்னருளுக்கு ஊணாகி நீயாகுக. எவ்விதப் போலித்தனமுமின்றி, புறவேடங்களின்றி குழந்தை போலத் தெளிந்த, வஞ்சமற்ற, கரவற்ற, தீதற்ற நெஞ் சுடன் உன் உண்மைச்சுடர் வழிநின்று வழிபடுகிறேன். என்னையனே! என்னை மற்றோர் அறியாமையினால் வையப்பேசி, கேலிசெய்து, சுளிக்கச் சொல்லி, என்னைப் பற்றி என் சுற்றத்தாரே, என் நண்பர்போல் நடிப்ப வரே, புறங்கூறி, சதிசெய்து தீமை விளைவித்தாலும், என்றும் அன்பும் உண்மையும் தூய்மையுமான நீ ஒரு வன் இருப்பதையெண்ணி மனங் கலங்காதிருக்க அருள். உன்னினும் வேறெவரை நம்புவது? அம்மையப்பனே! ஆசை, சூது, பொறாமை, சுயநலம், பொய், வஞ்சகம், ஏமாற்றம், திருட்டு உருட்டுகள், கொலை, வீண்வம்புகள், காமவெறிகள் தாண்டவமாடும் வீரியத்தினவு பிடித்த உலக மாயையினின்று பிரித்து எப்போதும் என்னை

உன்னன்பில், உன்னுணர்வில், உன்னின்பத்தில், உன்னடியார் கூட்டத்தில் வைத்துக்காப்பாற்று. ஓம் சுத்த சக்தி !

(கரு) எல்லாம் அறிந்தவனே! என் குறைகளை உன்னிடம் மனதாறச் சொல்லுகிறேன்; நீயே என்னைக் காப்பாய், குறைநீப்பாய், அருள் பூப்பாய் ! நீயிலங்கும் இவ்வூன்கோயில் பிணிமலிந்துள்ளது ; என்னை ஊணிலும், உறக்கிலும், பிணியிலும், துயரிலும் தளைத்து இடர்ப்படுத்துகிறது ; உனது அருளொளியால் இதன் மாசுகளை நீக்கி இதைப் பொன்னுடலாய், பூந்துருத்தியாய், பிரணவ சரீரமாய் மாற்றிப் பளிங்குபோலாக்கு. உனது ஆத்மப் பிரகாசம் இவ்வுடலிலும் பொலிக ; என்னுயிர்க் காதலனே ! இவ்வுயிர்க் கோசம் எப்போதும் வண்டுபோலத் துருதுருத்துக் கண்ட விடமெல்லாம் அலைகின்றது. ஆசை, பாசம், பகை, அசூயை, சினவெறி, பொறாமை, கோள், காமம், மயக்கம்ஆகிய அரக்கர் உறவை நாடிக் கெடுகின்றது. இவ்வுயிர் உனது மூச்சு ; அது உனக்காகுக ; உன்னிச்சை நிறைவேறவே அது உயிர்த்திடுக! இது உன்னுணர்விலேயே என்றும் வாழ அருள் ! இது உன்னுயிர்ப்பாகுக ; உனது அருளமுதை இதற்கு ஊட்டி இது என்றும் உனக்காகவே உயிர்க்கஅருள்! அறிவிற்கறிவே! இம்மனம் கள்ளுண்டு, முள்ளுண்டு, பேயுண்ட குரங்குபோலத் துள்ளிக் குதிக்கிறதே ! இதற்கு எவ்வளவு ஆணவம், திமிர், நான் எனும் செருக்கு. என்னப்பனே ! இம்மனத்தை உன்னடியில் வைத்தேன். அதன் ஆணவச் செருக்கைநீக்கி, அதன் ஆசை மடமை யழுக்குகளைப் போக்கித் துரிசு நீக்கி உன்முகம் அதில் எப்போதும் ஒளிரும் கண்ணுடியாக்கு ; இந்த உள்ளத்தில் கோயில் கொண்டவனே !

என்னை உனது உண்மையறிவின்பத்திற்கு உயர்த்து ; உன்னருள் என்னுட் பொழிக ! உன்னருளொளியால் எனது உச்சியம்புயத்திலிலங்கும் விண்ணரசு ஒளிர்க. அவ்விண்ணரசின் விஞ்ஞானக் கதவைத்திறந்து நீ வீற்றிருக்கும் இன்பமான தங்கக்கோயிலுட் புகுந்து உனது சிற்சக்தியோடு அறிவுண்மையாக வீற்றிருக்கும் உனது காட்சியைக் கண்டு உன்னுண்மை யறிவொளி நிறைவாகி, உன்னருட் சுடராகி, என் வாழ்வை அவ்வருளின்ப விளக்காக்கி, அவ்வின்ப விளக்கு உலகொளியாக நிலவச் செய். உன்னறிவுண்மை விளக்குகளான அருட்சோதி அடியார் கூட்டத்திலேயே எப்போதும் யான் இருக்கச்செய். சுற்றுலகின் மாற்றங்களையும், மாயங்களையும், வஞ்சங்களையும், இன்னல்களையும் நான் கண்டு கலங்காதிருக்கச் செய். உன்னின்பம், உன்னன்பு, உன் காட்சி, உன்னிறைவிலேயே என் புலன்களும், மனமும், உயிரும், உடலும், உளமும், அறிவும் தோய்க ! என்னால் எல்லா வுயிர்களுக்கும்—நீ நடமாடும் கோயில்களான எல்லா உயிர்களுக்கும்—இன்புறச் செய் !

இன்பமே, அறிவே, உண்மையே, ஒளியே, வணக்கம் ! சுத்தனே வணக்கம் ! சுத்தமே வணக்கம் ! சுத்தரே வணக்கம் !

உண்மைச் சுடரொளியிற் பூத்த அறிவே வணக்கம் ! அருளே வணக்கம் ! பரம்பொருளே வணக்கம் !

ஓம் சுத்த சக்தி !

திருநூல் அல்லது தூயவாழ்வு முற்றிற்று



# அன்பு நிலய நூல்கள்

(சுவாமி சுத்தானந்த பாரதியார் இயற்றியவை)

| | | | ரூ. | அ. |
|---|---|---|---|---|
| 1. | பைந்தமிழ்ச்சோலை | ... | 0 | 4 |
| 2. | இராமலிங்க விஜயம் | ... | 0 | 10 |
| 3. | இன்பமாலை (2-ம் பதிப்பு) | ... | 0 | 5 |
| 4. | தருமஸாதனம் | ... | 0 | 4 |
| 5. | பொதுநெறி | ... | 0 | 1 |
| 6. | இன்று மனிதனும் இனிவரும் மனிதனும் | ... | 0 | 2 |
| 7. | திருக்குறளின்பம் (ராப்பர்) | ... | 1 | 4 |
| | ,, (காலிகா) | ... | 2 | 0 |
| 8. | உடலுறுதி (படங்களுடன்) | ... | 1 | 0 |
| 9. | வரகவிதாகூர் | ... | 0 | 3 |
| 10. | அப்பரின் அன்பு வெற்றி (நாடகம்) | ... | 0 | 10 |
| 11. | புதுமையும் பழமையும் (நாடகம்) | ... | 0 | 8 |
| 12. | திருநூல் - தூயவாழ்வு | ... | 1 | 0 |
| 13. | தியானமாலை | ... | 1 | 4 |
| 14. | ஏழைபடும்பாடு (நாவல்) (அச்சில்) | ... | 1 | 4 |
| 15. | யோகசித்தி (அச்சில்) | ... | 1 | 0 |
| 16. | பரமஹம்ஸ லீலை | ... | 2 | 8 |
| 17. | ரமணவிஜயம் | ... | 2 | 0 |
| 18. | பெரியார் வரலாறு | ... | 2 | 0 |
| 19. | பாரதி விளக்கம் | ... | 0 | 4 |
| 20. | நாடகக்கலை விளக்கம் | ... | 0 | 2 |
| 21. | கீதைகாட்டும் பாதை | ... | 0 | 10 |
| 22. | பாரத சக்தி | ... | 1 | 8 |
| 23. | அரவிந்தப் பிரகாசம் | ... | 0 | 12 |
| 24. | புதுயுகப்பாட்டு | ... | 0 | 5 |
| 25. | The Yoga of Sri Aurobindo | ... | 2 | 0 |
| 26. | Mahatma Ramalingam | ... | 1 | 0 |
| 27. | அருளமுதம் (அச்சில்) | ... | 2 | 0 |
| 28. | தமிழுணர்ச்சி ,, | ... | 1 | 0 |

## கிடைக்குமிடங்கள்

1. A. R. அண்ணாமலை,
   அன்பு நிலயம், இராமச்சந்திரபுரம்,
   (திருச்சி ஜில்லா)

2. S. நடராஜன்,
   காரியதரிசி, அன்பு நிலயம், திருமயம்,
   (திருச்சி ஜில்லா)

3. ஜனமித்திரன், புதுக்கோட்டை.

4. சைவ சித்தாந்தக் கழகம்,
   திருநெல்வேலி, சென்னை.

5. பாரதிப்பிரசுராலயம், திருவல்லிக்கேணி, சென்னை.

6. பாரதசக்தி நிலயம், புதுச்சேரி.

7. திரு. M. நடராஜஞ் செட்டியார்,
   47, மார்கெட் தெரு, சிங்கப்பூர்.

8. பாரதி பிக்சர் பாலஸ்,
   கல்லுக்கட்டி, காரைக்குடி.

9. Sjt. Rama Subbiah,
   No. 116/117, Keyker St., Colombo.

10. E. M. கோபாலகிருஷ்ணக் கோனார்,
    புதுமண்டபம், மதுரை.